9 அரம்பைமென் குறங்கா மாவி னவிர்தளிர் நிறமாத் தெங்கின்
குரும்பைவெம் முலையா வஞ்சிக் கொடியிடை நுகப்பாக் கூந்தல்
சுரும்பவிழ் குழலாக் கஞ்சஞ் சுடர்பதி முகமாக் கொண்டு
நிரம்பிநீள் கைதை வேலி நெய்தல்சூழ் காவில் வைகி.

10 பன்மலர் மாலைவேய்ந்து பானுமைப் போர்வை போர்த்துத்
தென்மலைத் தேய்ந்த சாந்த மான்மதச் சேறு பூசிப்
பொன்மணி யாரந் தாங்கிப் பொருநையாங் கன்னி முந்நீர்த்
தன்மகிழ் கிழவனகந் தழீஇக்கொடு கலந்த தன்றே.

11 வல்லைதா யிருபால் வைகுஞ் சிறையை மருங்கு மீண்டி
முல்லையா னைந்துந் தேனுந் திரைக்கையான் முகந்துவீசி
நல்லமான் மதஞ்சாந் தப்பி நறுவிரை மலர்தூய் நீத்தப்
செல்லலாற் பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள் போலும்.

12 அரும்பவிழ் முனங்க ளாளி யலைதர வாகம் பொன் போர்த்
திரங்கிவா லன்ன மேந்தி யிருகையுஞ் சங்குஞ் சிந்தி
மருங்குசூழ் காஞ்சி தள்ளி வரம்பிற வொழுகும் வாரி
பரம்பரற் கையம் பெய்யும் பார்ப்பன மகளிர் போலும்.

13 வரைபடு மணியும் பொன்னும் வைரமும் குழையும் பூட்டி
அறைபடு மகிழுஞ் சாந்து மப்பியின் னமுத மூட்டிக்
கரைபடு மருத மென்னுங் கன்னியைப் பருவ நோக்கித்
திரைபடு பொருநை நற்றாய் செவிலிபோல் வளர்க்கு மாதோ.

14 மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கும்
நிறைபர மென்றும் பூதி சாதன நெறியீ டென்றும்
அறைகுவ தறிந்துந் தேறா தறிவெனக் கலங்கி யந்த
முறையின்வீ டுணர்ந்தோர் போலத் தெளிந்தது மூரி வெள்ளம்.

15 மறைவழி கிளைத்த வெண்ணெண் கலைகள்போல் வருநீர் வெள்ளந்
துறைவழி யொழுகும் பல்கால் சோலைதண் பழனஞ் செய்தேன்
உறைவழி யோடை யெங்கு மோடிமன் றுடையார்க் கன்பர்
நிறைவழி யாத வுள்ளத் தன்புபோ னிரம்பிற் றன்றே.

[கலிநிலைத்துறை]

16 இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படில் தூயவாய்க் களங்கம்
ஒழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தெழிலி
பொழிந்த நீரமு தாயின புவிக்கும்வா னவர்க்கும்

17 ஈறி லாதவ னொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீ ரொன்றே
ஆறுகால் குளங் கூவல்குண் டகழ்கிடங் கெனப்பேர்
மாறி யீறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ.

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

18 களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்
குளமகிழ் சிறாரி னேறு மொருத்தலு முவகைதூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
அளமரு பொறிபோ லேவ லாற்றவாள் வினையின் மூண்டார்.

19 பலநிற மணிகோத் தென்னப் பன்னிற வேறுபூட்டி
அலமுக இரும்பு தேய ஆள்வினைக் கருங்கான் மள்ளர்
நிலமகள் உடலங் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச்
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்றே.

20 ஊறுசெய் படைவாய் தேய உழுநரு நீர்கால் யாத்துச்
சேறுசெய் நருந் தெய்வந் தொழுதுநீஞ் செந்நெல் வீசி.
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி வளம்படுக் குநரு மானார்.

21 பழிபடு நறவுந் தன்னைக் கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்தெழ முறுவ ரூன்ற
விழிசிவந் துழலக் கூந்தன் மென்றுகில் சோர வுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவ ரொத்த தன்றே.

22 பட்பகை யாகுந் தீஞ்சொற் கடைசியர் பவளச்
செவ்வாய்க்
குட்பகை யாம்ப லென்று மொண்ணறுங் குவளை நீலங்
கட்பகை யாகுமென்றுங் கமலநன் முகத்துக் கென்றுந்
திட்பகை யாகுமென்றுஞ் செறுதல்போற் களைதல்
செய்வார்.

23 கடைசியர் முகமுங் காலுங் கைகளுங் கமலமென்னார்
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுத
மென்னார்
அடையவுங் களைந்தார் மள்ளர் பகைஞரா யிருந்த
வெல்லை
உடையவனுணை யாற்ற லொறுப்பவர்க் குறவுண்
டாமோ.

24 புரையற வுணர்ந்தோர் நூலின் பொருளினுள் ளடங்கி
யந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு
தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போ லிறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போ லொசிந்த
நன்றே.

25 அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந்
தொண்டர்க்
கின்புரு வான ஈசனின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி.

26 அகனில வேறுபாட்டி னியல்செவ்வி யறிந்து மள்ளர்
தகவினை முயற்சி செய்யக் காமநூல் சாற்று நான்கு
வகைநலார் பண்பு செவ்வி யறிந்துசேர் மைந்தர்க்
கின்பம்
மிகவிளை போகம் போன்று விளைந்தன பைங்கூ
ழெல்லாம்.

27 கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை
வாங்கி
முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமலநீலம்
அடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தீ
டாக்கி
நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்
போர் செய்தார்.

28 கற்றைவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித்
தெய்வம்
அற்றவர்க் கற்ற வாறீந் தளவைகண் டாற லொன்று
கொற்றவர் கடமை கொள்ளப் பண்டியில் கொடு
போய்த் தென்னு
டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி
யுண்பார்.

29 சாறடு கட்டி யெள்ளுச் சாமைகொள் ளிறுங்கு
தோரை
ஆறிடு மதலால் யானைப் பழுக்குலை யவரை யேனல்
வேறுபல் பயறோ டின்ன புன்னில விளைவு மற்றும்
ஏறொடு பண்டி யேற்றி யிருநிலங் கிழிய வுய்ப்பார்.

30 துறவின ரீசனேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
திறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
உறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யும்
அறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார்.

31 நிச்சலு மீசனன்பர் நெறிப்படிற் சிரார்மேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
அச்சமுங் கொண்டு கூசி யடிபணிந் தினிய கூறி
இச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார்.

32 நறைபடு கனிதேன் பெய்த பாலொடு நறுநெய் வெள்ளம்
நிறைபடு செம்பொன் வண்ணப் புழுக்கலா னிமிர்ந்த சோறு
குறைவற வுண்டு வேண்டும் பொருள்களுங் கொண்மி னென்ன
மறைமுத லடியார் தம்மை வழிமறித் தருத்து வார்கள்.

33 பின்னெவ னுரைப்ப தந்தப் பெருந்தமிழ் நாடாங் கன்னி
தன்னிடை யூர்க ளென்னு மவயவந் தாங்கச் செய்த
பொன்னியற் கலனே கோயின் மடமறப் புறநீர்ச் சாலை
இன்னமு தருத்து சாலை யெனவுருத் திரிந்த தம்மா.

## திணைமயக்கம்

[கலிநிலைத்துறை]

34 இன்ற டம்புனல் வேலிசூ ழிங்கில வரைப்பில்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கும்
மன்ற வுள்ளமுந் நுனைநிற்க மயங்கிய மரபின்
ஒன்றொ டொன்றுபோய் மயங்கிய திணைவகை
யுரைப்பாம்.

35 கொல்லை யானிரை மேய்பவர் கொழிணர்க்
குருந்தின்
ஒல்லை தாயநிழ படர்கறிக் கருந்துணை ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்திழை சிற்றில்
எல்லை யாயமோ டாடுப வெயின்சிறு மகளிர்.

36 கன்றொ டுங்கனி வண்டுவாய் நக்கவீங் கரும்பு
மென்று பொன்சொரி வேங்கைவா யுறங்குவ மேதி
குன்றி னந்தினை மேய்ந்துபூங் கொழுநிழன் மருதஞ்
சென்று றங்குவ சேவக மெனமுறச் செவிமா.

37 மாற்று தெண்டிரை யெறிவளை யெயிற்றிய ரிழைத்த
சிற்றில் வாய்நுழைந் தழிப்பவச் சிறுமியர் வெகுண்டு
பற்றி னாரெனச் சிதறிய மணவணி பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப.

38 முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றிப்பின் பயில்வன மருதங்
கொல்லை யான்மடி யெறிந்திளங் குழவியென் றிரங்கி
மல்லை யூற்றுபால் வெள்ளத்து ளுகள்வன வாளை.

39 கரும்பொற் கோட்டுளம் புன்னைவாய்க் கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செயக் கொன்றை பொன்சொரிவ
அருந்த டங்கடல் வளையெடுத் தாழியான் கையில்
இருந்த சங்கென இறைகொளப் பூவைமே லெறிவ.

40 சுழிந்த கெங்கிளெண் பழம்படி இ முட்டபலாக் கனிகீண்
டழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் ததற்றுவ வுவரை
வழிந்த தேன்படற் கேதகை மலர்நிழல் குருகென்
றொழிந்த தாமரைப் போதுபுக் கொளிப்பன கெண்டை.

41 ஆறு சூழ்கழிப் புளைம்பொரு ககைசந்துகூன் கைதை
சோறு கால்வன ஆம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறுவா ரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறுவா ரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

42 தள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவொடு மருந்தக்
கள்ளு மாறவும் கூனலங் காய்தினை யவரை
கொள்ளு மாறவுங் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்னல்
எள்ளு மாறவு மளப்பன இடைக்கிடை முத்தம்.

43 அவமி கும்புலப் பகைகடந் தாயிர்க்கெலா மன்பாம்
நவமி குங்குடை நிழற்றிமெய்ச் செய்ய கோ னடாத்திச்
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து
தவமி ருந்தர சாள்வது தண்டமிழ்ப் பொதியம்.

44 வான யாறுதோய்த் துயரிய மலையமே முக்கண்
ஞான நாயக னம்மலை போர்த்தகார் நால்வாய்
யானை யீருரி யம்மழை யசும்புதன் புண்ணீர்
கூனல் வான்சிலை குருதிதோய் கோடி போன் றன்றே.

45 சுனைய கன்கரைச் சூழல்வாய்ச் சுருர்புருழ் கிடப்ப
நனைய விழ்ந்தசெ ங்காந்தண்மே லுகிள வேங்கைச்
சினைய விழ்ந்தவீ கிடப்பபொன் தோய் கலைத்
தெண்ணீர்
அனைய பொன்சுடு நெருப்பொடு கரியிருந் தனைய.

46 குண்டு நீர்ப்படு குவளைவாய்க் கொழுஞ்சினை மரவம்
வண்டு கூப்பிடச் செம்மறாய்ப் புதுமது வார்ப்ப
அண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந் தாலெய்
மொண்டு வாக்கிமுத் தீவினை முடிப்பவ ரனைய.

47 அகிலு மாரமுந் தழன்மடுத் தகழ்ந்தெறிந் தழல்கால்
துகிரு மாரமுந் தொட்டெறிந் தைவனந் தூவிப்
புகரின் மால்கரி மருப்பினுல் வேலிகள் போக்கி
இகலில் வான்பயி ரோம்புவ எயினர்தஞ் சீறூர்.

48 அண்ட வாணருக் கின்னமு தருத்துவோர் வேள்விக்
குண்ட வாரழற் கொழுப்புகை கோலுமக் குன்றில்
புண்ட வாதவே விறவுளர் புனத்தெரி மடுப்ப
உண்ட காரகில் தூமமு மொக்கவே மயங்கும்.

49 கருவி வான்சொரி மணிகளுங் கழைசொரி மணியும்
அருவி கான்றபன் மணிகளு மகன்றலை நாகத்
திரவி கான்றசெம் மணிகளும் புனங்கவ ரினமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்தெறி
கவண்கல்.

50 மாய வன்வடி வாயது வைய மாலுந்திச்
சேய பங்கய மாயது தென்னனா டலர்மேற்
போய மென்பொருட் டாயது பொதியமப் பொருட்டின்
மேய நான்முக னகத்தியன் முத்தமிழ் வேதம்.

51 ஏக மாகிய மேருவும் பொதியமே யிரும்பொன்
ஆக மேருவைச் சூழ்ந்தசாம் பூநத யாறு
நாக ராடுதண் பொருநையே நாவலர் துதித்த
போக பூமியும் பொருநைசூழ் பூமியே போலும்.

52 சிறந்த தண்டமி ழாலவாய் சிவனுல கானாற்
புறந்த யங்கிய நகரெலாம் புரந்தரன் பிரமன்
மறந்த யங்கிய நேமியோ னாதிய வானோர்
அறந்த யங்கிய வுலகுரு வானதே யாகும்.

53 வளைந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்தும்
அளைந்த தெண்டிரைப் பொருநைபோ வந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலும் கன்னலும் வீசுமவ் வாசம்.

54 பொதியி லேவிளை கின்றன சந்தனம் பொதியின்
நதியி லேவிளை கின்றன முத்தமந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமம் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதல் பத்தி.

55 கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந் தாடுவா னாடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

56 விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றோ.

57 கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

58 தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

59 வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுங்குன் றாவாத்
தம்மை மாறியும் புரிவது தருமமந் நாடு.

60 உலகம் யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டஃதன்றிச் சலதி
சுலவு பாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதே.

## இந்திரன்பழி தீர்த்தபடலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

1 மின்பயில்குலிசப்புத்தேள் விருத்திராசுரனைக் கொன்ற
வன்பழி விடாதுபற்றக்கடப்பமா வனத்திலெய்தி
என்பராபரம் பூண்டா னிறைவனையருச்சித்தேத்திப்
பின்பதுகழிந்து பெற்றபேற்றினையெடுத்துச் சொல்வாம்.

2 முன்னதாமுகத்தில் வண்டுமுரல் மந்தாரநீழற்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப்புலோமசை மணாளன் பொற்பூண்
மின்னவிர்ந்திமைப்பச் சிங்கஞ் சுமந்தபொன்னணை மேன்மேவி
அன்னமென்னடையாராடு மாடன்மேலார்வம் வைத்தான்.

3 மூவகை மலரும் பூத்துவண்டிளை முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபோலன்ன பொன்னனார் கூத்து மன்னார்
நாவலரமுதமன்ன பாடலுநாக நாட்டிக்
காவலன் கண்டுகேட்டுக்களிமதுக் கடலுளாழ்ந்தான்.

4 பையரா வணிந்தவேணிப் பகவனே யனையதங்கள்
ஐயனும் வியாழப்புத்தேளாயிடை யடைந்தானைச்
செய்யதாள் வழிபாடின்றித் தேவர்கோனிருந்தா னந்தோ
தையலார் மயலிற்பட்டோர் தமக்கொருமதி யுண்டாமோ.

5 ஒல்லெனக் குரவனேக வும்பர்கோன் றிருவினூக்கம்
புல்லெனச் சிறிதுகுன்றப்புரந்தரனறிந்திக்கேடு
நல்லதொல் குரவற்பேணா நவையினால் விளைந்த தென்னா
அல்லலுற்றறிவன் றன்னைத் தேடுவானாயினானே.

6 அங்கவனிருக்கை புக்கான் கண்டிலனவித்த பாசப்
புங்கவருலகுமேனோர் பதவியும் புவனமூன்றில்
எங்கணுந் துருவிக்காணா னெங்குற்றான் குரவ னென்னுஞ்
சங்கை கொண்மனத்தனாகிச் சதுர்முகனிருக்கை சார்ந்தான்.

7 துருவின னங்குங்காணான் றிசைமுகற் றொழுது தாழ்ந்து
பரவிமுன்பட்டவெல்லாம் பகர்ந்தனன் பகரக்கேட்டுக்
குரவனையிகழ்ந்த பாவங் கொழுந்துபட்டருந்துஞ் செவ்வி
வருவதுநோக்கிச் சூழ்ந்துமலர் மகனிதனைச் சொன்னான்.

8 அனையதொல் குரவற்காணுமளவுநீ துவட்டாவீன்ற
தனையன்முச் சென்னியுள்ளான் றானவர் குலத்தில் வந்தும்
வினையினாலறிவான் மேலான் விச்சுவவுருவ னென்றும்
இனையனைக் குருவாக்கோடி யென்னலுமதற்கு நேர்ந்தான்.

9 அழலவிர்ந்தனைய செங்கேழடுக்கிதழ் முளரி
வாழ்க்கைத்
தொழுதகு செம்மறன்னைத் தொழுது மீண்டகன்று
நீங்கா
விழைதகு காதல்கூர விச்சுவவுருவன் றன்னை
வழிபடு குருவாக்கொண்டான் மலர்மகன் சூழ்ச்சி
தேறான்.

10 கைதவக்குரவன் மாயங் கருதிலன்வேள்வி யொன்று
செய்திடலடிக ளென்னத்தேவர்கட் காக்கங்கூறி
வெய்தழல் வளர்ப்பானுள்ளம் வேறுபட்டவுணர்க்
கெல்லாம்
உய்திற நினைந்துவேட்டான் றனக்குமேனுறுவ
தோரான்.

11 வாக்கினான் மனத்தால் வேறாய் மகஞ்செய்வான்
செயலையாக்கை
நோக்கினா னேதி தன்னானோக்கினான் குலிச வேலால்
தாக்கினான் றலைகண் மூன்றுந் தனித்தனி பறவையாகப்
போக்கினா னலகை வாயிற்புகட்டினான் புலவுச்சோரி.

12 தெற்றெனப் பிரமபாவஞ் சீறிவந்தமரர் வேந்தைப்
பற்றலுமதனைத் தீர்ப்பான் பண்ணவர் பரமேன்
மண்மேற்
பொற்றொடியார் மேனீர்மேல் வேண்டினர் புகுத்த
லோடும்
மற்றவரிசைந்தி யாந்தீர்க்கும் வண்ணம் யாதென்ன
விண்ணோர்.

13 அப்பிடை நுரையாய் மண்ணிலுருவருப்புவராயம் பொற்
செப்பிளங் கொங்கையார் பாற்றீண்டுதற்கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரத்திற்கானும் பயினதாய்க்கழிக வென்றார்
இப்பழி சுமந்தவெங்கட் கென்னலமென்றார் பின்னும்.

(வேறு)

14 கருவின்மாதர் கருவுயிர்க்குமளவு முறையாற் கணவர் தோண்
மருவிவாழ்க மண்ணகழ்ந்த குழியுமதனால் வடிவொழிக
பொருவினீரு மிறைத்தொறு மூறிப்பொலிக மரங் குறைபட்
டொருவினாலுந் தழைகவென வொழியா நலனு முதவினார்.

15 மாசிற்கழிந்த மணியேபோல்வந்த பழிதீர்ந் திந்திரனுந்
தேசிற்றிகழத் துவட்டாதன் செல்வன்றன்னைத் தேவர்பிரான்
வீசிக்குலிசத் துயிருண்ட விழுமங்கேட்டு வெகுண்டு யிர்த்துக்
கூசிப்பழிகோள் கருதியொரு கொடிய வேள்விகடி தமைத்தான்.

16 அந்தக்குண்டத்தெரிசிகை போலழலுங் குஞ்சியண்ட முந்
நிந்தக்கொடிய தூமம்போலுயிர்க்குஞ் செங்கண் சினச் செந்தீச்
சிந்தப்பிறைவா ளெயிறதுக்கித் திசைவான் செவிடு படநகைத்து
வந்தக்கொடிய விடம்போல வெழுந்தானொருவாண் மறவீரன்.

17 சங்குவன் விருத்திர னென்ப வாரழுற்
றூங்குவன் கணைவிடுதூர நீண்டுநீண்
டோங்குவனோங்குதற் கொப்பவைகளும்
வீங்குவனறனிலார் வினையினென்பவே.

18 வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவர்
ஏங்குற வருதுவட்டாவெனும் பெயர்த்
தீங்குறு மனத்தினேன்றவர் கோனுயிர்
வாங்குதி பொருதென வரவிட்டானரோ.

19 மதித்துணி யெயிற்றினேன் வடவைபோற்சினை இக்
கொதித்தெதிர் குறுகினன் கொண்டலூர்தியும்
எதிர்த்தனன் களிற்றின் மேலிமயத்துச்சிமேல்
உதித்ததோர் கருங்கதிரொக்கு மென்னவே.

20 அறத்தொடு பாவநேர்ந்தென்ன வார்த்திரு
திறத்தரு மூண்டமர் செய்யக்கற்சிறை
குறைத்தவன் றகுவன்மேற் குலிசவேலெடுத்
தெறைத்திட வீசினனுடைன்று நள்ளனும்.

21 இடித்தனன் கையிலோரிருப்புலக்கையைப்
பிடித்தனன்வரை யெனப் பெயர்ந்து நிலைத்
துடித்தனன் சசிமுலைச் சுவடுதோய்புயத்
தடித்தன னிந்திர னவசமாயினன்.

22 அண்டரோ ரன்னயவ னவசமாறிப்பின்
கண்டகன் கைதவ நினைந்திக் கள்வனோர்
மண்டம ராற்றுவான் வலியிலோ மெனப்
புண்டரீ கத்தவனுலகிற் போயினன்.

23 தாழ்ந்துதான் படுதுயர் விளம்பத் தாமரை
வாழ்ந்தவன் வலாரியோடணைந்து மாமகள்
வீழ்ந்தமார் பினனடி வீழ்ந்து செப்பமால்
சூழ்ந்துவானுடனை நோக்கிச் சொல்லுவான்.

24 ஆற்றவும் பழையதுன் னங்கைவச்சிரம்
மாற்றவ ருயிருணவலியின் றாதலால்
வேற்றொரு புதியது வேண்டுமாலினிச்
சாற்றுது மதுபெறுந் தகைமை கேட்டியால்.

25 தொடையகன் மார்பநாந்தூய பாற்கடல்
கடையுநா ளசுரருஞ்சுரருங் கையில்வெம்
படையொடு மடையமின் பழுதென்றப் படை
அடையவுந் ததீசிபாலடைவித் தாமரோ.

26 சேட்படு நாணனி செல்லத் தேவரா
வாட்படை யவுணரா வந்துகேட்டிலர்
ஞாட்படை படைபலா ஞான நோக்கினால்
வேட்படை வென்றவன் விழுங்கினனரோ.

27 விழுங்கிய படையெலாம் வேறு றத்திரண்
டொழுங்கிய தான்முதுகந்தண் டொன்றியே
யெழுங்கதிர்க் குலிசமா மதனை யெய்துமுன்
வழங்குவன் கருணையோர் வடிவமாயினன்.

[ஷெடி வேறு]

28 என்று மாதவனியம்ப வும்பர்கோன்
ஒன்றும் வானவர் தம்மோ டொல்லெனச்
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவனிருக்கை மேவினான்.

[ஷெடி வேறு]

29 அகமலர்ந் தருந்தவ னமரர்க் கன்புகூர்
முகமலர்ந் தின்னுரை முகமன் கூறிநீர்
மிகமெலிந் தெய்தினீர் விளைந்த தியாதது
தகமொழிந் திடலென வலாரி சாற்றுவான்.

30 அடிகணீர்மருத தொன்ற தனைவேண்டியிம்
முடிகொள்வா னவரோடு முந்தினேனது
செடிகொள்காரிருளுடை யவுணர்த்தேய்த்தெமர்
குடியெலாம் புரப்பதோர் கொள்கைத் தாயது.

31 யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென்
றோதலும் யாவையுமுணர்ந்த மாதவன்
ஆதவற்கண்ட தாயுரையினானைப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினான்.

32 நாய்நமதென நரிநமதெனப் பிதா
தாய்நமதென நமன்றனதெனப் பிணி
பேய்நமதென மனமதிக்கும் பெற்றிபோல்
ஆய்நமதெனப்படும் யாக்கை யாரதே.

33 விடம்பயி லெயிற்றர வுரியும் வீறுமை
குடம்பையுங் கானெனுங் கொள்கைத் தேகொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்குமைவர் வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ.

34 நடுத்தயா விலார்தமை நலியத் துன்புநோய்
அடுத்தயா வருந்திருவுடைய யாக்கையைக்
கொடுத்தயா வரும்புகழ் கொள்வனே யெனின்
எடுத்தயாக்கையின் பயனிதனின் யாதே.

35 என்றனன் கரமொன்றி யெழுகருத் தறிவையீர்ப்ப
நின்றனன் பிரமநாடி நெறிகொடு கபாலங்கீண்டு
சென்றனன் விமானமேறிச் சேர்ந்தன னுலகை
நோன்பால்
வென்றவன் புறக்காப்புக்கு வீற்றினிதிருந்தானம்மா.

36 அம்முனி வள்ளலீந்த வடிபடை முதுகந்தண்டைத்
தெம்முனையடுபோர்சாய்க்குந் திறல்கெழுகுலிசஞ்
செய்து
கம்மியப் புலனுக்கர் கரைந்ததைக் கொடுப்பவாங்கி
மைம்முகிலூர் தியேந்திமின்விடு மழைபோனின்றான்.

37 மறுத்தவா வஞ்சப்போரால் வஞ்சித்து வென்று
போன
கறுத்தவா னவுணற்கொல்வான் கடும்பரி நெடுந்தேர்
நீழல்
வெறுத்தமால் யானைமன்னர் வேலைபுக்கெழுந்து
குன்றம்
அறுத்தவா னவர்கோ னந்தவவுணர்கோமகனைச்
சூழ்ந்தான்.

38 வானவர்சேனைமண்டு வளைத்தலும் படைவைச்செந்தீ
யானதுவரையிஞ்ஞாங்கி யழன்றுருத்தெழுந்தா
லென்னத்
தானவர் கோனுமானந் தலைக்கொளவெழுந்து
பொங்கிச்
சேனையுந் தானுமண்டி ஏறிநின்றடுபோர் செய்வான்.

39 அடுத்தனரிடியே றென்னவார்த்தன ராக்கங்கூறி
எடுத்தனர் கையிற்சாபமெறிந்தனர் சிறுநாணோசை
தொடுத்தனர் மீளிவாளி தூர்த்தனர் குந்தநேமி
விடுத்தனர் வானோர் சேனைவீரர்மே லவுணவீரர்.

40 கிட்டினர் கடகக்கையாற் கிளர்வரை யனையதிண்
டோள்
சொட்டினர் சாரிமாறிக் குதித்தனர் பலகைநீட்டி
முட்டினரண்டம் விள்ளமுழங்கினர் வடிவாளோச்சி
வெட்டினரவுணர் சேனைவீரரை வானவீரர்.

41 வீழ்ந்தனர் தோளுந்தாளும் விண்டனர் சோரி
வெள்ளத்
தாழ்ந்தனர் பொருந்தாரு மகன்றனயகன்ற மார்பம்
போழ்ந்தனர் சிரங்களெற்குப் புரண்டனர் கூற்றூர்
புக்கு
வாழ்ந்தன ரடுபோராற்றி வஞ்சகன் சேனமள்ளர்.

42 தாளொடு கழலுமற்றார் தலையொடு முடியுமற்றார்
தோளொடு வீரமற்றார் தும்பையோட மருமற்றார்
வாளொடு கரமுமற்றார் மார்பொடு கவசமற்றார்
கோளொடு மாண்மையற்றார் குறைப்படக்குறையா
மெய்யர்.

43 தொக்கன கழுகு சேனஞ் சொரிகுடர் பிடுங்கியீர்ப்ப
உக்கனகுருதி மாந்தியொட்டல்வாய் கெட்டைப்
பேய்கள்
நக்கனபாடல்செய்ய ஞாட்பினுட் கவந்தமாடப்
புக்கனபிணத் தின்குன்றார் புகைத்தபார் சிதைத்த
தண்டம்.

**44** இவ்வகை மயங்கிப்போர்செய் திறந்தவரொழியப் பின்னுங்
கைவகை யடுபோர்செய்து கரையிறந்தார்கண் மாண்டார்
அவ்வகை யறிந்துவானத் தரசனுமவுணர் வேந்துந்
தெய்வதப் படைகள்வீசிச் சீறிநின் றடுபோர் செய்வார்.

**45** அனற்படை விடுத்தான் விண்ணோ ராண்டகையதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச்சீற்றந் தணித்தனன் புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான்வெய்யோன் முழங்குகால் விழுங்குநாகச்
சினப்படை தொடுத்துவீசி விலக்கினான் றேவரஞ்ச.

**46** நாகமாப் படைவிட்டார்த்தா னாகர்கோ னுவணச் செல்வன்
வேகமாப் படையைவீசி விலக்கினான் றகுவர் வேந்தன்
மோகமாப் படையைத்தொட்டு முடுக்கினான் முனைவனன்ன
தேகமாப் படிறன் ஞானப்படைவிடுத் திருள் போனின்றான்.

**47** மட்டிடு தாரான் விட்ட வானவப் படைக்குமாறு
விட்டிடன் விலக்கிவேறும் விடுத்திடக்கனன்று வஞ்சன்
முட்டிடமான வெங்கான் மூட்டிடக்கோபச்செந்தீச்
சுட்டிடப்பொறாது பொங்கிச் சுராதிபனிதனைச் செய்தான்.

48 வீங்கிரு ளொதுங்க மேகமின் விதிர்த்தென்னக் கையில்
ஓங்கிருங் குலிசவேலை யொல்லென விதித்தலோடுந்
தீங்குளம் போன்றி நண்ட திணியுடற்கள்வனஞ்சி
வாங்கிருங்கடலில் வீழ்ந்தான் மறைந்தனைமைந்நாக மொத்தான்.

49 ஒக்கவிந் திரனும் வீழ்ந்தா னுடல் சினவுரு மேறன்னான்
புக்கிடந் தேடிக்காணான் புண்ணியமுனிவரண்ணல்
பக்கம்வந்தனைய னெய்நிபகர்ந்தனன் பதகன்மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னிச் சராசரமீன்ற தாதை.

50 விந்தவெற் படக்கினுற்கி துரையென விடுப்பமீண்டு
சந்தவெற் படைந்தான் வானோர் தலைவனை முகமன் கூறிப்
பந்தவெற் பறுத்தான் வந்தவெனைப் பகைகளெல்லாஞ்
சிந்தவெற் பறுத்தான் வந்தசெயலெல்லா முறையாற் செப்பி.

51 யானையு முணர்ந்த வெங்கைதக்கியா னெடுத்துணர்த்து கின்ற
தானவென் னமருக்காற்றா தாழிபுக்கொளித்தானவ்வீ
வீவதுமவனால் வந்தவி பூமனோயெல்லா மின்று
போவதுங் கருதி நம்பாற் புகுந்தன மடிகளென்றான்.

52 என்றவ னிடுக்கண் டீர்ப்பா னிகல்புரி புலன்க ளைந்தும்
வென்றவ னெடியோன் றன்னை விடையவன் வடிவ மாக்கி
நின்றவ னறிவா னந்த மெய்ம்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவ னூழிச் செந்தீ வடிவினை மனத்துட் கொண்டான்.

53 கைதவன் கரந்துவைக்குங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுந் தெல்லைத் தாக்கிப் பருகினான் பிறைசேர் சென்னி
ஐயன தருளைப் பெற்றார்க் கதிசய மிதென்கொல் மூன்று
வையமுந் தொழிலுஞ் செய்யவல் லவர வரே யன்றோ.

54 அறந்துறந் திட்டுவார்த மரும்பெறற் செல்வம்போல
வறந்தன படிநீர்ப் பௌவ முடைவைகட் புலப் பட்டாங்கு
நிறைந்த செம்மணியு மத்தி நீண்டெரி சிகை போன்று
சிறந்தெழு பவளக்காடுந் திமிரிருள் விழுங்கிற்றம்மா.

55 பணிகளின் மகுட கோடிப் பரப்பொடு விளங்கிப் பல்கா
மணிகளைப் பேழைபோற் றாய் நிறைந்தனைத் தாங்கி யொன்பான்
மணிகிடந் திமைக்கு நீரான் மயபதி வேள்விக்காவாய்த்
திணியுட லவுணன் பட்ட செங்கள மனைய தன்றே.

56 வறந்தநீர் தன்னின்மின்னுவாள் விதிர்த்தென்னப்பன்மீன்
எறிந்தன நெளிந்தநாக மிமைத்தனவளையு முத்துஞ்
செறிந்தன கரந்தயாமை சேர்ந்த பல்பண்டஞ்சிந்தி
முறிந்தன வங்கங் கங்கமுக்கின சிறுமீனெல்லாம்.

57 செருவினி லுடைந்துபோன செங்கண்வா ளவுணனங்கோர்
அருவரைமுதுகிற் கார்போலடைந்துவானுடர் செய்த
உருகெழுபாவந் தானேருருவெடுத் திருந்துநோற்கும்
பரிசெனநோற்று னின்னும் பரிபவவிளைவு பாரான்.

58 கைதவநோன்பு நோற்குங் கள்வனைக்கண்டு வானோர்
செய்தவ மனையான் யானார்வச்சிரஞ் சிரிப்பான்போற்
பொய்தவன் றலையைக்கொய்தான் புணரிவாய்நிறையச்சோரி
பெய்தது வலாரிதன்னைப்பிடித்தது பிரமச்சாயை.

59 உம்மெனு மார்பைத்தட்டு முருத்தெழுமதிர்க்கும்போர்க்கு
வம்மெனும் வாய்மடிக்கும் வாளெயிறதுக்கும் வீழுங்
கொம்மெனவோடிமீளுங் கொதித்தழுஞ் சிரிக்குஞ்சீறும்
இம்மெனுமளவு நீங்காதென் செய்வானஞ்சினானே.

60 விரைந்தரன் றிசையோர் மாவிவீழ்ந்தொரு கமலநாளுட்
கரந்தனன் மகவானிப்பால் கற்பக நாடுபுல்லென்
றிருந்ததாலிருக்குமெல்லையிம்பரி னகுடனென்போன்
அரும்பரிமேத வேள்வியாற்றினு னூற்றுமெல்லை.

61 அரசிலாவறுமை நோக்கியவனை வானுடையாரும்
விரைசெய்தார் மகுடஞ்சூட்டி வேந்தனைக்
கொண்டார் வேந்தாய்
வருபவன்சசியை யீண்டுத்தருகென மருங்குளார்
போய்த்
திரைசெய்நீ ரமுதனாட்குச் செப்பவக்கற்பின்
மிக்காள்.

62 பொன்னுயிர்த் தனையகாட்சிப் புண்ணியக்குரவன்
முன்போய்
மின்னுயிர்த்தனையா ளின்றுவிளம்புவா ளிதென்
கொல்கெட்டேன்.
என்னுயிர்த்துணைவனிங்கே யிருக்கமற்றொருவ
னென்னைத்
தன்னுயிர்த்துணையாக் கொள்கை தருமமோ வடிக
ளென்றாள்.

63 மாதவரெழுவர் தாங்க மாமணிச் சிவிகையூர்ந்து
போதரி னவனே வானோர்புரந்தர னவனே யுன்றன்
காதலனாகுமென்றான் கைதொழுததற்கு நேர்ந்தம்
மேதகு சிறப்பாலிங்கு வருகெனவிடுத்தாளீது.

64 மனிதரின் மகவாகி வருபவன் சிவிகைதாங்கும்
புனிதமாதவரை யெண்ணான் புன்கணேய் விளைவும்
பாரான்
கனிதரு காமந்துய்க்குங் காதலால் விரையச்
செல்வான்
இனித யிராணி பாற் கொண்டேகுமின் சர்ப்பவென்
றான்.

65 சர்ப்பமா கெனமுற்கொம்பு தாங்கிமுன்னடக்குந்
தென்றல்
வெற்பனு முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த
லோடும்
பொற்ப மாசுணமே யாகிப் போயினனறிவிலாத
அற்பரானவர்க்குச் செல்வமல்லது பகை
வேறுண்டோ.

66 பின்னர்த்தங்குரவனை பிரானடி பணிந்துவானோர்
பொன்னகர் வேந்தனின்றிப்புலம் படைகின்றதைய
என்னுங்குரவன் போயவ்விலஞ்சிபு ளொளித்தாற்
கூவித்
தன்னுரையறிந்து போந்தசதமகற்கொண்டு
மீண்டான்.

67 கொடும்பழி கோட்பட்டான்றன்குரவனை வணங்கி
யென்னைச்
சுடும்பழி கழிவதெங்ஙன் சொல்லெனத் தொலைவ
தோர்ந்தான்.
அடும்பழி மண்மேலன்றியருதுநீ வேட்டைக்கென்னப்
படும்பழி யிதனைத்தீர்ப்பான் பார்மிசை வருதி
யென்றான்.

68 ஈசனுக்கிழைத்த குற்றந்தேசிக னெண்ணித் தீர்க்குந்
தேசிகற்கிழைத்த குற்றங்குரவனே தீர்ப்பதன்றிப்
பேசுவதெவனோ தன்பாற்பிழைத்த காரணத்தால்
வந்த
வாசவன்பழியைத் தீர்ப்பான் குரவனே வழியுங்கூற.

69 வாம்பரி யுகைத்துத்தன்னூல் வழிபடுகுரவன் வானோர்
தாம்பரி வோடுஞ்சூழத் தராதலத்திழிந்து செம்பொற்
காம்பரி தோளிபங்கன் கயிலைமால்வரையுந் தாழ்ந்து
தேம்பரி யலங்கன்மார்பன் றென்றிசைநோக்கிச் செல்வான்.

[ ஷை வேறு ]

70 கங்கை முதலாவிறந்த தீர்த்தமெலாம் போய்ப் படிந்துகாசி காஞ்சி
அங்கனக கேதார முதற்பதிகள் பலபணிந்து மனுனற் றொன்ற
பொங்குபழிவிடா தழுங்கியராவுண்ண மாகண்டு பொலிவுமாழ்குந்
திங்களனை யான்கடம்ப வனத்தெல்லை யணித்தாகச் செல்லுமெல்லை.

71 தொடுத்தபழி வேறாகிவிடுத்தகன்ற திந்திரன்றன் சுபாந்தபாரம்.
விடுத்தவனைத் தளவிறந்தமகிழ் வெய்தித்தேசிகன் பால்விளம்பப்பாசங்
கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தமுளவிவணமக்குக் கிடைத்தல்வேண்டும்
அடுத்தறிக வெனச்சிலரை விடுத்தவ் வேறாகிலை நின்றப்பாற்செல்வான்.

72 அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப் பாறையி
லிட்டருவி நீர் தூய்க்
கருவிரல்கொய் தளிர்சூட்டிக்கனியூட்டி வழிபடுவ
கல்லாமந்தி
ஒருதுறையில் யாளிகரிபுழைக்கை முகந்தொன்றற்
சொன்றூட்டியூட்டிப்
பருகுவன புலிமுலைப்பால் புல்வாய்க்கன் றருந்தியிடும்
பசிநோய்தீர.

73 நெளியராக்குருளை வெயில்வெள்ளிடையிற்கிடந்
துயங்கி நெளியப்புள்ளே
றெளியருச்சிறை விரித்துநிழல் பரப்பப்பறவை
நோயுற்ற தேகொல்
அளியவாயச்சோ வென்றேதியயன் மடமந்தியருவி
யூற்றுந்
துளியநீர்வளைத்த கம்பின்முகந்தெடுத்துக் கருங்
கையினாற் சொரிவமாதோ.

74 படவரவ மணியீன்று நொச்சிப்பாசிலையன்ன
பைந்தாண்மஞ்ஞை
பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில் விளக்கிடுவ
பெருந்தண்கானத்
தடர்சிறைமென்குயிலோ மென்றார்ப்பமடக்கிள்ளை
யெழுத்தைந்துமோசைத்
தொடர்புபெற வுச்சரிப்பக்குருமொழி கேட்டாங்
குவப்பத்தொடிக்கட்பூவை.

75 இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய
செயனோக்கி யிறும்பூதெய்திப்
பொன்னகரான் புளகமுடல் புதைப்பநிறை
மகிழ்ச்சியுளம் புதைப்பப்போவான்
அன்னபொழு தொற்றுவர் மீண்டடி வணங்கி
யின்சுவைப்பா லருந்துவான்முன்
பின்னரிய தேன்சொரிந் தாங்குவகைமேற்
பேருவகை பெருகச்சொல்வார்.

76 எப்புவனத் திலுமென்றுங் கண்டறியாவதிசயமு
மெண்ணுக்கெய்தாத்
திப்பியமு மிக்கடம்ப வனத்தின்று கண்டுவகை
திளைத்தேமங்கண்
வைப்பனைய வொருபுனிதவாவிமருங் கொருகடம்ப
வனத்தினீழல்
ஒப்பிலொளி யாய்முளைத்த சிவலிங்கமொன்றுள
தென்றுரைப்பக் கேட்டான்.

77 செவித்தொளையி லமுதொழுக்கு முழையரொடும்
வழிக்கொண்டு சென்னிமேற்கை
குவித்துள்மெய் மொழிகரணங் குணமூன்று
மொன்றித் தன்கொடியபாவம்
அவித்துளயர்வொழிக்க முளைத்தருள்குறிமே
லன்பீர்ப்ப வடைவான்கானங்
கவித்துளபூந் தடம்படிந்து கடம்பவனத்
துழைநுழைந்தான் கவலைதீர்வான்.

78 அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை
யறிவானந்த
உருவாகியளவிறந்த வுயிராகியவ்வுயிர்க் கோருணர்
வாய்ப்பூவின்
மருவாகிச் சராசரங்களகில முந்தன்னிடையுதித்து
மடங்கநின்ற
கருவாகி முளைத்த சிவக்கொழுந்தையா யிரங்கண்ணுங்
களிப்பக்கண்டான்.

79 கண்டுவிழுந் தெழுந்துவிழி துளிப்பவெழுகளிப்
பென்னுங்கடலிலாழ்ந்து
விண்டுமொழி தழுதழுப்ப வுடல்பனிப்பவன் புருவாய்
விண்ணோர்வேந்தன்
அண்டர்பிரா னருச்சனைக்கு வேண்டுமுபகரணமெலா
மகல்வானெய்திக்
கொண்டுவரச்சிலரை விடுத்தவரேகப் பின்னுமொரு
குறைவுதீர்ப்பான்.

80 தங்குடிமைத் தச்சனையோர் விமானமடைத்திட-
விடுத்தத்தடத்தின் பாற்போய்
அங்கணனைக் கடிதருச்சித் திடநறிய மலர்கிடையா
தயர்வானந்தச்
சங்கெறி தண்டிரைத்தடத்தி லரனருளாற் பலபரிதி
சலதியொன்றிற்
பொங்குகதிர் பரப்பிமுளைத் தாலென்னப் பொற்
கமலம் பூப்பக்கண்டான்.

81 அன்புதலைசிறப்ப மகிழ்ந்தாடினான் காரணத்தா
லேதற்குநாமம்
என்பதுபொற்றாமரை யென்றேழுலகம் பொலிகவென
விசைத்துப்பின்னும்
பின்பதுமத் தடங்குடைந்து பொற்கமலர்
கொய்தெடுத்துமீண்டு நீங்காத்
தன்பிணிநோய் தணியமுளைத்தெழுந்த முழுமுதன்
மருந்தின்றல் பால்வந்து.

82 மொய்த்த புனக்காடெறிந்து நிலந்திருத்தி வருமளவின்
முளைத்தஞான
வித்தனைய சிவக்கொழுந்தின் றிருமுடிமேற் பரிதிகர
மெல்லத்தீண்டச்
சித்தநெகிழ்ந் திந்திரன்றன் வெண்கவிகைத் திங்க
ணிழல் செய்வானுள்ளம்
வைத்தனனப் போதிரவிமண்டலம் போலிழிந்த
தொரு மணிவிமானம்.

83 கிரியெட்டு மெனமழையைக் கிழித்தெட்டும் புழைக்
கைமதிக்கீற்றுக் கோட்டுக்
கரியெட்டுஞ் சினமடங்கவெட்டு மெட்டெட்டுக்
கணமுந்தாங்க
விரியெட்டுத் திசைபரப்ப மயனிருமித்துதவியவவ்
விமானஞ்சாத்தி
அரியெட்டுத் திருவுருவப்பரஞ்சுடரை யருச்சிப்
பானாயினனே.

84 முந்தவமருலகடைந்து பூசனைக்குவேண்டுவன
முழுதுந்தேர்வார்
வந்துதருவைந்தீன்ற பொன்னுடை மின்னுமுழுவணிப்
பூண்வாசச்
சந்தனமந் தாகினிமஞ்சனந் தூபந் திருப்பள்ளித்தாமந்
தீபம்
அந்தமிலாவினைக்கு நறுங்கனிதீந்தேன்றிருவமுதமனைத்
துந் தந்தார்.

85 தெய்வத்தாபனை முனோக்கித் தடம்படிந்து பவந்
தொலைக்குந்திரு நீறாடிச்
சைவத்தாழ் வடந்தாங்கி யன்புருவாயருளுருவந்
தாழுய்த்தோன்றும்
பைவைத்தாட மார்க்கா சடபதியை யவனுரைத்த
பனுவலொற்றின்
மெய்வைத்தா தரம்பெருக வருச்சனை செய்தானந்த
வெள்ளத்தாழ்ந்தான்.

86 பாரவட்டாங்க பஞ்சாங்கவிதிமுறை யாற்பணிந்
துள்வாய்மெய்
நேராகச் சூழ்ந்துடலங் கம்பித்துக்கும்பிட்டு நிருத்தஞ்
செய்து
காராருந் தொடைமிதப்ப வானந்தக் கண்ணருவி
ததும்ப நின்றன்
பாராமை மீக்கொள்ளவஞ்சலித்துத் துதிக்கின்றா
னமரர் கோமான்.

[ஷை வேறு]

87 அங்கணாபோற்றி வாய்மையாரணா போற்றிநாக
கங்கணாபோற்றி மூலகாரணா போற்றிநெற்றிச்
செங்கணாபோற்றி யாதிசிவபரஞ்சுடரே போற்றி
எங்கணாயகனேபோற்றி யீறிலாமுதலேபோற்றி.

88 யாவையும்படைப்பாய்போற்றி யாவையுந்துடைப்பாய்போற்றி
யாவையுமானாய்போற்றி யாவையுமல்லாய்போற்றி
யாவையுமறிந்தாய்போற்றி யாவையுமறந்தாய்போற்றி
யாவையும்புணர்ந்தாய்போற்றி யாவையும்பிரிந்தாய்போற்றி.

89 இடருறப்பிணித்த விந்தப்பழியினின் றென்னை யீர்த்துன்
அடியிணைக்கன்பனுக்குமருட்கடல் போற்றிசேற்கண்
மடவரல்மணாளபோற்றி கடம்பமாவனத்தாய் போற்றி
சுடர்விடுவிமானமேய சுந்தரவிடங்கபோற்றி.

90 பூசையும் பூசைக்கேற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசைகொண்டு நியதியிற்பேறு நல்கும்
ஈசனுமாகிபூசை யான்செய்தேனெனு மென்போத
வாசனையதுவுமான மறைமுதலடிகள்போற்றி.

91 என்னநின்றேத்தினானை யின்னகை சிறிதுதோன்ற
முன்னவனடியாரெண்ண முடிப்பவனருட்கணோக்கால்
உன்னது வேட்கையாதிங் குரைமெனவிரையத்
தாழ்ந்து
சென்னிமேற் செங்கைகூப்பித் தேவர்கோனிதனை
வேண்டும்.

92 ஐயநின்னிருக்கை யெல்லைக்கணியனா மளவினீங்கா
வெய்யவென் பழியினோடு மேலைநாளடியேன் செய்த
மையல்வல் வினையுமாய்ந்துன் மலரடிவழுத்திப்பூசை
செய்யவுமுரியனானேன் சிறந்தபேறிதன்மேல்
யாதோ.

93 இன்னநின்பாதப்போதே யிவ்வாறே யென்றும்பூசித்
துன்னடி யாருள்யானுமோரடித் தொண்டனாவேன்
அன்னதேயடியேன் வேண்டத்தக்கதென்றடியில்
வீழ்ந்த
மன்னவன் றனக்குமுக்கண் வரதனுங் கருணைபூத்து.

94 இருதுவிற்சிறந்த வேனிலுமதியாறிரண்டிற்
சிறந்தவான்றகரும்
பொருவிருபகையிற் சிறந்தசித்திரையுந் திதியினிற்
சிறந்தபூரணையும்
மருவுசித்திரையிற் சித்திரைதோறும் வந்து
வந்தருச்சியோர்வருடந்
தெரியுநாண் முந்நூற்றறுபது மைந்துஞ்செய்த
வர்ச்சனைப்பயனெய்தும்.

95 துறக்கநாடணைந்து சுத்தபல்போகந்துய்த் துமேன்
மலைபரிபாகம்
பிறக்கநான் முகன்மான்முதற்பெருந்தேவர் பெரும்
பதத்தாசையும்பிறவும்
மறக்கநாம் வீடெழுங்குறுமென்ன வாய்மலர்ந்தருளி
னான் கருணை
சிறக்கநால் வேதச்சிகைபெறு மனுதிசிவபராஞ்சுடர்
விடைகொடுத்தான்.

96 மூடினான் புளகப்போர்வையால் யாக்கைமுடிமிசை
யஞ்சலிக்கமலஞ்
சூடினான் வீழ்ந்தானெழுந்தா கண்ணருவி நாளும்பினான்
பன்முறைதுதிசெய்
தாடினானைய னடிபிரிவாற்று தஞ்சினானனருளாணை
நாடினான் பிரியாவிடைகொடு துறக்கநண்ணினான்
விண்ணவர்நாதன்.

97 வந்தரமங் கையர்கவரி மருங்குவீச
மந்தாரங் கற்பகம் பூமாரிதூற்ற
அந்தரநாட்டவர் முடிகளடிகள்சூட
வயிராணிமுலைத்தடந்தோய்ந்த கலந்திண்டோள்
விந்தனெனச் செம்மாந்து விம்முகாம
வெள்ளத்துளுடலெழுந்த வுள்ளஞ்சென்று
சுந்தரநாயகன் கருணைவெள்ளத்தாழ்ந்து
தொன்முறையின் முறைசெய்தான் றுறக்க நாடன்.

# ಶೇಕ್ಕಿೞಾರ್

ಇವರು ಸುಮಾರು ಕ್ರಿ. ಶ. ಹನ್ನೆರಡನೆಯ ಶತಮಾನದಲ್ಲಿ ಮದರಾಸಿನ ಸಮೀಪದ ಕುನ್ರತ್ತೂರಿನಲ್ಲಿ ವೇಳಾಳ ಕುಲದಲ್ಲಿ ಶೇಕ್ಕಿೞಾರ್ ವಂಶದಲ್ಲಿ ಹುಟ್ಟಿದರು. ಅರ‍ುಣ್ಮೊೞಿತ್ತೇವರ್ ಎಂಬುದು ಇವರ ಚಿಕ್ಕಂದಿನ ಹೆಸರು. ಇವರ ವಂಶನಾಮವಾದ ಶೇಕ್ಕಿೞಾರ್ ಎಂಬುದೇ ಪ್ರಸಿದ್ಧಿಗೆ ಬಂದು ನಿಂತುಹೋಯಿತು. ಇವರ ಹಿರಿಮೆಯನ್ನು ಕಂಡು ಎರಡನೆಯ ಕುಲೋತ್ತುಂಗ ಚೋಳನು ಇವರನ್ನು ತನ್ನ ಪ್ರಧಾನಿಯನ್ನಾಗಿ ಮಾಡಿಕೊಂಡು ಉತ್ತಮ ಚೋಳಪಲ್ಲವರ್ ಎಂಬ ಬಿರುದನ್ನು ಕೊಟ್ಟನು. ಅರಸನು ಶೈವನಾದರೂ ಜೈನಮತಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಲೀನವಾಗಿದ್ದು ಜೀವಕ ಚಿಂತಾಮಣಿಯನ್ನು ಸದಾ ವ್ಯಾಸಂಗಮಾಡುತ್ತ ಅದರ ಸೊಗಸು ಸ್ವಾರಸ್ಯಗಳನ್ನೇ ಕೊಂಡಾಡುತ್ತಿದ್ದನು. ಪ್ರಧಾನಿ ಇದನ್ನು ಕಂಡು ಅರಸನನ್ನು ಸ್ವಮತದಲ್ಲಿ ಆಸಕ್ತಿ ವಹಿಸುವಂತೆ ಮಾಡಲು ಉತ್ತಮ ಶಿವಕಥೆಗಳೂ ಶಿವಶರಣರ ಕಥೆಗಳೂ ಉಂಟು ಎಂದು ಹೇಳಿದನು. ಶಿವಶರಣರ ಮಹಿಮೆಗಳನ್ನು ಮೆರಸುವ ಪುರಾಣವೊಂದನ್ನು ರಚಿಸುವಂತೆ ದೊರೆ ಕೇಳಲು, ಅದೇಪ್ರಕಾರ ಶೇಕ್ಕಿೞಾರರು ಚಿದಂಬರಕ್ಕೆ ಹೋಗಿ ನಟರಾಜನನ್ನು ಸೇವಿಸಿ ಅನುಗ್ರಹ ಮಾಡುವಂತೆ ಬೇಡಿದರು. ನಟರಾಜನು 'ಉಲಗೆಲಾಂ—'ಎನ್ನುವ ಸತ್ಯವಾಕ್ಯನ್ನು ಅಶರೀರವಾಣಿಯಿಂದ ಎತ್ತಿಕೊಡಲು, ಕವಿ ಅದರಿಂದಲೇ ಆರಂಭಮಾಡಿಕೊಂಡು ಸುಮಾರು ೪೦೦೦ ಪದ್ಯಗಳಲ್ಲಿ ೬೩ ಪುರಾತನರ ಚರಿತ್ರೆಯನ್ನು ಹಾಡಿದ್ದಾರೆ. ಈ ಗ್ರಂಥವನ್ನು ನೋಡಿ ದೊರೆ ಇವರಿಗೆ 'ತೊಂಡರ್‌ಶೀರ್ ಪರವುವಾರ್' (ಭಕ್ತರ ಮಹಿಮೆಯನ್ನು ಹೇಳುವವರು) ಎಂಬ ಬಿರುದನ್ನು ಕೊಟ್ಟನು. ಪೆರಿಯ ಪುರಾಣ ಎಂಬುದು ಈಚಿನವರು ಕೊಟ್ಟ ಹೆಸರು. ಕವಿ ಇಟ್ಟ ಹೆಸರು ತಿರುತ್ತೊಂಡರ್ ಪುರಾಣ. ಇದು ಶೈವರ ಮತಗ್ರಂಥವಾಗಿದ್ದರೂ ಭಕ್ತಿ ಪ್ರಧಾನವಾಗಿ ಕಾವ್ಯ ಸ್ವಾರಸ್ಯವುಳ್ಳದ್ದಾಗಿದೆ.

# பெரிய புராணம்—மநுநீதிகண்ட புராணம்

**1** சொன்ன நாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர்.

**2** வேத வோசையும் வீணையி னோசையுஞ்
சோதி வானவர் தோத்திர வோசையு
மாத ராடன் மணிமுழ வோசையுங்
கீத வோசையு மாய்க்கிளர் வுற்றவே.

**3** பல்லி யங்கள் பரந்த வொலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை யொலியுடன் மாவொலி
யெல்லை யின்றி யெழுந்துள வெங்கணும்.

**4** மாட மாளிகை சூளிகை மண்டபங்
கூட சாலைகள் கோபுரந் தெற்றிக
ணீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடன் மாத ரணிசிலம் பார்ப்பன.

**5** அங்குரைக்கெகன் னளவப் பதியிலார்
தங்கண் மாளிகை யின்முன்று சம்புலின்
பங்கிஞாயுருச் சேறு பரவையா
மங்கையா ரவதாரஞ்செய் மாளிகை.

**6** படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிபா
ரிடந்த வேனமு மன்னமுந் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன் றொண்டர்க்குத்
தூதுபோய்
நடந்த செந்தா மரையடி நாறுமால்.

13 அன்ன தொன்னக ருக்கர சாயினன்
துன்னும் வெற்றி யோன்வழித் தோன்றினன்
மன்னு சீரந பாயன் மதிமுகன்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே.

14 மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணு மாவியு மாம்பெருங் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண இயற்றினான்.

15 பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கு மாகி யிருந்தவர் பூசனைக்(கு)
அங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்
துங்க வாகமஞ் சொன்ன முறைமையால்.

16 கொற்ற வாழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்ற நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெய ராக்கினான்.

[ வேறு ]

17 அறம்பொரு ளின்பமான அறநெறி வழாமற்புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகங் காக்குநாளிற்
சிறந்த நற்றவத்தாற் றேவி திருமணி வயிற்றின் மைந்தன்
பிறந்தன னுலகம்போற்றப் பேரரிக் குருளை யன்னான்.

18 தவமுயன் றரிதிற் பெற்ற தனியிளங் குமர னுஞ்
சிவமுயன் றடையுந் தெய்வக் கலையல திருந்த வோதிக்
கவனவெம் புரவி யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும் பேறே யெனவரும் பண்பின் மிக்கான்.

19 அளவிறொல் கலைகண் முற்றி யருள்பெறற் றந்தைமிக்க
உளமகிழ் காதல்கூர ஓங்கிய குணத்தா னீடி
இளவர செனனுந் தன்மை யெய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநா ளொருநா ண்மைந்தன்.

20 திங்கள்வெண் கவிகை மன்னன் திருவளர் கோயினின்று
மங்குறோய் மாடவீதி மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலைதாழ்ந்த குங்குமங் குலவு தோளான்
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான்.

21 பரசுவந் திகண்முன் சூதர் மாகத ரொருபாற் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளை யொருபான் மிக்க
முரசொடு சங்கமார்ப்ப முழங்கொலி யொருபால் வென்றி
அரசிளங் குமரன்போது மணிமணி மாட வீதி.

22 தனிப்பெருந் தருமந்தானோர் தயாவின்றித் தானை மன்னன்
பணிப்பில்சிந் தையினி லுண்மைப் பான்மைசோதித் தாலென்ன
மனித்தர்தன் வரவுகாணா வண்ணமோர் வண்ணா நல்லான்
புனிற்றிளங் கன்றுதுள்ளிப் போந்ததம் மறுகி னூடே.

23 அம்புனிற்றுவின் கன்றோ ரபாயத்தி னூடு போகிச்
செம்பொனின் றேர்க்கால் மீது விசையினாற்
செல்லப்பட்டங்
கும்பரி னடையக் கண்டங் குருகுதா யலமந்தோடி
வெம்பிடு மனமுஞ் சோரு மெய்ந்நடுக் குற்று வீழும்.

24 மற்றது கண்டுமைந்தன் வந்ததிங் கபாய மென்று
சொற்றடு மாறி நெஞ்சில் துயருழந் தறிவழிந்து
பெற்றபுங் கன்று மின்றெ னுணர்வெனும் பெருமை
மாளச்
செற்றனென் செய்கே னென்று தேரினின் றிழிந்து
வீழ்ந்தான்.

25 அலறுபே ராவை நோக்கி யாருயிர் பதைத்துச்
சோரும்
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி
நிற்கும்
மன்றலை யுலகங் காக்கு மனுவெனு மென்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் பிறந்தவா றொருவனென்
பான்.

26 வந்தவிப் பழியை மாற்றும் வகையினை மறைநூல்
வாய்மை
யந்தணர் விதித்த வாற்றா லாற்றுவ தறமே யாகில்
எந்தையீ தறியா முன்ன மியற்றுவ னென்று மைந்தன்
சிந்தைவெந் துயரந்தீர்ப்பான் திருமறையவர்முன்
சென்றான்.

**27** தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்த வாத்தரியாதாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினிற் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோன் மனுவின்பொற் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினாற் புடைத்த தன்றே.

**28** பழிப்பறை முழக்கோ வார்க்கும் பாவத்தி னொலியோ வேந்தன்
வழித்திரு மைந்த னாவி கொளவரு மறலி யூர்திக்
கழுத்தணி மணியி னார்ப்போ வென்னத்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழு மோசை மன்னன் செவிப்புலம் புக்க போது.

**29** ஆங்கது கேட்ட வேந்த னரியணை யிழிந்து போந்து
பூங்கொடி வாயி லண்ணக் காவல ரெதிரே போற்றி
யீங்கிதோர் பசுவந் தெய்தி யிறைவநின் கொற்ற வாயில்
தூங்கிய மணியைக் கோட்டால் துளக்கிய தென்று சொன்னார்.

**30** மன்னவ னதனைக் கேளா வருந்திய பசுவை நோக்கி
யென்னிதற் குற்ற தென்பா னமைச்சரை யிகழ்ந்து நோக்க
முன்னுற நிகழ்ந்த வெல்லா மறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி யமைச்சன் மன்னன் தாளிணை தொழுது சொல்வான்.

31 "வளவ! நின் புதல்வ னாங்கோர் மணிநெடுந் தேர்மேலேறி
அளவிறேர்த் தானைசூழ அரசுலாந் தெருவிற் போங்கால்
இளையவான் கன்றுதேர்க்கா லிடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறு மித்தாய் வந்து விளைத்த தித்தன்மை"
என்றான்.

32 அவ்வுரை கேட்ட வேந்த னாவுறு துயரமெய்தி
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல் வேதனை யகத்து மிக்கிங்
கிவ்வினை விளைந்த வாறென் றிடருறும் இரங்கும் ஏங்கும்
செவ்விதென் செங்கோ லென்னுந் தெருமருந் தெளியுந் தேறான்.

33 மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தில் நீடும்
என்னெறி நன்றா லென்னு மென்செய்தால் தீருமென்னும்
துன்னிளங் கன்று காணுத் தாய்முகங் கண்டுசோரும்
அந்நிலை யரச னுற்ற துயரமோ ரளவிற் றன்றால்.

[வேறு]

34 மந்திரிக ளதுகண்டு மன்னவனை யடிவணங்கிச்
சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்
கொந்தலர்த்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
யந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறமென்றார்.

35 வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ் சொல்லியவிச்
சழக்கின்று நானியைந்தால் தருமந்தான் சலியாதோ.

36 மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ.

37 "என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயவிசைந்தே
யன்னியனோ ருயிர்கொன்றா லவனைக்கொல் வேனானால்
தொன்மனுநூல் தொடைமனுவால் துடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்.

38 என்றரச னிகழ்ந்துரைப்ப எதிர்நின்ற மதியமைச்சர்
நின்றநெறி யுலகின்க ணிதுபோன்முன் னிகழ்ந்ததால்
பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்றுதொடு நெறியன்றோ தொன்னிலங்காவல வென்றார்.

39 அவ்வண்ணந் தொழுதுரைத்த அமைச்சர்களை முகநோக்கி
எவ்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னும் விறல்வேந்தன்
இவ்வண்ணம் பழுதுரைத்தீ ரென்றெரியினிடைத் தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போன் முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்.

40 அவ்வுரையில் வருநெறிக ளவைநிற்க அறநெறியின்
செவ்வியவுண் மைத்திறநீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகி லெப்பெற்ற மிப்பெற்றித் தாமிடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி யெறிந்து விழுந்தது" விளம்பீர்.

41 போற்றிசைத்துப் புரந்தரன்மா லயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்
தோற்றமுடை யுயிர்கொன்றா லதனிற்றுணி பொருடான்
ஆற்றவுமற் றவற்கொல்லு மதுவேயா மெனநினைமின்.

42 எனமொழிந்து மற்றிதனுக் கினியிதுவே செயலென் றான்
மனமழியும் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது
தனதுறுபே யிடர்யானுந் தாங்குவதே கருமமென
அநகனரும் பொருள்துணிந்தா னமைச்சருமஞ் சினரகன்றார்.

43 மன்னவன்றன் மைந்தனையங் கழைத்தொருமந் திரி
தன்னை
முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கா லூர்கவென
அன்னவனு மதுசெய்யா தகன்றுதன்னு யிர்
துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்
தான்.

44 ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுண
ரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி யரிதோமற் றெளிதோதான்.

45 தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு
தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ
மழைசொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடை
மேல்
விண்ணவர்க டொழநின்றான் வீதிவிடங்கப்
பெருமான்.

46 சடைமருங்கி லிளம்பிறையும் தனிவிழிக்குந்
திருநுதலும்
இடமருங்கி லுமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுடன் கண்டரசன்
போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்
கொடுத்தான்.

47 அந்நிலையே யுயிர்பிரிந்த ஆன்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்று மந்திரியு முடனொழலும்
இன்னபரிசா னென்றறிந்திலன் வேந்தனும் யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ.

48 அடிபணிந்த திருமகனை யாகமுற வெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயர நீங்கினா னிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரனீங் கியதன்றே.

49 பொன்றயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்த பிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே யருள் கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளி வரும்பெருமை யேழுலகு மெடுத் தேத்தும்.

50 இனையவகை யறநெறியி லெண்ணிறந்தோர்க் கருள் புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்
புனையுமுரை நம்மளவில் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலரா மறவனார் பூங்கோயில்.

# ಕಂಬರ್

ಇವರು ತಂಜಾವೂರು ಜಿಲ್ಲೆಯ ತಿರುವಳುಂದೂರಿನಲ್ಲಿ (ತೇರ ಳುಂದೂರ್) ಉವಚ್ಚಜಾತಿಯಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ತಂದೆಯ ಹೆಸರು ಆದಿತ್ಯರ್. ಇವರು ಎಳವೆಯಲ್ಲೆ ತಂದೆ ತೀರಿಕೊಂಡದ್ದರಿಂದ ಪೋಷಕರಿಲ್ಲದೆ ತಿರುವೆಣ್ಣೈನಲ್ಲೂರಿನ ಶಡೈಯಪ್ಪವಳ್ಳಲ್ ಎಂಬವನ ಬಳಿಹೋಗಿ ಸೇರಿ ಅವನ ಅನುಗ್ರಹಕ್ಕೆ ಪಾತ್ರರಾಗಿ ವಿದ್ಯೆ ಕಲಿತರು. ಕಂಬರ್ ಎನ್ನುವುದು ಹೆತ್ತವರು ಇಟ್ಟ ಹೆಸರೆಂದು ಕೆಲವರೂ, ಕಂಬ ನಾಡು ಎಂಬ ನಾಡು ಇವರಿಗೆ ಇದ್ದದ್ದರಿಂದ ಬಂದ ಹೆಸರೆಂದು ಕೆಲವರೂ, ಕಾಂಚೀಪುರದ ಏಕಾಂಬನಾಥದೇವರ ಹೆಸರಿನ ಸಂಕ್ಷಿಪ್ತನಾಮವೆಂದು ಕೆಲವರೂ ಹೇಳುತ್ತಾರೆ. ಆ ಕಾಲದ ಹಲವು ಶಿಲಾಶಾಸನಗಳಲ್ಲಿ ಕಂಬರ್ ಎಂಬ ಹೆಸರು ಬಳಕೆಯಾಗಿರುವುದರಿಂದ ಈ ಹೆಸರು ಅಂಕಿತನಾಮವೇ ಎಂದು ಹೇಳಬಹುದಾಗಿದೆ.

ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೯ ನೆಯ ಶತಮಾನದ ಉತ್ತರಾರ್ಧ ಎಂದು ಇಟ್ಟುಕೊಳ್ಳಬಹುದು; ೧೨ ನೆಯ ಶತಮಾನದ ಉತ್ತರಾರ್ಧ ಎಂದೂ ಕೆಲವರು ಅಭಿಪ್ರಾಯಪಡುತ್ತಾರೆ. ಕಂಬರ್ ವೈಷ್ಣವರು. ಶಿವಪರ ಮಾತ್ಮನನ್ನು ಶೈವಕ್ರಮದಲ್ಲಿ ಇವರು ಸ್ತುತಿಸಿರುವುದನ್ನು ನೋಡಿದರೆ ಇವರ ದೃಷ್ಟಿ ವೈಶಾಲ್ಯ ವೇದ್ಯವಾಗುತ್ತದೆ. ಇವರು ತಿರುಕ್ಕುಱಳಿನಿಂದ ಆರುನೂರಕ್ಕೆ ಮೇಲ್ಪಟ್ಟು ವಾಕ್ಯಗಳನ್ನೂ ವಾಕ್ಯಖಂಡಗಳನ್ನೂ ಎತ್ತಿ ಬಳಸಿಕೊಂಡಿರುವುದರಿಂದ ಆ ಗ್ರಂಥದಲ್ಲಿ ಇವರಿಗೆ ಇದ್ದ ಪರಿಶ್ರಮ ಮಾತ್ರವಲ್ಲದೆ ಗೌರವಭಾವವೂ ವ್ಯಕ್ತವಾಗುತ್ತದೆ. ತಿರುಕ್ಕುಱಳ್ ಮೊದಲಾದ ಲಕ್ಷ್ಯಗ್ರಂಥಗಳನ್ನೇ ಅಲ್ಲದೆ, ತೊಲ್‌ಕಾಪ್ಪಿಯಂ ಮೊದಲಾದ ಲಕ್ಷಣಗ್ರಂಥಗಳನ್ನೂ ಚೆನ್ನಾಗಿ ಅಭ್ಯಾಸಮಾಡಿದ್ದರು. ಕಂಬರಿಗೆ 'ಕಲ್ವಿಯಿಲ್ ಪೆರಿಯನ್', 'ವೃತ್ತಬಂಧ ಪ್ರವೀಣನ್', 'ಕವಿಚಕ್ರವರ್ತಿ', ಮೊದಲಾದ ಬಿರುದುಗಳು ಇವೆ.

ಕಂಬರು ಸಂಸ್ಕೃತ ಪಂಡಿತರ ಬಾಯಿಂದ ವಾಲ್ಮೀಕಿ ರಾಮಾಯಣ ಕಥೆಯನ್ನೂ ಇತರ ರಾಮಾಯಣ ಕಥೆಗಳನ್ನೂ ಕೇಳಿಕೊಂಡು,

ಹಗಲೊಂದಕ್ಕೆ ೭೦೦ ರಂತೆ ಪದ್ಯ ಹಾಡಿದರೆಂದು ಹೇಳುತ್ತಾರೆ. ಕಂಬರು ಬರೆಯದೆ ಬಿಟ್ಟ ಉತ್ತರಕಾಂಡವನ್ನು ಒಟ್ಟಕೂತ್ತರ್ ಎಂಬುವರು ಬರೆದರು. ಭಾವಸ್ವಾರಸ್ಯ, ಅರ್ಥ ವೈಸದ್ಯ, ಶಬ್ದ ಮಾಧುರ್ಯ, ಕಾವ್ಯ ರಸಗಳಿಗೆ ಕಂಬರಾಮಾಯಣ ಪ್ರಸಿದ್ಧವಾಗಿದೆ. ವಾಲ್ಮೀಕಿ ರಾಮಾಯಣ ದಲ್ಲಿ ಬಾರದ ಕೆಲವು ವಿಷಯಗಳು ಕಂಬರಾಮಾಯಣದಲ್ಲಿ ಬಂದಿವೆ. ಉದಾಹರಣೆಗೆ: ಮದುವೆಗೆ ಮುಂಚೆ ಕನ್ಯಾಮಾಡದಲ್ಲಿ ಸೀತೆಯನ್ನು ರಾಮ ನೋಡುವುದು, ರಾಮನು ಬಿಲ್ಲು ಮುರಿದದ್ದನ್ನು ನೀಲಮಾಲೆ ಎಂಬುವಳು ಸೀತೆಗೆ ಹೇಳುವುದು, ''ಹಿರಣ್ಯ ಪಡಲಂ'' ಎಂಬ ಪ್ರಹ್ಲಾದ ಚರಿತ್ರೆಯನ್ನು ಸೇರಿಸಿರುವುದು.

ಕಂಬರ ಇತರ ಗ್ರಂಥಗಳು: ಶಡಗೋಪರಂದಾದಿ, ಎರೆಯುವುದು, ಶಿಲ್ಲೈಯೆಯುವುದು, ತಿರುಕ್ಕೈವಟಿಕ್ಕಂ, ಸರಸ್ವತಿಯಂದಾದಿ, ಅಲ್ಲದೆ ಕೆಲವು ಬಿಡಿಪದ್ಯಗಳು.

# கம்பராமாயணம்—அயோத்தியாகாண்டம்

## குகப்படலம்

1 பூவிரி பொலன்கழற் பொருவில் தானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினான்.

2 வண்ண நறுஞ் சுரும்புகும் இணர்த்தாக் கல்லினா
கண்ணகன் பெரும்புனல் கங்கை யெய்தலும்
அண்ணல்வெங் கடுக்குக் கருவி டார்த்தல்லால்
உண்ணவும் துடையுறு பூரித்தன் றார்த்த.

3 அறுதிசைத் துளியுங் கடந்த தேக்கம்
முழுதிசைப் படர்வதோர் முறைமை தேர்ந்திலென்
நெடு நாரிக் குண்டையு நீந்த நின்றவர்
பொழுதிசைப் புணர்வும் புவி யிட்டமே.

4 பாலையேய் நிறத்தொடு பண்டு தான் படர்
ஓலையேய் நெடுங்கட லோடிற் றில்லையால்
மாலையேய் நெடுமுடி மன்னன் சேனையாம்
வேலையே மடுத்ததக் கங்கை வெள்ளமே.

5 கான்றலை நண்ணிய காளை பின்படர்
தோன்றலை யவ்வழித் தொடர்ந்து சென்றன
ஆன்றவ ருணர்த்திய அக்குரோணி கண்ட
மூன்றுபத் தாயிரத் திரட்டி முற்றுமே.

6 அப்படை கங்கையை யடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் மாந்த மேகத்தை
ஒப்புடை யண்ணலோ டுடற்றவோ கொலாம்
இப்படை யெடுத்ததென் றெடுக்க சீற்றத்தான்.

7 குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்
தொகைமுரட் சேனையைத் துகளி னோக்குவான்
நகைமிகக் கண்கள்தீ நாற நாசியில்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான்.

8 மையுறு வுயிரெலா மிறுதி வாங்குவான்
கையுறு கரையில் பிடித்த காலனன்
ஐயைந்நூ றாயிர முருவ மாயினா
பொய்யறு தானையான் வில்லின் கல்வியான்.

9 கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்கண் தீயினன்
கொட்டிய துடியினன் குறிக்குங் கொம்பினன்
கிட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினான்.

10 எலியெலா மிப்படை யரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூவினான்
வலியுலாம் உலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலாம் ஒருவழிப் புகுந்த போலவே.

11 மருங்கடை தென்கரை வந்து தோன்றினான்
ஒருங்கடை நெடும்படை யொல்லெ னார்ப்பினோடு
அருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே.

12 தோன்றிய புளிஞரை நோக்கிச் சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்கு
ஏன்றனென் என்னுயிர்த் துணைவற் கீகுவான்
ஆன்றபே ரரசநீர் அமைதிரா மென்றான்.

13 துடியெறி நெறிகளுந் துறையுஞ் சுற்றுற
ஓடியெறி யம்பிகள் யாது மோட்டலிர்
கடியெறி கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடியெறி படையெனப் பெயர்த்துங் கூறுவான்.

[ வேறு ]

14 அஞ்சன வண்ணனென் னுயிர் நாயக னாளாமே
வஞ்சனை யாலரசெய்திய மன்னரும் வந்தாரோ
செஞ்சர மென்பன தீயுமிழ் கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடி னாய்க்குக னென்றெனை
யோதாரோ.

15 ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு
சொல்லன்றோ
ஏழமை வேடனிறந்தில னென்றெனை யேசாரோ.

16 முன்னவ னென்று நினைத்திலன் மொய்புலி
யன்னோனோர்
பின்னவ னின்றன னென்றில னன்னவை
பேசானேல்
என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ் வெல்லை
கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம் வாயாவோ.

17 பாவழ நின்ற பெரும்பழியும்பகை நண்போடும்
ஏவழும் என்பதை மண்ணுல காள்பவ ரெண்ணாரோ
ஆவது போகவென் னாருயிர்க் கோழமை தந்தான்மேல்
போவது சேனையு மாருயி ருங்கொடு போயன்றோ.

18 அருந்தவ னென்றுயர் பாவ இவன்புலி யாள்வானே
மருந்தெனி னன்றுயிர் மண்புகழ் கொண்டிடின் மாயேனே
பொருந்திய கேண்மை யுகந்தவர் தப்பொடு போகாமே
இருந்தது நன்று கழிக்குவெ னென்கட னின்றேயே.

19 தாப்பிய மாயுமிடைந்த பெருப்படை தாழ்வாரும்
வாப்பிய ரரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ
வெப்பிய வேடருளீர் துறை போர்ப்படம் விலக்கோரா
நப்பிழுன் னோயினி நம்பூயிர் போய்வது நன்றன்றோ.

20 போன படைத்தலை வீரர் தமக்கிரை போதாவிச்
சேனை கிடக்கிடு தேவர் பறித்திலை மாமேகந்
சோனை படக்குடர் அறை படச்சுடர் வாளோடுந்
தானை படக்கனி யானை படத்திரள் சாமேயே.

21 நின்ற கொடைக்கையெ னன்ப னுதிக்க நெடுந்தீரம்
அன்று கொடுத்தவண் மைந்தர் பலத்தையெ னட்பாலே
கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டோடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்திடை தாராதோ.

22 ஆடு கொடிப்படை சாடி யறத்தவ ரேயாள
வேடு கொடுத்தது பாரெனு மிப்புகழ் மேவீரோ
நாடு கொடுத்தவென் னாயகனுக் கிவர் நாமாளுங்
காடு கொடுக்கில ராகி யெடுத்தது காணீரோ.

23 மாமுனி வர்க்குற வாகி வனத்திடை யேவாழுங்
கோமுனி யத்தகு மென்று மனத்திறை கொள்ளாதே
ஏமுனை யுற்றிடு சேனை கடற்படை யொன்றாலும்
ஆமுனை யிற்சிறு கூழென விப்பொழு தாகாதோ.

24 என்பன சொல்லி இரும்பன மேனிய ரேனோர்முன்
வன்பணை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்
கன்பனு நின்றனன் நின்றது கண்டரி யேறன்ன
முன்பனில் வந்து மொழிந்தனன் மூரிய தேர்வல்லான்.

[ வேறு ]

25 கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவ னுயர்
தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங்
குறியுடையான்.

26 கற்காணுந் திண்மையான் கரைகாணாக் காதலான்
அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோண் மழைகாணு மணி
நிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா னெறியெதிர் நின்றனனென்
றான்.

27 தன்முன்னே யவன்தன்மை தந்தைதுணை
முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்
தான்
மன்முன்னே தழீஇக் கொண்ட மனக்கினிய
துணைவனேல்
என்முன்னே யவற்காண்பென் யானேயென்றென
வெழுந்தான்.

28 என்றெழுந்து தம்பியொடும் எழுகின்ற காதலொடுங்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக்
கரைகுறுகி
நின்றவனை நோக்கினான் திருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் துண்
ணென்றான்.

29 வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்
தான்.

30 நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயனின்றான்
தம்பியையு மொக்கின்றான் தவவேடந் தலைக்கொண்
டான்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்
றான்
எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்
பென்றான்.

31 உண்டிடுக்க ணொன்றுடையா னுலையாத வன்புடை
யான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்
பெல்லாங்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காரின்க ணெறி
யென்னுத்
தண்டுறையோர் நாவாயி லொருதனியே தான்
வந்தான்.

32 வந்தெதிரே தொழுதானை வணங்கினான் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுந் களிகூரத் தழுவினான் தகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ்
சீர்த்தியான்.

33 தழுவினன் புளினர் வேந்தன் தாமரைச் செங்கணானை
எழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை
யென்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி
னின்றும்
வழுவினன் அதனை நீக்க மன்னனைக் கொணர்வா
னென்றான்.

34 கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு
முயிர்ப்பனுகி
மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான் விம்மினன் உவகை
பொங்கத்
தீட்டரு மேனிமைந்தன் சேவடிக் கமலப்பூவில்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தான் புகல
லுற்றான்.

35 தாயுரை கொண்டு தாதையுதவிய தரணிதன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை
கண்டால்
ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியினம்மா.

36 என்புகழ் கின்றதேழை யெயினனே னிரவி
யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு
மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்க
ளெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் துரவுத்
தோளாய்.

37 எனவிவை யன்ன மாற்ற மியம்பலும் பலவுங் கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் பொருவில்
காதல்
அனையவற் கமைவிற் செய்தா னருளுற நன்கிலாதார்
நினைவருங் குணங்கொ டன்றே இராமன் மேனிமிர்ந்த
காதல்.

38 அவ்வழி யவனை நோக்கி யருட்பெரு வாரியன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண றென்றிசைச் செங்கை
கூப்பி
எவ்வழி யுறைந்தா னெம்பி யென்றலு மெயினர்
வேந்தன்
இவ்வழி வீரயானே காட்டுவ லெழுக என்றான்.

**39** காரெனக் கடிது சென்றான் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணான்.

**40** இயன்றதென் பொருட்டி னாலிவ் விடருனக் கென்ற போதும்
அயின்றனை கிழங்குங் காயும் அமிழ்தென வப் புல்லில்
துயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காதற்
குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வெ னானே.

**41** தூண்டா நிவந்த தோளான் பின்னருஞ் சொல்லு வானந்
நீண்டவன் துயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் தொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்தது
யாண்டென வினிது கேட்டா னெயினர்கோ னிதனைச் சொன்னான்.

**42** அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயன மென்றான்.

43 என்பத்தைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேயில் பாரென்று முடிவி லாத
துன்பத்துக் கேதுவானே னனைத்து துடைக்க நின்றான்
அன்பத்துக் கெல்லையுண்டோ யழுகிதென் னடிமை யென்றான்.

44 அவ்வினை யன்னையா றுமன்றருப் பொடியின் வைகித்
தெவ்வினை யுதைய நின்றார்க்குந் தெறிகழற் புளிஞர் கோமா
னிவ்வினைக் கங்கையாற்றி னேற்றினை யாயி னெடமை
வெவ்விடர்க் கடலி னேற்றி னேந்தன்பால் விடுத்த தென்றான்.

45 நன்றெனப் புளிஞர் வேந்த னன்னினன் றமரை நாவாய்
சென்றுநீர் தருதிரென்ன வந்தன சிவண்பர் வெள்ளிக்
குன்றெனக் குனிக்கு மப்பொற் குவடெனக் குபேரன் மானம்
ஒன்றெனக் காணிப் பல்வே றுருவுகொண் டனைய வான.

46 நங்கையர் நடையி னன்ன நாணுறு செலவி னாவாய்
கங்கையு மிடமிலாமை மிடைந்தன கலந்த வெங்கும்
அங்கொடிங் கிழித்தி யேற்று மமைதியி னமரர் வையத்
திங்கொடங் கிழித்தி யேற்று மிருவினை யென்னலான.

47 வந்தனை வரம்பி லாய் வரிசிலைக் குரிசின் மைந்த
சிந்தனை யாவதென்று சிருங்கிபே ரியர்தோன் செப்பச்
சுந்தர வரிவில்லானுஞ் சுமந்திரன் தன்னை நோக்கி
எந்தையைத் தாதை தன்னை யேற்றுதி விரைவி னென்
றான்.

48 குரிசிலை தேவ ராலக் குரகதத் தேர்வ லாறும்
வரிசையின் வழாமை நோக்கி மாபுரி வைகயி
னேற்றக்
கரிபரி யிரதங் காலாள் கணக்கறு கடையில் வேலை
எரிமணி கிரையின் முதல் நடந்தனவ ரேறிற்றன்றே.

49 இடிபடு முழக்கம் பொங்க இமையவர் மகர நீரை
முடிவுறு முகம்ப ஆழி யிறுகியின் மொய்ப்ப போலக்
கொடியொடு வங்கள் வேலை கூட்டொடு மயங்கி வே போல
நெடியன கை யெடுத்து நிற்ப நீந்தின நெடுங்கை வேழம்.

50 பங்குழு முகம ரீசூங் குளமுடை யாயுந் தள்ளி
வங்கநீர்க் கடலுப் பாந்து தன்வழி பாடமானப்
பொங்குவெண் கரிறு மாத்தக் கடையொளி இப்
போயிற்றம்மா
கங்கையு மோடமற் சானுங் காதல் தென்வமாதோ.

51 கொடுஞ்சொடு தட்டுமச்சு மாழியுந் தாக்கு மொட்டு
நெடுஞ்சுவர்க் கொடியும் யாவும் நெறிவரு முறையி
னீக்கி
விடுஞ்சுவற் புரவி போடும் மேவருமேவ மேற்றிச் சென்ற
மடிஞ்சபி னுடம்பு கூட்டும் வினையென வயிரத்
தேர்கள்.

52 காலிரண் டாய கோடி நவையினு வாய்கண் ணீதாச்
சேயிரண் டானை வாய கதிரொடு நதியிற் சென்ற
பாரிரண் டானை மெய்யா யாங்கிரண் டானை நெஞ்ச
நாறிரண் டானை கால நடுநனை க் கவினப் பாய்மா.

53 ஊடுற நெருக்கி போடக் கொருவர் முன்னொருவர் கிட்டிக்
கூடகத் தளிர்க்கை நீர் மாதர் குழுமினர் துவன்றித் தோன்றப்
பாடியல் களிநல் யானைப் பந்தியங் கடையிற் குத்தக்
கோடுகள் மின்னி ந்த வெண்ணிமிர ந்தன குவளைக் கொங்கை.

54 பாங்கினுத் தரிய மாவர் படர்ந்திரை தவழப் பாரின்
வீங்குநீ ரமுவந் தன்னுள் விழுமகக் கலுழி வெள்ளக்
கொங்கல்கள் தலைகள் தோன்ற வொளிக்கவ ளுயர்ந்த கும்பம்
பூங்குழற் கன்னை நன்மைமுலையொடு பொலிந்த மாதோ.

55 பொலங்குழை மகளிர் நாவாய் போக்கினு ளொன்று தாக்க
மலங்கின ரிரண்டு பானு மருகினர் வெருவி நோக்க
அலங்குநீர் வெள்ளந் தள்ளி யழிதர அங்குமிங்குங்
கலங்கலின் வெருவிப் பாயுங் கயற்குலம் நிகர்த்த கண்கள்.

56 இயல்வுறு செலவி னாவா யிருகையு மெயினர் தூண்டத்
துயல்வன துடுப்பு வீசுந் துவலைகண் மகளிர் மென்றூசு
உயல்வுறு பரவை யல்கு லொளிபுறத் தளிப்ப உள்ளத்
தயர்வுறு மதுகை மைந்தர்க் கயாவுயிர்ப் பளித்த தம்மா.

[ வேறு ]

62 அறுபதி னாயிர மக்கு ரோணி யென்
றிறுதிசெய் சேனையு மெல்லை தீர் நகர்
மறுவறு மாந்தரு மகளிர் வெள்ளமுஞ்
செறிதிரைக் கங்கையின் நடக்கச் சென்றவே.

63 சுழித்துநீர் வருதுறை யார்த்தறச் சூழ்படை
கழித்துநீங் கியதெனக் கள்ள வாசையை
அழித்துவே றவனியாண் டானய வேந்தரை
இழித்துமே லேறினான் கானும் எறினான்.

64 தன்னை தம்பியுந் தாயர் மூவருஞ்
சொன்ன தேர் வலவனுந் தூய தோழனுந்
துன்னின பேறலுந் துழாது டுப்பெனா
நன்னயக் காலிணை யடைத்தன் மேயினான்.

[ வேறு ]

65 சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத்
தொழுது நோக்கிக்
கொற்றத்தார்க் குரிசிலிவ ராரென்று குகன் வினவக்,
கோக்கள்வைகும்
முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகு மீன்றானை
முன்னீன்றானைப்
பெற்றத்தால் பெறுஞ்செல்வம் யான்பிறத்தலால்
துறந்த பெரியாள் என்றான்.

66 என்றலுமே யடியின்மிசை நெடிதுவிழுந் தழுவானை
யிவன் யாரென்று
கன்றுபிரி காராவின் துயருடைய கொடிவினவக்
கழல்கால் மைந்தன்
இன்துணைவ னிராகவனுக் கிலக்குவற்கு மிளையவற்கு
மெனக்கு மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகனென்பா னிந்நின்ற
குரிசி லென்றான்

67 நைவீரலீர் மைந்தீ ரினித்துயரா னுடிறந்து காடு
நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றாமன்றே
விலங்கல் திண்தோள்
கைவீரக் களிறனைய சாளையிவன் தன்னோடுங் கலந்து
நீவிர்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால மளித்தி
ரென்றாள்.

68 அறந்தானே யென்கின்ற அயனின்றா னைநோக்கி
ஐய அன்பின்
நிறைந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத் தன்
மெய்யை நிற்பதாக்கி
இறந்தான்த னிளந்தேவி யாவர்க்குந் தொழுகுலமா
மிராமன் பின்பு
பிறந்தானு முளனென்னப் பிரியாதான் தனைப் பயந்த
பெரியா ளென்றான்.

69 சுடுமயா னத்திடைத்தன் துணையேகத் தோன்றல்
துயர்க்கடலி னேகக்
கடுமையார் கானகத்துக் கருணையார் கலியேகக்
கழற்கான் மாயன்
நெடுமையா லன்றளந்த வுலகெல்லாந் தன்மனத்தே
நினைந்து செய்யுங்
கொடுமையா ளெந்தாளை யாரிவெனென் றுரை யென்
னச்குரிசில் கூறும்.

70 படரொலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ்
செவிலியைத் தன்பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கும் உயிர்ப்பாரங்
குறைந்து தேய
உடரெலா முயிரில்லா வெனத் தோன்று முலகத்தே
யொருத்தி யன்றே
இடரிலா முகத்தாளை யறிந்திலையோ விந்நின்ற வென்னை
யீன்றாள்.

[ வேறு ]

71 என்னக் கேட்டலும் விரக்க மிலாளையுந்
தன்னற் சையின் வணங்கினன் தாயென
அன்னப் பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

72 இழிந்த தாயர் சிவிகையி னேறத்தான்
பொழிந்த கண்ணில் புதுப்புனல் போயினான்
ஒழிந்தி லன்குக னும்முட னேகினான்
கழிந்த னன்பல காவதங் காலினே.

73 பரத்தி னீங்கும் பரத்துவ னென்னும்பேர்
வரத்தின் மிச்குயர் மாதவன் வைகிடம்
அருந்தி கூர அணுகின னண்டவன்
விருத்த வேதிய ரோடெதிர் மேவினான்.

---

# ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರ್

ಇವರು ಹುಟ್ಟಿದ್ದು ತಿರುಮುನಿಪ್ಪಾಡಿನಾಡಿನ ಶನಿವೂರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೫ನೆಯ ಶತಮಾನ. ಇವರದು ವೈಷ್ಣವ ಮತ. ಇವರನ್ನು ಆಟ್ವಾರೆಂದು ಪೂಜಿಸುವುದು ವಾಡಿಕೆ. ಇವರ ತಂದೆತಾಯಿಗೆ ಪೆರಿಯಾಟ್ವಾರಲ್ಲಿ ಭಕ್ತಿ ಹೆಚ್ಚಾಗಿದ್ದುದರಿಂದ ಇವರಿಗೆ ಪೆರಿಯಾಟ್ವಾರ್ ಎಂದು ನಾಮಕರಣಮಾಡಿದರು. ತಿರುವಕ್ಕಪಾಗ್ಯೆ ಎಂಬಲ್ಲಿ ಆಳಿದ ಚೇರಕುಲದ ರಾಜನಾದ ವರಪತಿ ಆಟ್ಕೊಂಡಾನ್ ಎಂಬವನ ಇಷ್ಟದ ಪ್ರಕಾರ ಇವರು ಭಾರತವನ್ನು ಬರೆದರೆಂದು ಹೇಳುತ್ತಾರೆ. ಕವಿಗೂ, ಇವರ ತಮ್ಮನಿಗೂ ಪಿತ್ರಾರ್ಜಿತವಾದ ಸ್ವತ್ತಿನ ಭಾಗದ ವಿಷಯದಲ್ಲಿ ಸ್ವಲ್ಪ ತಿಕ್ಕಾಟವುಂಟಾಗಲು, ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರು ತಮ್ಮ ರಾಜನಲ್ಲಿಗೆ ತೀರ್ಮಾನಕ್ಕಾಗಿ ಹೋದರು. ರಾಜನು ತೀರ್ಪುಕೊಡದೆ ಕವಿಗೆ ಭಾರತ ಬರೆಯಿರೆಂದು ಹೇಳಿದನು. ಅದೇಪ್ರಕಾರ ಅವರು ಭಾರತ ರಚನೆಮಾಡಿ ರಾಜನಿಗೆ ಓದಿಹೇಳಲು, ರಾಜನು ಕಡೆಗೆ 'ಭಾರತದಲ್ಲಿರುವ ಸೋದರ ಜಗಳಕ್ಕೂ ನಿಮ್ಮಿಬ್ಬರ ಜಗಳಕ್ಕೂ ಏನು ವ್ಯತ್ಯಾಸವೆಂದು ಕೇಳಿದನು. ಕವಿಗೆ ಒಡನೆ ಚುರುಕುಮುಟ್ಟಿಸಿದಂತಾಗಿ ಸ್ವತ್ತೆಲ್ಲವನ್ನೂ ತನ್ನ ತಮ್ಮನಿಗೇ ಕೊಟ್ಟು ಶ್ರೀರಂಗಕ್ಕೆ ಹೊರಟುಹೋದರು. ತಾವು ಸಂಸ್ಕೃತ, ತಮಿಳು ಭಾಷೆಗಳಲ್ಲಿ ಮಹಾಪಂಡಿತರಾಗಿದ್ದುದರಿಂದ ವಿಶೇಷ ಹೆಮ್ಮೆಪಡುತ್ತಿದ್ದರು. ಕುಕವಿನಿಂದೆ ಮಾಡುವುದರಲ್ಲಿ ಅಗ್ರಗಣ್ಯರು. ಕುಕವಿದಂಡನೆಯೆಂದರೆ ಇವರಿಗೆ ಬಹಳ ಆಸೆ. ಕೀಳುಮಟ್ಟದ ಕವಿಗಳ ವಿಷಯದಲ್ಲಿ ಕರುಣೆಯೇ ಇಲ್ಲದೆ ಅವರ ಕಿವಿ ಕತ್ತರಿಸುವುದು ಇವರ ವಿನೋದ. ಆದ್ದರಿಂದ ತಮಿಳಿನಲ್ಲಿ "ಕುಕವಿಗಳ ಕಿವಿಗೆ ವಿಲ್ಲಿಯೇ ಮೃತ್ಯು" ಎಂಬ ಗಾದೆ ಕೂಡ ಬಳಕೆಯಲ್ಲಿದೆ.

ಶ್ರೀರಂಗದಲ್ಲಿ ಕೆಲಕಾಲವಿದ್ದು, ಆಮೇಲೆ ದೇಶಸಂಚಾರಮಾಡುತ್ತ ತಿರುವಣ್ಣಾಮಲೆಗೆ ಬಂದರು. ಪದ್ಧತಿಪ್ರಕಾರ ಅರುಣಗಿರಿನಾಥರೊಂದಿಗೆ ವಾದಹೂಡಿ ತಾವು ರಚಿಸಿದ "ಅಟಕರಂದಾದಿ"ಗೆ ವ್ಯಾಖ್ಯಾನಹೇಳಿರೆಂದು ಕೇಳಿದರು. ಅರುಣಗಿರಿನಾಥರು ಸಮರ್ಪಕವಾಗಿ ವ್ಯಾಖ್ಯಾನಮಾಡಿ

"ಕಂದರಂದಾದಿ" ಎಂಬ ಉದ್ಗ್ರಂಥವನ್ನು ರಚಿಸಿ, ಅದಕ್ಕೆ ವ್ಯಾಖ್ಯಾನ ಹೇಳಿರೆಂದು ವಿಲ್ಲಿಯನ್ನು ಕೇಳಿದರು. ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರು ಹಾಗೂ ಹೀಗೂ ಅರ್ಥ ವಿವರಣೆಮಾಡುತ್ತ ಕಡೆಗೆ ೫೪ನೆಯ ಯಮಕ ಪದ್ಯಕ್ಕೆ ಅರ್ಥ ಹೇಳಲಾರದೆ ತಮ್ಮ ಸೋಲನ್ನು ಒಪ್ಪಿಕೊಂಡರು. ಆಗ ಕರುಣೆಯ ಕಡಲಾದ ಅರುಣಗಿರಿನಾಥನ ಉಪದೇಶದ ಪ್ರಕಾರ ಬುದ್ಧಿ ಕಲಿತು ಕೊಂಡು ಕುಕವಿನಿಂದೆ, ದಂಡನೆಗಳಲ್ಲಿಯೂ, ಸ್ವಾಹಂಕಾರದಲ್ಲಿಯೂ ಆಸೆ ತೊರೆದರು.

ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಾರವರ ಭಾರತ ಬಹಳ ಸ್ವಾರಸ್ಯವಾದ ರಸಗ್ರಂಥ. ಈಗ ತಮಿಳಿನಲ್ಲಿರುವ ಭಾರತಗಳಲ್ಲೆಲ್ಲಾ ಇದೇ ಬಹು ಶ್ರೇಷ್ಠವಾದುದು. ಕವಿಗೆ ಸಂಸ್ಕೃತ ಪಾಂಡಿತ್ಯ ವಿಪುಲವಾಗಿದ್ದುದರಿಂದ ಗ್ರಂಥದಲ್ಲಿ ಸಂಸ್ಕೃತ ಪದಪ್ರಯೋಗ ವಿಶೇಷವಾಗಿದೆ. ಶೈಲಿ ಅತಿ ಮನೋಹರ. ಶಬ್ದ ತಾಂಡವವನ್ನಂತೂ ಹೇಳತೀರದು. ಸಂಸ್ಕೃತ ಮತ್ತು ತಮಿಳು ಶಬ್ದ ಗಳನ್ನು ಸಮರಸವಾಗಿ ಬೆರಸಿ ಪದ್ಯ ಹಾಡುವುದರಲ್ಲಿ ಇವರು ಬಹು ಪ್ರಸಿದ್ಧರು. ತಮ್ಮ ಭಾರತದಲ್ಲಿ ಬರುವ ಕಿರಾತಾರ್ಜುನೀಯ ಭಾಗದಲ್ಲಿ ತಮ್ಮ ವೀರ ವೈಷ್ಣವತ್ವವನ್ನೂ ಮರೆತು ಪರಶಿವನನ್ನು ವಿಶೇಷವಾಗಿ ಸ್ತೋತ್ರಮಾಡಿದ್ದಾರೆ.

7 மலலைங் கொண்டையனிருபனை முனிவன்மகிழ்ந்துநீ
வேண்டிய வரங்கள்
சொல்லுக வுனக்குத்தருவ மென்றுரைப்பச்சூரன்
மாமதலையுஞ் சொல்வான்
அல்லல் வெவ்வினையா லின்னமுற்பவ முண்டாயினு
மேழெழு பிறப்பும்
இல்லையொன்றிரட்டேபாக் கில்லையென்றுரையா
இதய நீயளிக்கருளென்றான்.

8 மைத்துனனுரைத்த வாய்மைகேட்டையன்
மனமலருகங் துசந்தவனைக்
கைத்தலமலரால் மார்புறத்தழுவிக் கண்மலர்க்கருணை
நீராட்டி
எத்தனை பிறவியெடுக்கினு மவற்றிலிம்மையுஞ்
செல்வமுமெய்தி
முத்தியும்பெறுதி முடிவிலென்றுரைத்தான் மூவரு
மொருவனுமூர்த்தி.

9 போற்றியகன்னன் கண்டுகண்களிப்பப்புணரி
மொண்டெழுந்த சார்முகிலை
மாற்றியவடிவம் பஞ்சவாயுதமும் வயங்கு
கைத்தலங்களுமாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின்றழைத்த குஞ்சர
ராசன் முனன்று
தோற்றியபடியே தோற்றினன் முடிவுந்தோற்றமு
மிலாதவைந்துளவோன்.

10 அமரரானவரு மமரயோனிகளும் அமரருக்கதி
பனானவனுங்
கமலநான்முகனு முனிவருங்கண்டு கனகநாண்
மலர்கொடு பணிந்தார்
சமரமாமுனையில் தனஞ்சயன் தனையால் சாய்ந்துயிர்
வீடவுஞ் செங்கண்
அமலநாரணனைக் காணவும்பெற்றேன் என்று
தன்னக மிகமகிழ்ந்தான்.

[வேறு]

11 அருந்தழல் மாமகப்புரிந்துஞ் சடையுட்கங்கை ஆதியாம்
புனல்படிந்து மனியோகத்
திருந்து மணிமலர் தூவிப்பூசை நேர்ந்து மெங்கு
மாகிய வண்ணையிதத் துள்ளே
திருந்த நிலைபெறக்கண்டும் போநமெல்லாஞ் சிறுகி
யனைத்துயிருக்குஞ் செய்யவொண்ணுப்
பெருந்தவங்கள் மிகப்பயின்றும் பெறுதற்கெட்டாப்
பெரும்பயனின் திருவருளாற் பெறப்பெற்றேனே.

12 நீலநெடுங்கிரியு மழைமுகிலும் பவநெடுநீரும்
சாயாவு நிகர்க்குமிந்தக்
கோலமும் வெங்கதை வாளஞ்சங்குநேமி சோதண்ட
மெனும்படையுங் குழைத்தவாச
மாலைநறுந்துழாய் மார்புந்திரண்டதோளும் மணிக்
கழுத்துஞ் செவ்விதழும் வாரிசாதக்
காலமலரென மலர்ந்தமுகமுஞ் சோதிக்கதிர்முடியும்
இம்மையிலே கண்ணுற்றேனே.

13 தருமன்மகன்முதலான அரியகாதல் தம்பியரோடமர்
மலைந்து தறுகணாண்மைச்
செருவினெனதுயிரனைய தோழற்காகச் செஞ்
சோற்றுக்கடன் கழித்தேன் தேவர்கோவுக்கு
உரைபெறு நற்கவசமுங் குண்டலமு மீந்தேனுற்ற
பெருநல்வினைப்பேறுனக்கே தந்தேன்
மருதிடை முன் தவழ்ந்தருளுஞ் செங்கண்மாலே
மாதவத்தா லொருதமியன் வாழ்ந்தவாறே.

14 வான்பெற்ற நதிகமழ்தாள் வணங்கப்பெற்றேன்
மதிபெற்ற திருவுளத்தால் மதிக்கப்பெற்றேன்,
தேன்பெற்ற துழாயலங்கற் களப மார்புந்திருப்
புயமுந்தைவந்து தீண்டப்பெற்றேன்,
ஊன்பெற்ற பழியினாலழிந்து வீழ்ந்துமுணர்வுட-
னின்திரு நாமமுரைக்கப் பெற்றேன்
யான்பெற்ற பெருந்தவப் பேறென்னையன்றி
இருநிலத்திற் பிறந்தோரில் யார்பெற்றாரே.

15 என்றுமகிழ்வுறு வணங்குமெல்லிமைந்தன் இன்புறு
வண்புறவினி லானிரையின் பின்போய்க்
கன்றுகொடு விளவெறிந்த கண்ணன்தானுங்
கண்ணனுக்குக் கட்டுரைப்பான் கடவுளுதன்
அன்றுனது கவசமுங்குண்டலமும் வாங்க அழைத்
தேனுங்குந்தியைக் கொண்டுரவவாளி
யொன்றொழியத் தொடாத வரங்கொள்வித்தேனு
முற்பவத்தினுண்மை யுனக்குணர் வித்தேனும்.

16 தக்கன்றன் மகவானவுரக வாளிதனஞ்சயனைச்
சதியாமல் சாய்வித்தேனும்
மெய்க்கருணை நின்பொருட்டால் யானேயென்று
மீண்டும்போய்த் தேர்வலவன் விசயற்கானான்
எக்கடலும் எக்கிரியுமெல்லா மண்ணுமிமையோரு
மானுடரு மெல்லாமாகி
மைக்கணிளங் கோவியர் நுண்டுகிலுநாணும்
வரிவளையு மட்டெஞ்சர் வாங்குமாலே.

---

# ಕಲಿಂಗತ್ತು ಪರಣಿ

ಇದರ ಕರ್ತೃ ಜಯಂಕೊಂಡಾರ್; ತಂಜಾವೂರು ಜಿಲ್ಲೆಯ ದೀಪಂ ಕುಡಿಯಲ್ಲಿ ಹುಟ್ಟಿದರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೦೭೦–೧೧೨೮. ಇವರು ಕುಲೋತ್ತುಂಗ ಚೋಳನ ಆಸ್ಥಾನ ಕವಿಯಾಗಿದ್ದರು. ಇವರು ಜೈನಮತಾವಲಂಬಿಗಳಾಗಿದ್ದರೂ ತಮ್ಮ ಗ್ರಂಥದಲ್ಲಿ ಶಿವಸ್ತುತಿ ವಿಷ್ಣು ಸ್ತುತಿಗಳನ್ನು ಮಾಡಿದ್ದಾರೆ. ಇದರಿಂದ ಇವರು ಮೊದಲು ಜೈನರಾಗಿದ್ದು ತರುವಾಯ ಶೈವರಾಗಿರಬಹುದೆಂದು ಕೆಲವರು ಊಹಿಸುತ್ತಾರೆ.

ಕಲಿಂಗ ಯುದ್ಧವನ್ನು ಗೆದ್ದ ಕುಲೋತ್ತುಂಗನ ಶೌರ್ಯ ಸಾಹಸ ಗಳ ವರ್ಣನೆಗಾಗಿ ಈ ಗ್ರಂಥ ರಚಿತವಾಯಿತು. ರಾಜನು ಕವಿಗೆ ಒಂದೊಂದು ಪದ್ಯಕ್ಕೂ ಒಂದೊಂದು ಹೊನ್ನಿನ ತೆಂಗಿನಕಾಯನ್ನೂ ಕವಿಚಕ್ರವರ್ತಿ ಎಂಬ ಬಿರುದನ್ನೂ ಕೊಟ್ಟು ಗೌರವಿಸಿದನು ಎನ್ನುತ್ತಾರೆ.

ಪರಣಿ ಸಾಹಿತ್ಯಜಾತಿಯಲ್ಲಿ ಕಲಿಂಗತ್ತು ಪರಣಿಯೇ ಮೊದಲನೆ ಯದು. ಇದರಲ್ಲಿ ನಾನಾ ಅಲಂಕಾರಗಳು, ನವರಸಗಳು, ಅನ್ಯಾದೃಶ ಕಲ್ಪನೆಗಳು ಇದ್ದು ಇದು ವಿದ್ವಾಂಸರ ಮೆಚ್ಚನ್ನು ಪಡೆದಿದೆ.

# கலிங்கத்துப்பரணி

## கடைதிறப்பு

1 நூதன வளவெனு மிளமுலைத்
துடியன வளவெனு நுணுகிடைச்
சாதன வளவெனு மதர்விழிக்
கடலமு தனையவர் திறமினோ.

2 புடைபட விளமுலை வளர்தொறும்
பொறையறி வுடையரு நிலைதளர்ந்
திடைபடுவது படவருளுநீ
ரிடுகதவுயர் கடைதிறமினோ.

3 சுரிகுழ லசைவுற வசைவுறத்
துயிலெழு மயிலென மயிலெனப்
பரிபுர வொலியெழ வொலியெழப்
பணிமொழி யவர்கடை திறமினோ.

4 கூடிய நன்கன வதனிலே
கொடைநர துங்க னுடலையுந்
ஓடிய நெஞ்சி னொடுவீ
ருமது நெடுங்கடை திறமினோ.

[ வேறு ]

5 விடுமி னெங்கடுகில் விடுமி னென்றுமுனி
வெகுளி மென்குதலை துகிலினைப்
பிடிமி னென்றபொருள் விளையு நின்றருள்செய்
பெடைநலீர்கள் கடைதிறமினோ.

6 ஏனதடங்க வினிவளவ துங்கனரு
ளெனமகிழ்ந் திரவி கனவினிற்
றனதடங்கண் மிசைநக நடந்தகுறி
தடவுமாதர் கடைதிறமினோ.

7 இகலிழந்தரசர் தொழுவரும்பவனி
யிரவுகந்தருள கனவினிற்
பகலிழந்தநிறை பெறமுயன்றுமொழி
பதறுமாதர் கடைதிறமினோ.

8 முனிபவ ரொத்திலராய் முறுவல் விளைத்தலுமே
முகிழ்நகை பெற்றெமை மகிழ்நர் பணித்துவர்
வாய்
கனிபவ ளத்தருகே வருதலு முத்திருங்
கயல்க ளிரண்டுடையீர் கடைதிறமின்றிறமின்.

9 இத்துயின் மெய்த்துயிலே யென்று குறித்திளைஞோ
ரிதுபுல விக்குமருந் தெனமனம் வைத்தடியிற்
கைத்தலம் வைத்தலுமே பொய்த்துயில் கூர்நயனக்
கடைதிறவா மடவீர் கடைதிறமின்றிறமின்.

[ வேறு ]

10 முருகிற் சிவந்த கழுநீரு
முதிரா விளைஞ ராருயிருந்
திருகிச் செருகுங் குழன்மடவீர்
செம்பொற் கபாடந் திறமினோ.

11 முத்துவடஞ்சேர் முகிழ்முலைமேன்
முயங்குங் கொழுநர் மணிச்செவ்வாய்
வைத்தபவள வடம்புனைவீர்
வணைபொற் கபாடந் திறமினோ.

12 கலவிக் களியின் மயக்கத்தே
கலைபோ யகன்ற தறியாமல்
நிலவைத் துகிலென் றெடுத்துடுப்பீர்
நிறைபொற் கபாடந் திறமினோ.

[ வேறு ]

13 குங்குகண் வேல்செய்த புண்களைத்
தடமுலை வெதுகொண் டொற்றியே
செங்கனி வாய்மருந் தூட்டுவீர்
செம்பொ னெடுங்கடை திறமினோ.

14 வண்கொடை மானதன் மார்புதோய்
தாதகி மாலையின்மேல் விழுங்
கண்கொடு போம்வழி தேடுவீர்
கனக நெடுங்கடை திறமினோ.

[ வேறு ]

15 அவசமுற் றுளநெகிழ்த் துயிலெகட் பவளவா
யணிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகைக் களிவரக் களிவருங்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ.

16 அஞ்சியே கயல்கெடக் கடலிற் பொருதுசென்
றணிகடைக் குழையிலே விழுவடர்த் தெறிதலால்
வஞ்சிமா னதன்விடும் படையினிற் கொடியகண்
மடநலீர் சுடர்மணிக்கடை திறந்திடுமினோ.

17 நனவினிற் சயதரன் புணரவே பெறினுநீர்
நனவெனத் தெளிவுறா ததனையும் பழையவக்
கனவெனக் கூறுவீர் தோழிமார் நகைமுகங்
கண்டபின் றேறுவீர் கடைதிறந் திடுமினோ.

[ வேறு ]

18 மெய்யே கொழுநர் பிழைநலிய வேட்கைநலிய
விடியளவும்
பொய்யே யுறங்கு மடநல்லீர் புனைபொற் கபாடந்
திறமினோ.

19 போகவமளி மயக்கத்தே புலர்ந்த தறியாதே கொழுந
ராகவமளி மிசைத் துயில்வீ ரம்பொற் கபாடந்
திறமினோ.

20 ஆளுங் கொழுநர் வரவுபார்த் தவர்தம் வரவுகாணாமற்
றாளு மனமும் புறம்பாகச் சாத்துங்கபாடந்
திறமினோ.

[ வேறு ]

21 மீனம்புகு கொடிமீனவர் விழியம்புக வோடிக்
கானம்புக வேழம்புகு மடவீர்கடை திறமின்.

22 அலைநாடிய புனனாடுடை யடைய பபற்சடு திறையா
மலைநாடியர் துளுநாடியர் மனையிற்கடை திறமின்.

23 மழலைத்திரு மொழியிற்சில வடுகுஞ்சில தமிழுங்
குழறித்தரு கருநாடியர் குறுகிக்கடை திறமின்.

[ வேறு ]

24 கலையிலாத டைமுலையி லாடவிழி
குழையி லாடவிழை கணவர்தோள்
மலையிலாடிவரு மயில்கள் போலவரு
மடநலீர் கடைக டிறமினோ.

25 களபவண்ட லிடுகலச கொங்கைகளின்
மதியெ ழுந்துகனல் சொரியுமென்
றுளகபந்திமிசை யளிகள் பந்தரிடு
மரிவைமீர் கடைக டிறமினோ.

26 சொருகு கொந்தளக மொருகை மேலலைய
வொருகை கீழலைசெய் துகிலொடே
திருவ னந்தலினு முகமலர்ந்துவரு
தெரிவை மாதர்கடை திறமினோ.

[வேறு]

27 உந்திச்சுழியின் முளைத்தெழுந்த
வுரோமப் பசுந்தா ளொன்றிரண்
டந்திக்கமலங் கொடுவருவீர்
பைம்பொற் கபாடந் திறமினோ.

28 தழுவுங் கொழுநர் பிழைநலியத்
தழுவே னென்னத் தழுவியகை
வழுவவுடனே மனங்குழைவீர்
மணிப்பொற் கபாடந் திறமினோ.

29 வேகம்விளைய வருங்கொழுநர்
விழிகள் சிவந்த படிநோக்கிப்
போகம்விளைய நகைசெய்வீர்
புனைபொற் கபாடந் திறமினோ.

[வேறு]

30 முலைமீது கொழுநர் கைநகமேவு குறியை
முன்செல்வ மில்லாத வவர்பெற்ற நிதிபோற்
கலைமீதெடாவாரு மில்லா விடத்தே
கண்ணுற்று நெஞ்சங் களிப்பீர்க டிறமின்.

[வேறு]

**31** மெய்யி லணைத்துருகிப் பையவகன் றவர்தா
மீள்வரெனக்கருதிக் கூடல்வளைத் தறவே
கையிலணைத்த மணற்கண்பனி சோர்புனலிற்
கரைய விருந்தழுவீர் கடைதிறமின் திறமின்.

[வேறு]

**32** கடலின் விடமென வமுதென மதனவேள்
கருதி வழிபடு படையொடு கருதுவா
ருடலி னுயிரையு முணர்வையு நடுவுபோ
யுருவு மதர்விழி யுடையவர் திறமினோ.

**33** இடையி னிலையறி திறமின் றுமெனவெழா
வெமது புகலிட மினியிலை யெனவிழா
வடைய மதுகர மெழுவது விழுவதா
மளக வனிதைய ரணிகடை திறமினோ.

[வேறு]

**34** முறுவன் மாலையொடு தாள மாலைமுக
மலரின் மீதுமுலை முகிழினுஞ்
சிறுநிலாவுமதி னிருநிலாவுமென
வருநலீர்கள் கடை திறமினோ.

**35** அளக பாரமிசை யசைய மேகலைக
ளவிழ வாபரண வகையெலாம்
இளக மாமுலைக ளிணைய ருமல்வரு
மியன லீர்கடைக டிறமினோ.

36 மதுர மானமொழி பதறவாள் விழி
சிவப்ப வாயிதழ் வெளுப்பவே
அதர பானமது பானமாகவறி
வழியு மாதர்கடை திறமினோ.

[வேறு]

37 பூவிரிமதுகர நுகரவும் பொருகய லிருகரை புரளவுங்
காவிரி யெனவரு மடநலீர் கனக நெடுங்கடை
திறமினோ.

[வேறு]

38 ஈடுமிளம் பிறையிற் குறுவெயர் முத்துருளக்
கொங்கை வடம்புரளச் செங்கழு நீரளகக்
காடுகுலைந் தலையக் கைவளை பூசலிடக்
கலவிவிடா மடவீர்கடை திறமின் றிறமின்.

[வேறு]

39 உபய தனமசை யவொசியுமிடை நடையைய
யொழியு மொழியுமென வொண்சிலம்
பபயமபயமென வலறநடை பயிலு
மரிவை மகளிர்கடை திறமினோ.

[வேறு]

40 காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
கலவிமடவீர் கழற் சென்னி
காஞ்சி யிருக்கக் கலிங்கங் குலைந்த
களப்போர் பாடக்கடை திறமின்.

41 இலங்கை யெறிந்த கருணா கரன்ற
னிகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்க மெறிந்த கருணா கரன்றன்
களப்போர் பாடக்கடை திறமின்.

## இராச பாரம் பரியம்

1 செண்டு கொண்டுகரி காலனொரு காலி னிமயச்
சிமய மால்வரை திரித்தருளிப் பின வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்புலிக்குறி பொறித்தது மறித்தபொழுதே.

2 கால மும்மையு முணர்ந்தருளு நாரதனெனுங்
கடவுள் வேதமுனிவந்து கடல்சூழ் புவியினின்
மேலு மன்னருள ரல்லரென வாசிபுகலாப்
புகல்வதொன்றுளது சோளராச வென்று
புகல்வான்.

3 பண்டு பாரத மெனுங்கதை பராச ரன்மகன்
பகர வெங்கரிமுகன் பரு மருப்பை யொருகைக்
கொண்டு மேருசிக ரத்தொரு புறத்தி லெழுதக்
குவலயப்பெறு தவப்பய னுரைப்ப வரிதால்.

4 பார தத்தினுள வாகிய பவித்திர கதை
பரம னற்சரிதை மெய்ப்படையு நான்மறைகளே
நேர தற்கிதனை நான்மொழிய நீயெழுதுமுன்
நெடியகுன் றின்மிசை யேயிசைவதான
கதைகேள்.

5 அதன்மு தற்கண்வரு மாதிமுதன் மாயவனெனு
மையனும்ப்ரணவ மாகவடை வேதமுமதன்
பதம்வகுக்கவரு பாதமது வும்பதமுடன்
பாதமான சிலவந்த பலவந்த வகையும்.

6 அந்த முட்டபட விருக்கும விருக்கின்றவழியே
யாகவந்தவவ் வருக்கமும் வருக்கமுழுதும்
மந்த வட்டசமு மொட்டரிய சங்கிதைகளும்
வாய்மை வேதியர்கடாம் விதியெனும்
வகையுமே.

7 கமல யோனிமுத லாசவரு முட்கண் மாயிற்
காவன் மன்னவர்க ளாகிவருகின்ற முறையா
லமல வேதமிது தானுமிதி லாரண நிலைத்
தமல னேயபயனுக வறிகென் றருளியே.

8 அரணி வேள்வியிலெகப்படு மகண் மருவா
யரவணைத் துயிலு மாதி முதலாகவடயன்
றரணி காவலை யுஞ்செல மொழிந்து முனிவன்
றனெழுந்தருள மாமுனி மொழிந்தபடியே.

9 ஆதி மாலமல நாபிகம லத்த யனுதித்
தவன்ம ரீசி யெனுமண்ணலை யளித்தபரிசுங்
காதல் கூர்தரு மரீசிமக னாகி வருமக்
காசி பன்கதி ரருக்கனை யளித்த பரிசும்.

10 அவ்வருக்கன்மக னாகிமனு மேதினிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வருக்கமும் வியப்பமுறை செய்த பரிசு
மிக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும்.

11 இக்கு வாகுவின் மகன் புதல்வனை யுரவோ
னிகலு ரஞ்செய வருஞ்செய புரந்தரனெனுஞ்
சக்கு வாயிர முடைக்களிறு வாகனமெனத்
தானிருந்துபொரு தானவரை வென்றசயமும்.

12 ஒருதுறைப் புனல் சினப்புலியு மானுமுடனே
யுண்ணவைத்தவுர வோனுலகில் வைத்தவருளும்
பொருது றைத்தலை புகுந்து முசுகுந்த னிமையோர்
புரமடங்கலு மரண்செய்து புரந்தபுகழும்.

13 கடல்க லக்க வெழுமின்னமுது தன்னையொருவன்
கடவுள் வானவர்க ளுண்ணவருள் செய்த கதையு
முடல்க லக்கற வரிந்து தசையிட்டு மொருவ
னொருது லைப்புறவொ டொக்க நிறைபுக்கபுகழும்.

14 சயாதி ராசன் முதலாக வருசோழன் முனைநாட்
சோழமண்டல மமைத்தபிற கேழுலகையு
மிராச கேசரி புரந்துபரகேச ரிகளா
யிருவ ராணைபுலி யாணையென நின்றபுகழும்.

15 காலனுக்கிது வழக்கென வுரைத்த வனுங்
காவிரிப் புனல் கொணர்ந்தவவ னும்புவனியின்
மேலனைத் துயிரும் வீவதிலையாக நமன்மேல்
வென்றிகொண்ட வனுமென்றிவர்கள் கொண்ட
விறலும்.

16 புலியெ னக்கொடியி லிந்திரனை வைத்தவனும்
புணரியொன் றினிடை யொன்றுபுக விட்ட
வனும்
வலியினிற் குருதியுண் கெனவளித்த வவனும்
வாதராசனை வலிந்துபணி கொண்டவவனும்.

17 தூங்கு மூன்றெயிலெறிந்த வவனுந் திரண்மணிச்
சுடர்வி மானமது வான்மிசை யுயர்த்தவவனுந்
தாங்கு பாரத முடிப்பளவு நின்று தருமன்
றன்கடற்படை தனக்குதவி செய்தவவனும்.

18 களவழிக்குநகை வேல்விழி பிலத்தின் வழியே
தணிந டந்துரகர் தங்கண்மணி கொண்டவனுங்
களவழிக்கவிதை பொய்கையுரைசெய்யவு தியன்
கால்வ ழித்தளையை வெட்டியர சிட்டவனும்.

19 என்று மற்றிவர்க டங்கள்சரி தங்கள்பலவு
மெழுதி மீளவதன் மேல்வழுதி சேரன்முடியத்
தன்ற னிக்களி றணைந்தருளி வீரமகடன்
றனதடங்களோடு தன்புய மணைந்த பரிசும்.

[வேறு]

20 தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்
றொடரவந்திலா முகரியைப் படத்
தெழுது கென்றுகண் டிதுமி கைக்கணென்
றிங்க ழிக்கவே யங்கழிந்ததும்.

21 தத்து நீர்வராற் குருமி வென்றதுந்
தழுவு செந்தமிழ்ப்பரிசில் வாணர்பொன்
பத்தொடாறு நூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப்பாலை கொண்டதும்.

22 ஒருவர் முன்னோர் நாளொருவர் பின்னோர்நா
ளுதகை மன்னரே மதுரை மன்னரென்
றிருவர் தம்மையுங் கிழிகள் சுற்றுவித்
தெரிவிளக்குவைத் திகல்விளைத்ததும்.

23 வேழ மொன்றுகைத் தாளி விண்ணின்வாய்
விசையடங்கவு மசைய வென்றது
மீழ முந்தமிழ்க் கூடலுஞ்சிதைத்
திகல்கடந்தகோ திசைபரந்ததும்.

24 சதய நாள்விழா வுதியர் மண்டலந்
தன்னில் வைத்தவன் றணியோர் மாவின்மே
லுதய பானுவொத் துதகை வென்றகோ
னொருகை வாரணம் பலக வர்ந்ததும.

25 களிறு கங்கை நீருண்ண மண்ணையிற்
காய்சினத்தொடே கலவுசெம்பியன்
குளிறு தெண்டிரைக் குரைக டாரமுங்
கொண்டு மண்டலங் குடையுள் வைத்ததும்.

26 கம்பி லிச்சயத் தம்ப நட்டதுங்
கடியரண் கொள்கல் யாணர் கட்டறக்
கிம்பு ரிப்பணைக் கிரியு கைத்தவன்
கிரிக ளெட்டினும் புலிபொ றித்ததும்.

27 ஒருக ளிற்றின்மேல் வருக ளிற்றையொத்
துலகுயக்கொளப் பொருது கொப்பையிற்
பொருகளத்திலே முடிக வித்தவன்
புவிக விப்பதோர் குடைக வித்ததும்.

[வேறு]

28 பனுவலுக்கு முதலாய வேத நான்கிற்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழைய தங்கண்
மறுவினுக்கு மும்மடி நான் மடியாஞ் சோழன்
மதிக்குடைக்கீழறந் தளிர்ப்ப வளர்த்தவாறும்.

29 குந்தளரைக் கூடற் சங்கமத்து வென்ற
கோனபயன் குவலயங்காத் தளித்த பின்னை
யிந்த நிலக்குலப்பாவை யிவன்பாற் சேர
வென்ன தவஞ்செய் திருந்தாளென்னத்
தோன்றி.

30 எவ்வளவுந் திரிபுவன முளவாய் நிற்கு
மெவ்வளவுங் குலமறைக ளுளவாய்த் தோன்று
மவ்வளவுந் திகிரிவரை யளவுஞ் செங்கோ
லாணை செலவபயன் காத்தளிக்குமாறும்.

[வேறு]

31 இப்புறத் திமய மால்வரையின் மார்பினகலத்
தெழுதினனெழுது தற்கரிய வேதமெழுதி
யப்புறத்தனது தொன்மரபு மம்மரபின்மே
லுரைசெய் பல்புகழு மொன்றுமொழியாத
பரிசே.

32 எழுதி மற்றதுரை செய்பவர்கள் செய்பிழையெலா
மெமர் பொறுக்கவென விப்படி முடித்த விதனைத்
தொழுது கற்றனனெனத் தொழுது சொல்லுமளவிற்
சோழ வர்சரிது சொன்னபரி சொன்னவழகே.

[வேறு]

33 நாயகமாங் குலமடந்தை மன்னவயான்
றன்னுடைய மரபு கேட்டேற்
கேயனையான் பெற்றெடுத்த வப்பொழுது
மிப்பொழுதொக் கிருந்ததில்லை.

34 உலகையெலாங் கவிக்கின்றவொரு கவிகைச்
சயதுங்கன் மரபின் கீர்த்தி
யுலகையெலாங் கற்றுய்ம் மினகிலஃ
தங்காப்பானவனே யென்ன.

---

# ಮನೋನ್ಮಣೀಯಂ

ಇದರ ಕರ್ತೃವಾದ ಸುಂದರಂಪಿಳ್ಳೈಯವರು ತಿರುವನಂತಪುರದ ಮಹಾರಾಜಾ ಕಾಲೇಜಿನಲ್ಲಿ ತತ್ವಶಾಸ್ತ್ರದ ಅಧ್ಯಾಪಕರಾಗಿದ್ದರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೧೯ ನೆಯ ಶತಮಾನ. ಆಧುನಿಕ ತಮಿಳು ನಾಟಕಗಳಲ್ಲಿ ಇದು ಮೊದಲ ಪಂಕ್ತಿಗೆ ಸೇರುತ್ತದೆ. ಲಾರ್ಡ್ ಲಿಟನ್ ಅವರ 'ದಿ ಸೀಕ್ರೆಟ್ ವೇ' ಕೃತಿಯನ್ನು ಅವಲಂಬಿಸಿ ಈ ನಾಟಕ ರಚಿತವಾಗಿದೆ. ಈ ನಾಟಕದಲ್ಲಿ ಗೋಲ್ಡ್‌ಸ್ಮಿತ್ ಅವರ 'ದಿ ಹರ್ಮಿಟ್' ಅನುವಾದವಾಗಿ ಶಿವಗಾಮಿ ಚರಿತ್ರ ಎಂಬ ಹೆಸರಿಂದ ಸೇರ್ಪಡೆಯಾಗಿದೆ. ಇಲ್ಲಿ ಎತ್ತಿ ಕೊಟ್ಟಿರುವುದು ಇದೇ ಭಾಗವನ್ನು.

ಮಲೆಯಾಳ ಪ್ರಾಚುರ್ಯದ ನಾಡಿನಲ್ಲಿ ಹುಟ್ಟಿ ಬೆಳೆದ ಇವರು ತಮಿಳಿನಲ್ಲಿ ಇಂಥ ಶ್ರೇಷ್ಠನಾಟಕವನ್ನು ಬರೆದಿರುವುದು ಶ್ಲಾಘನೀಯವಾಗಿದೆ. ಈ ನಾಟಕದಲ್ಲಿ ಪ್ರತಿಪಾದಿತವಾಗಿರುವ ಮುಖ್ಯ ವಿಷಯ ಜೀವಾತ್ಮ ಪರಮಾತ್ಮ ಐಕ್ಯ.

# மனேன்மணீயம்

## சிவகாமி சரிதம்

(குறள்வெண் செந்துறை)

1 "வாழிய நின்மலரடிகள்! மௌனதவமுனிவ!
மனமிரங்கி அருள்புரிந்தோர் வார்த்தை
யெனக்கீயிற்
பாழ்பட விதியிற் சுழன்று பாதை விடுத்தலையும்
பாவி யொருவளை அளித்த பலன் உறுவை
பெரிதே.

2 சாரும்வரை குறியாது தன்நிழலை யளக்குந்
தன்மையென நான்நடக்கத் தான்வளரும் அடவி.
ஆரிருளில் இனிநடக்க ஆவதிலை. உடலை
பாறும்வகை வீடுளதேல் அடையும் நெறி
அருளாய்."

3 என்ற மொழிகேட்ட முனியெதிர் விடையங்கி
யம்பும் :—
"ஏகாந்தப் பெருங் ககனம்; இதில் உலகர்
அணையார்;
சென்றுறைய மடமுமிலை; திகழ் வெளி என் வீடு;
சிந்தையற நொந்தவர்க்குச் சேரவிலை பந்தம்.

4 அறங்கிடந்த சிந்தையராய் ஆசையெலாந் துறந்த
அதிவீர ரொழிய எவராயினும் இங்கடையார்.
உறங்க அவர் பணிப்பாயும் பூவணையும் உன்னார்
உண்ணவெனிற் பாலமிழ்தும் ஒன்ருக மதியார்.

5 ஆதலில் என்பால் உறுவது யாதெனினும் மைந்த!
அன்புடன் நீயென் பிறகே அணையில் அமர்ந்துனை தாம்
வேதனையும் மெய்ச்சலிப்பும் விட்டகல இருளும்
விடியும் உடன்மனம் நெருக்கில் வேண்டுமிடம் ஏகாய்."

6 என்றுரைத்த இனிய மொழியிரு செவியுங்குளிர,
ஏதோ தன்பழ நினைவும் எழஇரு கண்பனித்து
நன்றெனவே தலைபடிவாய் நின்ற மகன் வணங்கா
நன்முனிவன் செல்வழியே நடந்து நனிதொடர்ந்தான்.

7 இந்திர நற்சாலவித்தை யெதுவோ வொன்றிழைக்க
இட்டதிரை யெனத் திசைகளெட்டும் இருள் விரிய
அந்தரத்தே கண்சிமிட்டிச் சுந்தர தாரகைகள்
அரிய ரகசியந்தமக்குள் அறைந்து நகைபுரிய;

8 என்புருகப் பிணைந்த அன்றில் இணை சிறிதுபிரிய
ஏங்கியுயிர் விடுப்பனபோல் இடையிடையே கூவ,
அன்பு நிலையார் அறிவர் என்பனபோல் மரங்கள்
அலர் மலர்க்கண்ணீரருவி அகமுடைந்து தூவ;

9 விந்தை நடப்பது தெரிக்க விளிப்பவரில் வாவல்
விரைந்தலைய மின்மினியும் விளக்கொடு பின்னுட
இந்தவகை அந்தியைமுன் ஏவி இரவென்னும்
இறைவியும் வந்திறுத்தனள் மற்றிணை ஓருயிர் வாட.

10 பொறியரவின் சூடிகையுறு பொலன் மணியின்
ஒளியும்,
பொலிமதத் திண்கறையடியின் புலமருப்பின்
ஒளியும்,
அறிவரிய சினவுழுவை அழல்விழியின் ஒளியும்,
அலகிலாப் அடவியிடை அயல்காட்டும்
ஒளியே.

11 செறிவரிய வூசிமுழி பின்தொடரும் நூல்போற்
போயாரின் மனம் இறந்து பின்தொடரு
மைந்தன்,
அரியபுகர் இடையகற்றி அன்பொடழைத்தேகும்
அம்முனிவன் அடியன்றி அயலொன்றும்
அறியான்.

12 ஒருங்கார நிரைமுளரியுழைமொய்த்துக்கி நுழைந்தும்,
உயர்மலையின் குகைகுதித்தும் ஓங்கார ஒலியே
கருங்கான நதிபலவுந்தாண்டி அவரடைந்தார்
சார்பிலர்க்குத் தனித்துணையாந் தவமுனிவன்
இடமே.

13 நேயமுடன் எவ்வழியும் நேர்ந்தவரைத் தன் நுண்
திறவு தலினைத் தழைக்கும் நெருப்பொன்றும்
அன்றி
வாயிலினைப் பூட்டென்ன மதிலென்ன வழங்கும்
மனையென்னும் பெயர்க்குரிய மரமொன்றும்
இன்றி.

**14** நின்ற தனியிடம் இவர்கள் நேர்ந்தவுடன் முனிவன்
நெருப்பினும் எழுப்புதற்கு நிமல விறகடுக்கி
ஒன்றிய மெய்ப்பத்தரில் தன்னுளம் கூசி யொருசார்
ஒதுங்குகின்ற மைந்தன் அகமுவப்ப இவை
யுரைக்கும் :—

**15** " இனி நடக்க வழியுமில்லை இனித்துயரும் இல்லை
இதுவே நம் இடம் மைந்த ! இக்கனலின் அருகே
பணிமொழியும் வழிநடந்த பணிப்பகல இருந்து
பலமூலமிது புசிக்கிற் பறக்கும் உனதிளைப்பே.

**16** தந்நாவில் ஒருவிரலைத்தாண்ட அறியாமற்
சாகரமும் மலைபலவுந்தாண்டி அலைகின்றார்.
என்னே இம்மனிதர் மதி ! " என நகைத்து முனிவன்
இனியகந்தமுதல் அனந்தஇனம் பகுத்திருந்
தான்.

**17** இருந்தமுனி " வருந்தினவ ! எதுவது கூச்சம் ?
இருவருமே யொருவரெனில் எவர்பெரியர்
சிறியர் ?
திருந்த அனல் அருகில்இனிச் செறிந்துறைதி மைந்த !
சேர்ந்தார்க்குக் களிப்புதவும் சேரார்க்குப்
பணிப்பே."

**18** என இரங்கி யிரண்டுமுறை யியம்பியுந்தன் அருகே
ஏகாமல் எதிரொன்றும் இசையாமல் தனியே
மனம்இறந்து புறம்ஒதுங்கி மறைந்துவறி திருந்த
மகன்மலைவு தெளிந்து வெளிவரும் வகைகள்
பகர்ந்தான்.

19 பகர்ந்த நயமொழி சிறிதும் புகுந்ததில்லை செவியில்:
பாதிமுக மதியொருகைப்பதும மலர்மறைப்பத்
திகழ்ந்த சுவர் ஓவியம்போல் இருந்தவளை நோக்கி
சிந்தைநனி நொந்துமுனி சிறிது கருதிடுவான்.

20 செந்தழலும் அந்தவெல்லை திகழ்ந்தடங்கி யோங்கி
திகைக்களவி பிடித்தலைக்குஞ் சிறுபூளை யெனவே
விந்தையொடு நடம்புரிந்து வீங்கிருளை வாங்கி
மீண்டுவர விடுத்தெடுத்து விழுங்கி விளங்
கினதே.

21 மொழியாதும் புகலாது விழிமாரி பொழிய
முகங்கவிழவதிந்த குறிமுனிநோக்கி வினவும்:—
"எழிலாரும் இளமையினில் இடையூறுதிகளால்
இல்லம் அகன்றிவ்வுருவம் எடுத்திவண்
வந்தனையோ?

22 ஏதுனது கவலை? உளத் திருப்ப தெனக்கோதாய்
இழந்தனையோ அரும்பொருளை? இழந்தனரோ
நண்பர்?
காதல் கொளநீ விழைந்தமாது பெருஞ்சூதாய்க்
கைவிடுத்துக் கழன்றனளோ? மெய்விடுத்துக்
கழறாய்.

23 ஐயோ இவ்வையகத்தில் அமைந்த சுகம் அனைத்தும்
அழலால் இங்கெழுந் தடங்கு நிழலாக நினையாய்
கையாரும்பொருள் என்னக்கருதி மணல்வங்கையைக்
காப்பதெலாம் இலவுகிளி காத்தலினும் வறிதே.

24 நண்பர் உறவினர்கள் நமைநாடிப் புறவாடல்
நறுநெய்யுறு குடத்தெறும்பு நண்ணல் என
எண்ணாய்!
பெண்கள் அகக்காதலெலாம் பேய்முயற் கொம்பே!
பெருங்கபடம் இந்நிலமே பிறக்கும்
அவருடலம்!"

25 வரியும் உளம்நொந்தடிகள் இசைத்த வசையுட்
கொண்டு
மதிலன் நினைவு விழித்தெழுந்தவன் போல்
விழித்து
விரிவெயிலில் விளக்கொளியும் மின்மினியிற் கண்ணும்
வெளிப்பட்ட கள்வனும்போல் வெட்கி முகம்
வெளுத்தான்.

26 இசைத்த வசைச்செயலுணர் அன்னைமுகம் நோக்கி
இருந்தயதி யிக்குறிகண்டுழம்பூ தன்னெய்தி
விசைத்திடப்பூர் வரியெழுப்பிமீண்டும் அவன்நோக்க
வேஷ ரகசியங்களெலாம் வெட்டவெளியான.

27 நின்மல விபூதியுள்ளே பொன்மய மெய்தோன்றி
நீறுபடி நெருப்பெனவே நிலவியொளிவிரிக்கும்.
ஒண்மைதிகழ் குருவிழிக்குள் உட்கூசி யொடுங்கும்
உண்மைபெறு கண்ணிணையும் பெண்மையுருத்
தெரிக்கும்.

28 கூசுமுகம் நாணமொடு கோணியெழில்வீச
குழற்பாரஞ் சரிந்துசடைக்கோல மழித்தொழிக்
கும்.
வீசுலையின் மூக்கெனவே விம்மிய வெய்துயிர்ப்பு
வீங்கவெழுகொங்கை புனைவேடம் முழுதழிக்கும்.

29 இவ்விதந் தன்மெய்விளங்க இருந்தமகள் எழுந்தே
இருடிபதந் தலைவணங்கி யின்மொழியங் கியம்பும் :—
"தெய்வமொடு நீவசிக்குந் திருக்கோயில் புகுந்த
தீவினையேன் செய்த பிழைபொறுத்தருள்வை முனியே!

30 மண்ணுலகிற் காவிரிப்பூ மாநகரிற் செல்வ
வணிககுல திலகமென வாழ்வன் ஒருமங்கை.
எண்ணரிய குணமுடையாள். இவள் வயிற்றில் உதித்தோர்
இருமகளிர் ஒருபுருடரென்ன அவர்மூவர்.

31 ஒப்பரிய இப்புருடர்க் கோர்புதல்வர் உதித்தார்.
ஒருத்தி மகள்யான்பாவி. ஒருத்தி முழுமலடி.
செப்பரிய அம்மலடி செல்வமிக வுடையாள்.
செகமனைத்தும் அவள்படைத்த செல்வமென மொழிவர்.

32 உடல்பிரியா நிழல்போல ஆகிய அப்புதல்வர்
உடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன்.
அடல்பெரியர் : அருள்உருவர் : அழகில் வடிவுடையர்.
அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள்!"

33 உரைத்தமொழி கேட்டிருடி யுடல்புளகம்மூடி
ஊறிவிழிநீர் வதனம்ஒழுக அஃதொளிக்க
சரிக்கவிற கெடுப்பவன்போல் எழுந்து நடந்திருந்தான்
இளம்பிடியுந் தன்கதையை யெடுத்தனள் முன்தொடுத்தே.

34 "மலடி சிறுதாய் படைத்த மதிப்பரிய செல்வம்
மடமகளென் றெனக்களித்தாள் மயங்கிஅதில் மகிழ்ந்து
தலைதடுமாறிச் சிறியதம்பியனது நிலையுந்
தலைவனெனுந் தன்மையையும் தகைமையையும் மறந்தேன்.

35 குறிப்பாயுள்ளுணர்த்தியும் யான்கொள்ளாது விடுத்தேன்.
குறும்புமதியால் எனதுகுடி முழுதுங் கெடுத்தேன்.
வெறுப்பாக நினைந்தென்மேல் வேதனைபட்டவரும்
வெறும்பாழ் றென் னுள்ளமென விட்டு விலகினரே.

36 பொருள்விருப்பிற் குலவிருப்பிற்பொலம் விரும்பி வந்தோர்
பொய்க்காதல் பேசினதோ புகலில் அளவில்லை.
அருள்அரும்பி யெனைவிரும்பி யாளும் எனதிபர்
அவரொழிய வேறிலை யென்றறிந்தும் அயர்ந் திருந்தேன்.

37 ஒருவாரம் ஒருமாதம் ஒருவருடகாலம்
ஓயாமல் உன்னியழிந்தேன். உருவங்காணேன்.
திருவாருஞ் சேடியர்க்குச் செப்ப அவர்சேருந்
திசைதேயம் எவர்அறிந்து தெரிப்பரெனச் சிரித்தார் :—

38 ஆயத்தார்கூடி யென்னையாயவுந்தான் ஒட்டார்.
அகல்வேலையோ மாறியும் அதிகாராக்கிரமங் கெடுத்து.
நீயைத்தானே யுமிழுஞ்சிறந்த கல்மதியும்.
திரிந்துலைந்தார் உயிர்தின்னும் நமனென்ன.

39 கண்டவரைக் கேட்டவரைக் காசினியில் தேடிக்
கண்டிடச்சென்றே அங்கங்கம் பட்டமானைத் தென்க!
உண்டெனத்தர்யூக நெறியுரைப்பவரே யல்லால்
உள்ளபடி கண்டறிந்தோர் ஒருவரையுங் காணேன்.

40 உண்டெனிலோ கண்டிடுவேன்; இல்லையெனில் ஒல்லை.
உயிர்விடுதலே நலம் என்றுன்னி யுளந்தேறி
கண்டுயிலும் இல்லிடந்திகதுவ, வெளியோடும்
கணக்கா இவ்வேட மொடுகரந்து புறப்பட்டேன்.

41 தீர்த்த குலமூர்த்தி தலம்பார்த்துடலஞ் சலித்தேன்.
திருக்கூறு பற்குருக்கள் மடந்திரிந்துமனம் அலுத்தேன்.
வார்த்தைகத்தும் வாதியர்தம் மன்றனைத்தும் மறிய.
மறுத்துறங்கும் யோகியர் போய்வாழ் குகையும் பாழே.

42 மான்மறவாக் கலையினமே! வாழ்பிடி விட்டகலா
மதம்பெருகு மாகுலமே! வன்பிகமே! சுகமே!
நான்மறவாநாதனை யெஞ்ஞான்றும் அறிவீரோ?
நவில்வீர் எனப்பின்தொடர்ந்து நாளனந்தங் கழித்தேன்.

43 இவ்விடமும் அவ்விடமும் எவ்விடமும் ஓடி
இதுவரையுந் தேடியும் என் அதிபரைக்
கண்டிலனே.
எவ்விடம்யான் நண்ண இனி? எவ்விடம் யான் உண்ண?
இக்காயம் இனியெனக்குமிக்க அருவருப்பே.

44 ஐயோ என்னுள்ள நிலை அறியாரோ இனியும்?
ஆசைகொண்டுநான் அலைந்ததத்தனையும்
பொய்யோ?
பொய்யேதான் ஆயிடினும் புனிதர் அவர் தந்த
போதமலால் வேறெனக்கும் ஏதும் அறி
வுளதோ?

45 நல்ல அருளுடையர் எனநம்பி இதுவரையும்
நான் உழைப்பதறிவரெனில் ஏன் எதிர்
வந்திலரோ?
இல்லையெனில் என்னையும் இவ்வுலகம் அனைத்தும்
எந்நலமுங் கொல்லவென எடுத்த நடிகாடே.

46 என்னுடைய உயிர்த்துணைவர் எண்ணரிய அருளில்
ஏதோ சிற்சாயையுனதிடத் திருத்தல்கண்டு
மன்னுதவ மாமுனிவ! மனத்துயரம் உன்பால்
வகுத்தறிந்தேன் சிறிது. மறுசாக்ஷியில்லை.

47 இனியிருந்து பெறும்பயனென்? இவ் அழலே சதி"
யென்று
எரியும் அழலெதிரே நின்றிசைத்த மொழி
முழுதும்
முனிசெவியிற் புகுமுனமே மூதுருவம் விளக்கி
முகமலர்ந்தங் கவளெதிரே முந்திமொழி
குளறி—

48 “சிவகாமி யான் உனது சிதம்பரனே” என்னச்
செப்புமுனம் இருவருமற்றோருருவம் ஆனார்!
எவர்தாமுன் அணைந்தனர் என்றிதுகாறும்
அறியோம்.
இருவரும் ஒன்றாயினர் என்றே அறையுஞ்சுருதி.

49 பரிந்துவந்து பார்வதியும் பாரதியுங் கஞ்சப்
பார்க்கவியும் யார்க்கிதுபோல் வாய்க்குமென
வாழ்த்த,
அருந்ததியும் அம்ம! இஃதருங்கதி யென்றஞ்ச
ஆர்வம் உலகார்கவென ஆரணங்கள் ஆர்த்த.

50 ஆழியுடை சூழுலகம் யாவும் நலம்மேவ!
அறத்துறை புகுந்துயிர்கள் அன்புவெள்ளம்
மூழ்க!
பாழில் அலைவேனுடைய பந்தனைகள் சிந்த
பரிந்தருள் சாந்தமை நிரந்தரமும் வாழ்க!

---

# ಪೆರುಂಕತ್ತೈ

ಕೊಂಗುನಾಡಿನ ಕಿರಿಯರಸುಗಳಲ್ಲಿ ಒಬ್ಬನಾದ ವಿಜಯಮಂಗಲದ ಕೊಂಗುವೇಳಿರ್ ಎಂಬಾತನು ಇದನ್ನು ರಚಿಸಿದನು. ಇದು ಶಬ್ದ ಸ್ವಾರಸ್ಯ ಅರ್ಥಸ್ವಾರಸ್ಯಗಳಿಗೆ ಪ್ರಖ್ಯಾತವಾಗಿದೆ. ಪೈಶಾಚೀಭಾಷೆಯಲ್ಲಿರುವ ಗುಣಾಢ್ಯನ ಬೃಹತ್ಕಥೆಯೂ ಸಂಸ್ಕೃತದಲ್ಲಿರುವ ದುರ್ವಿನೀತನ ಗ್ರಂಥವೂ ಇದಕ್ಕೆ ಮೂಲ. ಪೆರುಂಕತ್ತೈಯಲ್ಲಿ ಈಗ ನಮಗೆ ಉಳಿದು ಬಂದಿರುವುದು ಐದು ಕಾಂಡಗಳು ಮಾತ್ರ. ಕುರುಕುಲದಲ್ಲಿ ಹುಟ್ಟಿ ಕೌಶಾಂಬಿಯ ದೊರೆಯಾದ ಸದಾನಿಕನ ಮಗನಾದ ಉದಯನನ ಚರಿತ್ರೆಯೇ ಈ ಗ್ರಂಥದವಸ್ತು.

ಈ ಕವಿ ಒಳ್ಳೆಯ ಕಲೋಪಾಸಕ. ಇವನಿಗೆ 'ಅರುಂಕಲೈ ವಿನೋದನ್' ಎಂಬ ಹೆಸರಿತ್ತು. ಇವನು ಹಲವು ವಿದ್ವಾಂಸರಿಗೆ ಆಶ್ರಯ ಕೊಟ್ಟು, ಅವರಿಗೆ ಯಾವ ಕೊರತೆಯೂ ಇಲ್ಲದಂತೆ ನೋಡಿಕೊಂಡು, ಗ್ರಂಥಕಾಲಕ್ಷೇಪ ಮಾಡುತ್ತಿದ್ದನು. ಅವರ ನೆರವಿಯಲ್ಲಿಯೇ ಯಾವಾಗಲೂ ಕಾಲ ಕಳೆಯುತ್ತಿದ್ದುದರಿಂದ ಇವನಿಗೆ ಕವಿತಾಶಕ್ತಿ ಮೊಳೆಯಿತು.

உ

# பெருங்கதை

## வத்தவ காண்டம்

## 13. முகவெழுத்துக்காதை

(உதயணன் செயல்)

விரைந்தனர் பெயர வேந்தன் காம
சரம்பட நொந்து தளர்வுட னவனோர்
பள்ளியம்பலத் துள்ளினி திருந்து
மேவத் தகுமுறைத் தேவியர் வருகென
5 ஏவற் சிலதியர் தாமவர்க் குரைப்பக்

(தேவியர் இருவரும் உதயணன்பால் வருதல்)

காவல் வேந்தன் கரைந்ததற் கயிர்த்து
மேவுகந் துகத்தியைக் கோயிலுண் மறைத்து
மறவி றேவிய ரிருவரும் வந்து
திருவமர் மார்பனைத் திறத்துளி வணங்கலிற்

(தோழியரை உதயணன் வருவித்து வினாதல்)

10 பெருகிய வனப்பிற் பேணுந் தோழியர்
புகுதுக வென்றலும் புக்கவ ரடிதொழச்
சுற்றமும் பெயருஞ் சொல்லுமி னீரென
முற்றிழை மாதரை முறைமுறை வினவலின்
மற்றவ ரெல்லா மறுமொழி கொடுப்பக்

(உதயணன் வாசவதத்தையை வினாதல்)

15 கொற்ற வனுரைக்கும் பொற்றொடித் திரளினைப்
பாரான் பார்த்தொரு பைந்தொடி நின்னொடு
வாரா தொழிதல் கூறெனக் கூறலும்

(வாசவதத்தையை நினைந்துரைத்தல்)

ஒழிந்த மாதர்க் குரைப்பதை யுண்டெனிற்
றனித்து நீகண் டருள வைச்கு ளென்னெனப்

(உதயணன் கூறுதல்)

20 படைமலி நயனங் கடைசிவப் பூரு
திறனவண் மொழியொடு தெளிந்தன ளாகிப்
பற்று மன்னன் படைத்தவும் வைத்தவும்
உற்றவளறியு முறைமையிற் றெளிந்தேன்
மதிவே றில்லென வாசவதத்தையும்
25 கரும முன்னிக் குருகில்....................................................

..........................................................................................................

(உதயணன் மானனீகையை வினவுதல்)

பூக்கமழ் குழலி புகுந்தடி வணங்கலின்
நோக்கினனாகி வேற்படை வேந்தன்
பைந்துணர்த் தொடையற் பாஞ்சாலராசற்கு
மந்திர வோலையும் வழக்கறை காவலும்
30 தந்திர நடாத்தலுந் தகையுடைக் கோலம்
அந்தப் புரத்திற் கணிதலு மெல்லாம்
நின்னைச் சொல்லுவர் நன்னுதல் பெயரும்
துன்னருஞ் சுற்றமு முன்னுரை யென்றலும்

(மானனீகை கூறல்)

வாட்டிறல் வேந்தனை வணங்கித் தன்கை
35 கூட்டின ளாகி மீட்டவண் மொழிவோள்
கோசலத்தரசன் மாபெருந் தேவி
மாசில் கற்பின் வசுந்தரி யென்னும்
தேனிமிர் கோதை சேடியேன் யான்

மானனீகை யென்பதென் னுமம்.
40 எம்மிறை படையை யெறிந்தன னோட்டிச்
செம்மையிற் சிலதியர் தம்மொடுஞ் சேரப்
பாஞ்சாலரசன் பற்றிக் கொண்டு
தேன்றோர் கூந்தற்றேவியர் பலருளுந்
தன்னமர் தேவிக்கீந்த பின்றை
45 வண்ணமகளா யிருந்தனெ னன்றி
அருளிய தியாது மறியே னியானெனக்
கடல்புரண் டெனப்பயந் தழுதன ணிற்ப
( உதயணன் செயல் )
வாகைவேந்தன் மதித்தன ளுகிக்
கேளுடை முறையாற்கிள ரொளிவனப்பின்
50 வாசவதத்தைக்கும் வண்ணமகளாய்
நாளும் புனைகென நன்னுதல் பெயர்ந்தவள்
( மானனீகை செயல் )
அடிமுதற் றொட்டு முடியள வாகப்
புடவியினறியாப் புணர்ப்பொடு பொருந்தி
ஓவிய ருட்கு முருவக் கோலத்
55 தேவியைப் புனைந்தபின் மேவிய வனப்பொடு
( உதயணன் செயல் )
காவலற் காட்டக் கண்டன னாகி
அழித்தலங் கார மறியா ளிவளெனப்
பழித்தியான் புனைநெறி பாரெனப் புனைவோன்
பற்றிய யவன பாடையி லெழுத்தவள்
60 கற்றனளென்றெடுத் துற்றவ ருரைப்பக்
கேட்டன னுதலிற் கோற்றொடி நுதன்மிசைப்
பூந்தாதோடு சாந்துறக் கூட்டி

ஓடியா விழுச் சீருதயண னோலை
கோடியோர் மருங்குற் குயின்மொழிச் செவ்வாய்
65 மானனீகை காண்க சேணுயர்
மாடமீமிசை மயிலிறை கொண்டென
ஆடன் மகளிரொ டமர்ந்தொருங் கீண்டி
முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவினை யாட்டினாட் பாவைதன் முகத்துச்
70 சிந்தரி நெடுங்கணென் னெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றே னவ்வழ லவிக்குமா மருந்து
கோற்றேன் கிளவிதன் குவிமுலை யாகும்
பந்தடி தானுறப் பறையடி யுற்றவென்
75 சிந்தையு நிலையுஞ் செப்புதற் கரிதெனச்
சேம மில்லாச் சிறுநுண் மருங்குற்
காதார மாகி யதனொடு தளரா
அருந்தனந் தாங்கி யழியுமென் னெஞ்சிற்
பெருந்துயர் தீர்க்கு மருந்து தானே
80 துன்றிய வேற்கட் டொழிலு மெய்யழகும்
பைங்கொள் கொம்பாய்ப் படர்தரு மிந்நோய்
ஆழ்புனற் பட்டோர்க் கரும்புணை போலச்
சூழ்வளைத்தோளி காமநற் கடலிற்
றுழவுறாமற் கொள்க தளர்ந்துயிர்
85 சென்றாற் செயன்முறை யொன்றுமி லன்றியும்
அடுக்கிய விளமை தலைச் செலினுந்தரக்
கிடைப்பதி லிரப்போர்க் களிப்பது நன்றென
நினைத்த வாசக நிரப்பின் றெழுத
இடத்தள வின்மையிற் கருத்தறி வோர்க்குப்

90 பரந்துரைத் தென்னை பாவையிக் குறை
இரந்தனெ னருளென விறைமக னெழுதி
மெல்லியற் கொத்த வினையெனப் புகழ்ந்து
புல்லினன் றேவியைச் செல்கென விடலும்

(வாசவதத்தையின் முகவெழுத்தை மானனீகை காணல்)

கோயில் குறுக வாய்வளை யணுகலும்
95 காவலன் புனைந்தது காணெனக் கண்ட
காசறு சிறப்பிற் கோசலன் மடமகள்
வாசக முணராக் கூசின ளாகிப்
பெருமக னெழுதிய பேரலங் காரத்
திருமுக மழகுடைத் தெனமருட் டினளாய்
100 உட்கு நாணு மொருங்குடந் தலைய
நற் பலகூறி யப்பகல் கழிந்தபின்

(மானனீகை எழுதி விடுதல்)

வழிநாட் காலைக் கழிபெருந் தேவியைப்
பழுதற வழகொடு புனைநலம் புனையாக்
குங்கும மெழுதிக் கோலம் புனைஇ
105 அங்குவ ளுதன்மிசை முன்பவ னெழுதிய
பாடை கொண்டுதன் பெயர்நிலைக் கீடா
நீல நெடுங்க ணிரை வளைத்தோளி
மறுமொழி கொடுக்கு நினைவின ளாகி
நெறிமயிர்க் கருகே யறிவரி தாக
110 முழுதிய லருள்கொண் டடியனேன் பொருளா
எழுதிய திருமுகம் பழுதுபா டின்றிக்
கண்டேன் காவல னருள்வகை யென்மாட்
டுண்டே யாயினு மொழிக வெம்பெருமகன்

மடந்தை யர்க்கெவ்வாறி யைந்ததை யினையும்.
115 பொருந்திய பல்லுரை யுயர்ந்தோர்க் காகும்
சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம்
இவையவ தன்று மிவ்வயி னொருவரும்
காணா ரென்று காவலு ளிருந்து
பேணா செய்தல் பெண் பிறந்தோருக்
120 கியல்பு மன்றே யயலோ ருரைக்கும்
புறஞ் சொலுமன்றி மறந்தலை நீங்கும்
திறம் பலவாயினுங் குறைந்த வென்றிறத்து
வைத்ததை யிகழ்ந்து மறப்பது பொருளென
உற்றவண் மறுமொழி மற்றெழு தினளாய்
125 அடியேற் கினைய திருவென விடலும்.

(மானனீகை எழுதியதைக் கண்டு உதயணன் மீட்டு
எழுதிவிடல்)

வடிவே லுண்கண் வாசவதத்தை
திண்டிற லரசனைச் சென்றனள் வணங்கலும்
கண்டன னாகிக் கனங்குழை யெழுதிய
இயனோக் கினனா யினையபா வாசகம்
130 தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தெனக்
கலங்கின னாகி யிலங்கிழைக் கீதோர்
நலங்கவின் காட்ட நணுகென வணுகிக்
கண்ட முறைமையிற் பண்டிய லாக்கவல்
கொண்டன னாகி யொண்டொடி யாகம்
135 இன்றை யெல்லையு ளினையபா தாயிற்
சென்ற தென்னுயிரெனத் தேவிமுகத் தெழுதி
வாட்டிறல் வேந்தன் மீட்டனன் விடுத்தலிற்

( உதயணன் எழுதியதை மானனீகை உணர்தல் )

பெருமகள் செல்லத் திருமகள் வாசகக்
கருமமெல்லா மொருமையி னுணர்ந்து
140 வயாத் தீர்வதற்கோரு யாத்துணை யின்றி
மறு சுழிப்பட்ட நறுமலர் போலக்
கொட்புறு நெஞ்சி னைத்திட் பங்கொளீஇ
விளைக பொலிக வேந்தனுறு குறை
களைகுவ லின்றெனுட் கருத்தொடு புலம்பு

( மானனீகை மறுமொழி யெழுதி விடுத்தல் )

145 அற்றை வைகல் கழிந்தபி னவளை
மற்றுய ரணிநலம் வழிநாட் புனைஇக்
கூத்தப் பள்ளிக் குச்சரக் குடிகையுட்
பாற்படுவே திகைசேர்த் தனளாகி
அரவுக் குறியி னயலவை யறியா
150 இரவுக் குறியினி யல்பட வெழுதி
மாபெருந் தேவியை விடுத்தபின் மற்றவள்

( மானனீகை யெழுதியதைக்கண்டு உதயணன் உவத்தல் )

தீவிய மொழியொடு சேதிபற் குறுகி
நோன்றாள் வணங்கித் தோன்ற நிற்றலும்
திருநுதன் மீமிசைத் திறத்துளிக் கிடந்த
155 அருளோர் வாசகந் தெருளுற வறிந்து
மற்றவள் பயந்தனள் பொற்புற வெழுதிய
இற்றைப் புதுநல மினிதென வியம்பி
மாதர் நோக்கின் மான னீகைகட்
காமம் பெருகிக் காதல் கடிகொள
160 மாமனத் தடக்கித் தேவியோ டினியன
கூறியப் பகல்போ யேறிய பின்றை

(மானனீகை மறைந்திருத்தல்)

மானனீகை வாசவதத்தையைத்
தான்மறைந் தறைகுறி மேவின ளிருப்ப

(உதயணன் செயல்)

வென்வேற் றலைவனும் வேட்கை யின்றித்
165 தேவிய ரிருவர்க்கு மாறுதுயில் கூறக்

(வாசவதத்தை உதயணன் செயலை அறியும்படி காஞ்சனமாலையை விடுத்தல்)

கயிற்பூண் கோதைய யிர்த்தன ளிருப்பப்
பெயர்த்தன ளொதுங்கிப் பெயர்தரக் கண்டே
காஞ்சன மாலையைக் கைவயிற் பயிர்ந்து
பூந்தார் மார்பன் புகுமிட னறிகென
170 ஆய்ந்த வேந்த னுடற் பேரறை
சார்ந்தயி னொருசிறை சேர்ந்தன ளிருப்பத்

(உதயணன் மானனீகையுடன் அளவளாவல்)

திருத்தகு மார்பன் கருத்தொடு புகுந்து
விருப்பொடு தழீஇ நடுக்கந் தீரக்
கூடிய வேட்கையி னொருவர்க் கொருவர்
175 ஊடியுங் கூடியு நீடுவிளை யாடியும்
இருந்த பின்றை யிருவரு முறைமுறை
திருந்திய முகத்துப் பொருந்திய காதலொ
டெழுதிய வாசக மெல்லா முரைத்து
வழுவு தலின்றி வைகலு மீங்கே
180 குறியெனக் கூறிச் செறிவிரன் மோதிரம்
கொடுத்தன னருளிக் கோயிலு ணீங்க

(காஞ்சனமாலை தான் அறிந்ததை வாசவதத்தைக்கு உணர்த்தல்)

விடுத்தவ ளேகி யடுத்தது முரைத்ததும்
தன்னுட் பொருமலொடு தனித்தனி தெரிய
இன்னதென் றெடுத்து நன்னுதற் குரைப்ப

(வாசவதத்தை உதயணனைக்கண்டு கூறல்)

185 முறுவல் கொண்டு செறுவகக் கடக்கிப்
பொறையாற் றளரா யிறையுயிர்த் தாற்றி
புலர்ந்த காலை புரவலற் குறுகி
நலங்கிளர் மலர்கொண் டிறைஞ்சின ளிருந்தியான்
இரவு கண்டே னொருகன வதனின்
190 புதுமை கேட்கிற் புரைநீர்ந் ததுவெனச்

(உதயணன் வினாதல்)

செவ்வாய் வெண்ணகைத் திருந்திழை கண்ட
தெவ்வா றென்ன வியம்பினன் கேட்பநின்

(வாசவதத்தை கூறல்)

மனத்துழைப் பெயரா வெனைக்கரந் தெழுந்தனை
தனித்துப் போயோர் தடந்தோண் மடந்தையொ
195 டாட ரங்கேறி யணைந்திருந் தவளோ
டியைபு முணர்ந்தும் கூடி விளையாடியும்
தேறினி ராகித் தெளிவுட னிருவிரும்
மாறுமா றெழுதிய வாசகம் கூறி
மாதரு நீயு மயலுழைத் தெழுந்து
200 போதரும் போதையின் மோதிர மருளிப்
பெயர்ந்தனை நயனமு மலர்ந்தன வாங்கே
புலர்ந்தது கங்குலும் புரவல வாழ்கென

(உதயணன் கூற்று)

வண்டலர் கோதாய் மனத்தினு மில்லது
கண்டனை யாதலிற் கலங்கினை மற்றுநின்
205 உள்ளத் துள்ளே யுறைகுவே னாகவும்
கள்வ னென்று கருதினை யன்றியும்
நெறியுடை மகளிர் நினைப்பவுங் காண்பவும்
இவையிவை போலுங் கணவர்தந் திறத்தெனக்

(வாசவதத்தை கூற்று)

கனவிற் கண்டது பிறரொடு பேசக்
210 குறைபோ டென்றலிற் கூறினே னன்றியும்
யாவை காணினுங் காவலற் கன்றிப்
பேசுவ தெவரொடு பெரியோ யென்று

(வாசவதத்தை உதயணனை நீங்கல்)

மானோர் நோக்கி மனத்தொடு நகையா
ஆனு நினைவுடை னகரர வேந்தன்

(உதயணன் செயல்)

215 தேவியை யையந் தெளித்தன மொருவகை
யாரு மில்லெனை வினிதிருந் துவப்பப்
பானுவுந் தேரொடு படுவரை யிடைபுக

(வாசவதத்தையின் செயல்)

மானனீகையைக் காவல் வைத்தனளாய்
மாந்தளிர் மேனியுங் காஞ்சன மாலையொடு
220 நேர்ந்தவர்க் குறியிற்றான் சென்றிருப்ப

(உதயணன் செயல்)

நிகழ்ந் ததையறியா னெழுந்து மெல்லென
நடந்தவன் சென்றவளிடந் தலைப்படலும்

வேந்தன் செய்வது காண்குவ மென்று
காய்போர் தோளிகையி னீக்கலும்
225 மானனீகை தானுடைய ளாகி
மேவல ளாயினள் போலுமென் றெண்ணி
முரசு முழங்கு தானையரசொடு வேண்டினும்
தருகுவ லின்னே பருவர லொழியினி
மானே தேனே மானனீகா யெனக்
230 காணேர் பற்றத்தானது கொடாஅ
துரைப்பது கேட்ப மறுத்தவ ளொதுங்கி
நிலைப்படு காமந் தலைப்படத் தரியான்
புதுமை கூறியிவண் முகம் பெறுகேனென
மதித்தன னாகி யொருமொழி கேளினி
235 முகைக்கொடி முல்லை நகைத்திரு முகத்துத்
தகைக்கொடி யனையோள் வாசவதத்தை
இயைந்த நெஞ்சுடை யாமிரு வர்க்கும்
கழிந்த கங்குலி னிகழ்ந்ததை யெல்லாம்
நனவது முந்திய வினைய தாதலின்
240 அதனிற கண்டெனக் கொளியா துரைப்ப
அதற்கொரு வழியான் மனத்தினு மில்லெனத்
தெளித்த நிலைமையுந் தெளிந்திலே யெனப்
பெயரப் பெயர முறைமுறை வணங்கி
இயனிலை மானனீகா யருளென்
245 றடுத்தடுத் துரைப்பவு மாற்றா ளாகவும்
இதச்சொற் சொல்லவும் வணக்கஞ் செய்யவும்

( வாசவதத்தையின் செயல் )

பெட்ப வருதலிற் பிடித்தல் செல்லாள்
நக்கன ளாகி நிக்கோய் கூறிய

மானுந் தேனுமான னீகையும்
250 யானன் றென்பெயர் வாசவதத்தை

(உதயணன் செயல்)

காணெனக் கைவிட் டோடினன் றேடி
அடுத்த காட்சியிற் றனித்தொரு மண்டபத்
தொளித்தன னாகித் திகைத்தன னிருப்பச்

(வாசவதத்தையின் செயல்)

சினங்கொ ணெஞ்சொடு பெயர்ந்தவள் வதியப்
255 புலர்ந்தது கங்குலும் பொருக்கெனப் பொலிந்
தென.

# ಮಣಿಮೇಗಲೈ

ಪಂಚಮಹಾಕಾವ್ಯಗಳೆಂದು ಪ್ರಸಿದ್ಧವಾಗಿರುವ ಐದು ತಮಿಳು ಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಮಣಿಮೇಗಲೈ ಒಂದು. ಮಿಕ್ಕ ನಾಲ್ಕು: ಶಿಲಪ್ಪದಿಗಾರವ್, ಜೀವಕ ಚಿಂತಾಮಣಿ, ವಳೈಯಾಪತಿ, ಕುಂಡಲಕೇಶಿ. ಚೇರನ್ ಚೆಂಗುಟ್ಟವನಲ್ಲಿ ಆಸ್ಥಾನ ಕವಿಯಾಗಿದ್ದ ಶಾತ್ತನಾರ್ ಇದರ ಕರ್ತೃ. ಮಣಿಮೇಗಲೈ ಇಳಂಗೋವಡಿಗಳ ಶಿಲಪ್ಪದಿಗಾರದ ಉತ್ತರಾರ್ಧ ದಂತಿದೆ. ಶಾತ್ತನಾರ್ ಬೌದ್ಧರು. ಬೌದ್ಧಧರ್ಮದ ಸಾರವನ್ನು ಇವ ರಷ್ಟು ತಿಳಿಯಾಗಿ ತಮಿಳಿನಲ್ಲಿ ಹೇಳಿರುವವರು ಬೇರೊಬ್ಬರಿಲ್ಲ.

# மணிமேகலை

## ஊரலருரைத்தகாதை

நாவ லோங்கிய மாபெருந் தீவினுட்
காவற் றெய்வதந் தேவர்கோற் கெடுத்த
தீவகச் சாந்தி செய்தரு நன்னாண்
மணிமே கலையொடு மாதவி வாராத்
5 தணியாத் துன்பந் தலைத்தலை மேல்வரச்
சித்திரா பதிதான் செல்லலுற் றிரங்கித்
தத்தரி நெடுங் கட்டன் மகடோழி
வயந்த மாலையை வருகெனக் கூஉய்ப்
பயங்கெழு மாநக ரலரெடுத் துரையென
10 வயந்த மாலையு மாதவி துறவிக்
கயர்ந்து மெய்வாடிய வழிவின ளாதலின்
மணிமே கலையொடு மாதவி யிருந்த
வணிமலர் மண்டபத் தகவயிற் செலீஇ
யாடிய சாய லாயிழை மடந்தை
15 வாடிய மேனி கண்டுளம் வருந்திப்
பொன்னே ரனையாய் புகுந்தது கேளா
யுன்னோ டிவ்வூ ருற்ற தொன்றுண்டு கொல்
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
20 பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலுந்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்

பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங்
25 காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங்
கோலங் கோடலுங் கோவையின் கோப்புங்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவு
30 நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
வோவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையுங்
கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை
நற்றவம் புரிந்தது நாணுடைத் தன்றே
யலகின் மூதூ ரான்றவ ரல்லது
35 பலர்தொகு புரைக்கும் பண்பில் வாய்மொழி
நயம் பாடில்லை நாணுடைத் தன்று
வயந்த மாலைக்கு மாதவி யுரைக்குங்
காதல னுற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா வுயிரொடு நின்றே
40 பொற்கொடி மூதூர்ப் பொருளுரை யிழந்து
நற்றொடி நங்காய் நாணுத் துறந்தேன்
காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயி
45 னன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர் பரப்புநீர் ஞாலத்
தத்திறத் தாளு மல்லளெம் மாயிழை
50 கணவற் குற்ற கடுந்துயர் பொறாஅள்

மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழற் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி யூட்டிய
55 மாபெரும் பத்தினி மகண் மணிமேகலை
யருந்தவப் படுத்த லல்லதி யாவதுந்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅ
ளாங்கன மன்றியு மாயிழை கேளா
யீங்கிம் மாதவ ருறைவிடம் புகுந்தேன்
60 மறவண நீத்த மாசறு கேள்வி
யறவண வடிக ளடிமிசை வீழ்ந்து
மாபெருந் துன்பங் கொண்டுள மயங்கிக்
காதல னுற்ற கடுந்துயர் கூறப்
பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
65 பிறவா ருறுவது பெரும் பேரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்ன
தற்றோ ருறுவ தறிகென் றருளி
யைவகைச் சீலத் தமைதியுங் காட்டி
யுய்வகை யிவை கொளென்றுர வோனருளினன்
70 மைத்தடங் கண்ணார் தமக்குமெற் பயந்த
சித்திரா பதிக்குஞ் செப்பு நீயென
வாங்கவ ளுரை கேட்டரும் பெறன் மாமணி
யோங்குதிரைப் பெருங்கடல் வீழ்ந்தோர் போன்று
மையனெஞ்சமொடு வயந்த மாலையுங்
75 கையற்றுப் பெயர்ந்தனன் காரிகை திறத்தென.

# ಶಿಲಪ್ಪದಿಗಾರಮ್

ಇದನ್ನು ಬರೆದ ಇಳಂಗೋವಡಿಗಳು ಚೇರರಾಜ್ಯ (ಈಗಿನ ತಿರುವಾಂಕೂರು ಸಂಸ್ಥಾನ)ವನ್ನು ಆಳಿದ ವಂಜಿಮಾನಗರದ ಚೇರಲಾದಾನ್ ಎಂಬ ಅರಸನ ಮಗ; ಚೇರನ್ ಚೆಂಗುಟ್ಟವನ ತಮ್ಮ. ಇವರು ಚಿಕ್ಕಂದಿನಲ್ಲೇ ಸಂನ್ಯಾಸ ತಳೆದು, ಒಂದು ಮಠದಲ್ಲಿ ವಾಸಮಾಡಿಕೊಂಡು, ವಿದ್ಯೆ ಕಲಿತು ಸಕಲ ಶಾಸ್ತ್ರಕಲಾಪಾರಂಗತರಾದರು. ಇವರದು ಕಡೆಯ ಸಂಘದ ಕಾಲವೆಂದು ತಿಳಿದುಬರುತ್ತದೆ; ಸುಮಾರು ಕ್ರಿ. ಶ. ೨ನೆಯ ಶತಮಾನದ ಪೂರ್ವಾರ್ಧ. ಇವರು ಶೈವರೆಂದು ಪ್ರತೀತಿ; ಜೈನರಿರಬಹುದೆಂದೂ ಕೆಲವರ ಅಭಿಪ್ರಾಯ. ಅದು ಹೇಗೇ ಇರಲಿ, ಇವರು ಆಯಾ ಮತ ವಿಷಯವನ್ನು ಆಯಾ ಮತೀಯರಂತೆ ಪ್ರತಿಪಾದಿಸುವ ಹೃದಯ ವೈಶಾಲ್ಯವುಳ್ಳವರು. ಶಿಲಪ್ಪದಿಗಾರಕ್ಕೆ ಎರಡು ಹಳೆಯ ವ್ಯಾಖ್ಯಾನಗಳೂ ಒಂದು ಹೊಸ ವ್ಯಾಖ್ಯಾನವೂ ಇವೆ. ತಮಿಳಿನಲ್ಲಿ ಪುರಾತನ ಸಂಗೀತ ನಾಟಕಾದಿ ವಿಷಯಗಳನ್ನು ಹೇಳಿರುವುದು ಈ ಗ್ರಂಥವೊಂದರಲ್ಲೇ.

*

# சிலப்பதிகாரம்

## புகார்க்காண்டம்

### மங்கல வாழ்த்துப் பாடல்

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண்குடை
போன்றிவ்
வங்கண் உலகளித்த லான்.
ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
5 காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந் திரி தலான்.
மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர்வேலி புலகிற்கு அவன் அளிபோல்
மேல்நின்று தான் சுரத்தலான்.
10 பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்கு நீர்வேலி யுலகிற்கவன் குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்
ஆங்கு,
பொதியி லாயினும் இமய மாயினும்
15 பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பின் புகாரே யாயினும்
நடுக்கின்றி நிலைஇய என்பதல்லதை
ஒடுக்கங் கூறார் உயர்ந்தோர் உண்மையின்
முடித்தகேள்வி முழுதுணர்ந்தோரே.
20 அதனால்,
நாகநீள் நகரொடு நாக நாடதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நகர் அது தன்னில்

மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்
ஈகைவான் கொடியன்னாள் ஈராறாண் டகவையாள்;
25 அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாள்
மன்னோ:
30 ஆங்கு,
பெருநில முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பான்
இருநிதிக் கிழவன்மகன் ஈரெட் டாண் டகவையான்;
35 அவனுந்தான்,
மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக்
காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென் பான்
மன்னோ:
40 அவரை,
இருபெருங் குரவரும் ஒருபெரு நாளால்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்.
45 அவ்வழி,
முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன
பணிலம் வெண்குடை

அரசெழுந்ததோர் படியெழுந்தன அகலுள் மங்கல
அணியெழுந்தது
மாலை தாழ்சென்னி வயிரமணித் தூணகத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
50 வான்ஊர் மதியம் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கணோன் பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
55 உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
60 போதொடு விரிகூந்தற் பொலன்நறுங் கொடியன்னார்
காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கெனஏத்திச் சின்மலர் கொடுதூவி
அங்கண் உலகின் அருந்ததி அன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார் : தங்கிய
65 இப்பால் இமயத் திருத்திய வாள்வேங்கை
உப்பாலைப் பொற்கோட் டுழையதா எப்பாலும்
செருமிகு சினவேற் செம்பியன்
ஒருதனி ஆழி உருட்டுவோ னெனவே.

---

## கானல்வரி

1 திங்கள்மாலை வெண்குடையான் சென்னி
செங்கோலது வோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி
காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல்
கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற் பென்றறிந்தேன் வாழி
காவேரி.

2 மன்னுமாலை வெண்குடையான் வளையாச்
செங்கோலது வோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி
காவேரி
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல்
கயற்கண்ணாய்
மன்னுமாதர் பெருங்கற் பென்றறிந்தேன் வாழி
காவேரி.

3 உழவரோதை மதகோதை உடைநீரோதை
தண்பதங்கொள்
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவரோதை சிறந்தார்ப்ப நடந்தவெல்லாம்
வாய்காவா
மழவரோதை வளவன்றன் வளனேவாழி காவேரி.

[ வேறு ]

4 கரியமலர் நெடுங்கட் காரிகைமுன் கடற்றெய்வங்
காட்டிக்காட்டி
அரியசூள் பொய்த்தார் அறனிலரென் றேழையம்
யாங்கறிகோமைய
விரிகதிர் வெண்மதியு மீன்கணமு மாமென்றே
விளங்கும் வெள்ளைப்
புரிவளையு முத்துங்கண் டாம்பல்பொதியவிழ்க்கும்
புகாரே எம்மூர்.

5 காதலராகிக் கழிக்கானற் கையுறைகொண்டெம்பின்
வந்தார்
ஏதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங்
கறிகோமைய
மாதரார் கண்ணுமதி நிழல்நீரிணை கொண்டுமலர்ந்த
நீலப்
போதுமறியாது வண்டூசலாடும் புகாரே எம்மூர்.

6 மோதுமுது திரையான் மொத்துண்டு போந்
தசைந்த முரல்வாய்ச் சங்கம்
மாதர்வரி மணல்மேல் வண்டல் உழுதழிப்ப
மாழ்கியைய
கோதை பரிந்தசைய மெல்விரலாற் கொண்டோச்சும்
குவளைமாலைப்
போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப்
புகாரே எம்மூர்.

[வேறு]

7 துறைமேய் வலம்புரி தோய்ந்துமணல் உழுத
தோற்றமாய்வான்
பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து நுண்தாது
போர்க்குங்கானல்
நிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
உறைமலி உய்யாநோய் ஊர்சுணங்கு மென்முலையே
தீர்க்கும்போலும்.

8 நிணங்கொள் புலால்உணங்கல் நின்றுபுள் ளோப்புதல்
தலைக்கீடாகக்
கணங்கொள் வண்டார்த்து உலாங்கன்னி நறுஞாழல்
கையிலேந்தி
மணங்கமழ் பூங்கானல் மன்னிமற் றாண்டோர்
அணங்குறையும் என்பதறியேன் அறிவேனேல்
அடையேன்மன்னோ.

9 வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின்மலர்
கையேந்தி
விலைமீன் உணங்கற் பொருட்டாக வேண்டுருவங்
கொண்டுவேறோர்
கொலைவேல் நெடுங்கண் கொடுங்கூற்றம் வாழ்வது
அலைநீர்த்தண் கானல்அறியேன் அறிவேனேல்
அடையேன் மன்னோ.

---

# ಕುಱುಂತೊಗೈ

ಎಂಟು ಸಂಕಲನ ಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಇದು ಒಂದು. ಇದೂ ಅಗತ್ತಿಣೈ ವಿಭಾಗಕ್ಕೆ ಸೇರಿದ್ದು. ಇದರಲ್ಲಿ ಸಂಘಕಾಲದ ೨೦೫ ಕವಿಗಳಿಂದ ಸಂಗ್ರಹಿಸಿದ ೪೦೧ ಪದ್ಯಗಳು ಇವೆ. ಸಂಗ್ರಹಕಾರನ ಹೆಸರು ಪೂರಿಕ್ಕೋನ್. ಈ ಪದ್ಯಗಳಲ್ಲ ೩೮೧ ಕ್ಕೆ ಪೇರಾಶಿರಿಯರ್ ಎಂಬುವರೂ ಮಿಕ್ಕ ೨೦ ಕ್ಕೆ ನಚ್ಚಿನಾರ್ಕಿನಿಯರ್ ಎಂಬವರೂ ವ್ಯಾಖ್ಯಾನ ಬರೆದರೆಂದು ತಿಳಿದುಬರುತ್ತದೆ. ಇದರ ಪದ್ಯಗಳ ಸಾಲು ೪ ರಿಂದ ೮ ರವರೆಗೆ ಇವೆ. ಇದನ್ನು ಸಂಪಾದಿಸಿ ಪ್ರಕಟಿಸಿದವರು ಡಾ॥ ಉ. ತಿ. ಸ್ವಾಮಿನಾಥ ಅಯ್ಯರವರು.

# குறுந்தொகை

## தலைவன் கூற்று

1 நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே.

## காதற்பரத்தை கூற்று

2 கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே.

## தோழி கூற்று

3 யாயா கியளே விழவுமுத லாட்டி
பயறுபோ லிணர பைந்தாது படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன் கொடுமை
கரந்தன ளாகலி னாணிய வருமே.

## தலைவி கூற்று

4 அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்
உரவோ ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே.

### தோழி கூற்று

5 அகவன் மகளே யகவன் மகளே
மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே.
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.

### தலைவன் கூற்று

6 யாயு ஞாயும் யாரா கியரோ
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந்தாங் கலந்தனவே.

### தோழி கூற்று

7 பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்
அரலைக் குன்றத் தகல்வாய்க் குண்டுசுனைக்
குவளையொடு பொதிந்த குளவி நாறுநின்
நறுநுதன் மறப்பரோ மற்றே முயலவும்
சுரம்பல விலங்கிய வரும் பொருள்
நிரம்பா வாகலி னீடலோ வின்றே.

8 வினையே யாடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவ ருயிரென
நமக்குரைத் தோருந் தாமே
அழாஅ றோழி யழுங்குவர் செலவே.

### தலைவன் கூற்று

9 பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பினின் சொ லுள்ளும்
பிரிந்தோர் புணர்க்கும் பண்பின்
மருந்து முண்டோ மயலோ விதுவே.

### தோழி கூற்று

10 கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற்
றினைபிடி யுண்ணும் பெருங் கன்னாட
கெட்டிடத்து வந்த வுதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றி மறந்தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்த லுரியவா நினக்கே.

11 மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொடவ ணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண் கொலைபுரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇய ரோவன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்ச லோவிலளே.

12 முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வேறுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி
வணங்கினை கொடுத்தி யாயினணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே.

13 விசும்புகண் புதையப்பாஅய் வேந்தர்
வென்றெறி முரசி னன்பல முழங்கிப்
பெயலா னாதே வானங் காதலர்
நனிசேய் நாட்டர் நம்முன் னலரே
யாங்குச் செய்வாங் கொறோழி யீங்கைய
வண்ணத் துய்ம்மல ருதிர
முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே.

தலைவி கூற்று

14 ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே.

# ನಱ್ರಿಣೈ

ಇದು ಶೃಂಗಾರಸಾಹಿತ್ಯವಾದ ಅಗತ್ತಿಣೈ ವಿಭಾಗಕ್ಕೆ ಸೇರಿದ ಒಂದು ಉತ್ತಮ ಗ್ರಂಥ. ಇದರಲ್ಲಿಯ ನಾನೂರು ಪದ್ಯಗಳು ೧೭೫ ಕವಿಗಳಿಂದ ಸಂಗ್ರಹವಾದುವು. ಇದರಲ್ಲಿಯ ಅಗವಲ್‌ಪಾಗಳು ೯–೧೨ ಸಾಲುಗಳುಳ್ಳವು. ಇದನ್ನು ವ್ಯಾಖ್ಯಾನ ಸಮೇತ ಪ್ರಕಟಿಸಿದವರು ಪಿನ್ನತ್ತೂರ್ ಅ. ನಾರಾಯಣಸ್ವಾಮಿ ಅಯ್ಯರ್ ಅವರು.

# நற்றிணை

## பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது

1 நேரிசையாசிரியப்பா

மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே.

[ பாலை ]

2 இஃது, உடன்போக்குந் தோழி கையடுத்தது.

என்றது, தலைவி விரும்பியவாறு தோழி இருவரையும் ஒருப்படுத்தி வைகிருளிலே தலைவியைத் தலைவன் பாற் சேர்த்துக் கையடுத்தல் செய்து இருவரையும் வலஞ்செய்து நின்று நின்மாறுபடாத மொழியைத் தெளிந்து புகல்புக்க இவளை முதுமை யெய்தினும் கைவிடாது பாதுகாப்பாயாக வெனத் தலைமகனுக்கு ஒப்படுத்துக் கூறுநிற்பது.

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்த னரையொடு முடிப்பினும்
நீத்த லோம்புமதி பூக்கே ழூர
இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே.

[ பாலை ]

3 இது, பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நெருங்கித் தலைவன் செலவழுங்கியது.

எ-று; தலைவியை விட்டுப்பிரிந்து சென்று பொருளீட்டும்படி கருதி முயன்ற தன்னெஞ்சினைத் தலைவன் நோக்கி யான் இவளின் கண்ணாற் கட்டுண்டேன்; இவ்வின்பத்தினுங் காட்டிற் பொருள் சிறவா; அப்பொருள் எங்ஙன மாயினுமாக; இவ்விரண்டினையு மாராய்ந்து சிறந்தது ஒன்றனை நீயெய்துதற்குரியையெனக்கூறி இல்லத் தழுங்கா நிற்பது.

கடைக்கூட்டல்—ஒருப்படுத்தல்.

---

சிறைக்குடியாந்தையார் பாடியது

புணரிற் புணராது பொருளே பொருள்வயிற்
பிரியிற் புணராது புணர்வே யாயிடைச்
சேர்பினுஞ் செல்லா யாயினு நல்லதற்
குரியை வாழியென் னெஞ்சே பொருளே
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியில் கெடுவ யானே
விழுநீர் வியலகந் தூணி யாக
வெழுமா ணளக்கும் விழுநெதி பெறினுங்
கனங்குழைக் கமர்ந்த சேயரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன்
எனைய வாகுக வாழிய பொருளே.

---

கோப்பெருஞ்சோழன் பாடியது

4 கண்டனென் மகிழ்ந கண்டெவன் செய்கோ
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டி னிம்மென விமிரும்
ஏர்தரு தெருவி னெதிர்ச்சி நோக்கிநின்
மார்புதலைக் கொண்ட மாணிழை மகளிர்
கவலை முற்ற வெய்துவீ ழரிப்பனி
காலே முற்ற பைதரு காலைக்
கடன்மரங் கவிழ்ந்தெனக் கலங்கியுடன் வீழ்பு
பலர்கொள் பலகை போல
வாங்க வாங்கநின் றூங்கனர் நிலையே

[ குறிஞ்சி ]

5 இஃது, இரண்டாங் கூட்டத் தெதிர்ச்சியில்
தலைவன் சொல்லியது.

எ-து, தெய்வப்புணர்ச்சி புணர்ந்து நீங்கி இடந்தலைப் பாடுற்றுச் சென்று முந்துறக்கண்ட தலைமகன் அத்தலை மகளை நோக்கி நீ நாணுகின்றனை, யானுற்ற காமம் தாங்குத லெளிய தொருகாரியமோ; நின் கண்களேயன்றி நின் தோள்களும் என்னை வருந்துகின்றன காணென்று மெய் தொட்டுப்பயிறன் முதலானவற்றை யுள்ளடக்கிக் கூறு நிற்பது.

## மருதனிளநாகனார் பாடியது

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளா யாழநின்
திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமங் கைம்மிகில் தாங்குத லெளிதோ
கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதுவ வல்ல நண்ணா
ராண்டலை மதில ராகவு முரசுகொண்
டோம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூட லன்னநின்
கரும்புடைத் தோளு முடைவா லணங்கே.

## ಪುಱನಾನೂಱು

ಕಡೆಯ ಸಂಘಕಾಲದ ಎಟ್ಟುತ್ತೊಗೈ ಸಂಕಲನಗಳಲ್ಲಿ ಇದು ಒಂದು. ಇದರಲ್ಲಿ ೪೦೦ ಪದ್ಯಗಳಿವೆ. ಈ ಗ್ರಂಥದಿಂದ ಪ್ರಾಚೀನ ತಮಿಳುನಾಡಿನ ಅರಸರಾದ ಚೇರ, ಚೋಳ, ಪಾಂಡ್ಯರಾಜರು ಮತ್ತು ಕಿರಿಯರಸರು, ಮಂತ್ರಿಗಳು, ಸೇನಾಪತಿಗಳು, ವೀರರು—ಇವರ ಚರಿತ್ರೆ ತಿಳಿದುಬರುತ್ತದೆ. ಹಾಗೆಯೇ ಕಡೆಯ ಸಂಘಕಾಲದ ಕವಿಗಳ ವಿಷಯವಾಗಿಯೂ ಕೊಂಚಮಟ್ಟಿಗೆ ತಿಳಿದುಬರುತ್ತದೆ.

# புறநானூறு

1 உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி 5
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
ரன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.

2 நெல்லுமுயி ரன்றே நீருமுயி ரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.

3 நாடா கொன்றோ காடா கொன்றோ
வவலா கொன்றோ மிசையா கொன்றோ
வெவ்வழி நல்லவ ராடவ
ரவ்வழி நல்லை வாழிய நிலனே.

4 படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து 5
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.

5 யாண்டு பலவாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான் கண்டனைய ரென்னிளையரும் வேந்தனு
மல்லவை செய்யான் காக்கு மதன்றலை 5
யான்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழுமூரே.

6 யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்த
லினிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவி 5
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்பது திறவோர் 10
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.

7 ஓரி னெய்தல் கறங்க வோரி
லீர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றவப் பண்பிலாள 5
னின்னா தம்மவிவ் வுலக
மினிய காண்கித னியல் புணர்ந்தோரே.

8 ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே 5
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
யனைத்தா கியரினி யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டனம் மதனா
னோயில ராகநின் புதல்வர் யானும் 10
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவே னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதன்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வலத் தை சிறக்க நின்னுளே. 15

9 சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந்துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே 5
யென்பொடு தடி படுவழி யெல்லா
மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந்
தானிற்கு மன்னே
நரந்த நாறுந்தன் கையாற் 10
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
யருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ

பிரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவைசோர
வஞ்சொ னுண்டேர்ச்சிப் புலவர் நாவிற் 15
சென்று வீழ்ந்தன்றவன‌ரு நிறத்தியங்கிய வேலே
யாசாகெந்தை யாண்டுளன் கொல்லோ
வினிப்பாடு நரு மில்லைப் பாடுநர்க்
கொன்றீ குநரு மில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர் 20
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே.

10 இனி நினைந்திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத்தைஇத்
தண் கயமாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்கு வழித்தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ 5
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை 10
யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண்டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.

11 நரம் பெழுந்துலறிய நிரம்பா மென்றோண்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்

படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயினுண்ட வென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக் 5
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே.

12 கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்றசெரு விற்கிவள் கொழுநன் 5
பெருநிரை விலக்கி யாண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
யொருமக னல்ல தில்லோள் 10
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

# ತೇವಾರಂ

ಶೈವ ಸಮಯಾಚಾರ್ಯರುಗಳಲ್ಲಿ ಮೊದಲ ಮೂವರಾದ ತಿರುಜ್ಞಾನ ಸಂಬಂದರ್, ತಿರುನಾವುಕ್ಕರಸರ್, ಸುಂದರಮೂರ್ತಿ ನಾಯನಾರ್—ಇವರಿಂದ ರಚಿತವಾದ ಸ್ತೋತ್ರಸಂಕಲನವೇ ತೇವಾರಂ. ಇವುಗಳ ಒಟ್ಟು ಸಂಖ್ಯೆ ಒಂದುಲಕ್ಷದ ಎರಡುಸಾವಿರ ಪದ್ಯದಶಕಗಳೆಂದು ಪ್ರತೀತಿ. ಈಗ ಇರುವುದು ೭೯೭ ದಶಕಗಳು ಮಾತ್ರ. ನಂಬಿಯಾಂಡಾರ್ ನಂಬಿ ಎಂಬವರು ಈ ೭೯೭ ದಶಕಗಳನ್ನು ಏಳು ವಿಭಾಗವಾಗಿ ವಿಂಗಡಿಸಿದರು. ಈ ವಿಭಾಗಗಳಿಗೆ ಅಡಂಗಲ್ ಮುಜ್ಕೈ ಎಂದೂ ಹೆಸರಿದೆ ಶೈವರು ಇದನ್ನು ತಮಿಳು ವೇದವೆಂದು ಗೌರವಿಸುತ್ತಾರೆ.

# ತಿರುಜ್ಞಾನ ಸಂಬಂಧರ್

ಇವರು ಹುಟ್ಟಿದ್ದು ತಂಜಾವೂರು ಜಿಲ್ಲೆಯ ಶೀರ್‌ಕಾಳಿ (ಶಿಯಾಳಿ)-
ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೭ನೆಯ ಶತಮಾನ. ಇವರು ಬ್ರಾಹ್ಮಣರು. ಇವರ
ತಂದೆ ಶಿವಪಾದ ಹೃದಯರ್, ತಾಯಿ ಭಗವತಿಯಮ್ಮೈ. ಮೂರನೆಯ
ವಯಸ್ಸಿನಲ್ಲೇ ಪಾರ್ವತೀದೇವಿ ಇವರಿಗೆ ಜ್ಞಾನಕ್ಷೀರವನ್ನು ಊಡಿಸಿದ
ಳಂತೆ. ತಮಿಳುನಾಡಿನ ಹಲವು ದಿವ್ಯ ಕ್ಷೇತ್ರಗಳನ್ನು ದರ್ಶನಮಾಡುತ್ತ
ಅಲ್ಲಲ್ಲಿ ಸ್ತೋತ್ರ ಗೀತಗಳನ್ನು ಕಟ್ಟಿಹಾಡಿದರು. ವೇದಾರಣ್ಯದಲ್ಲಿ
ವೇದಾರ್ಚನೆ ನಿಂತುಹೋಗಿ ಮುಚ್ಚಿದ್ದ ದೇವಸ್ಥಾನದ ಕದವನ್ನು ಇವರೂ
ತಿರುನಾವುಕ್ಕರಸರೂ ಸೇರಿ ಸ್ತೋತ್ರದಶಕಗಳನ್ನು ಹಾಡಿ ಹಾಕಿ ತೆಗೆಯು
ವಂತೆ ಮಾಡಿದರು ಎಂದು ಪ್ರತೀತಿ.

# தேவாரம்

## திருஞானசம்பந்த சுவாமிகள்

## முதற்பதிகம்

1 தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்
மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்
கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்
செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

2 முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவை
பூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்
கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியோர்கழல் கையாற்
றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானி
வனன்றே.

3. நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்
மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்
கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

4 விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலை யோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர் கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரை மார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவ னன்றே.

5 ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிது வென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவ னன்றே.

6 மறைகலந்தவொலி பாடலொடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங் கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழினீடுயர் சோலைக்கதிர் சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

7 சடைமுயங்குபுன லன்னனலன்னெரி வீசிச்சதிர் வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர் கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிற கன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவ னன்றே.

8 வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர் கள்வன்
துயரிலங்குமுலகிற்பலவூழிக டோன்றும் பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

9 தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர் கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

10 புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயமிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

11 அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞான சம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே.

---

# ತಿರುನಾವುಕ್ಕರಸರ್

ಇವರು ತಿರುಮುನಿಪ್ಪಾಡಿನ ತಿರುವಾಮೂರಿನಲ್ಲಿ ವೇಳಾಳರ್ ಕುಲ ದಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ತಂದೆ ಪುಗಟನಾರ್, ತಾಯಿ ಮಾದಿನಿಯಾರ್, ಅಕ್ಕ ತಿಲಕವದಿಯಾರ್ (ತಿಲಕವತಿ). ಇವರ ಬಾಲ್ಯ ನಾಮ ಮರುಣೀಕ್ಕಿಯಾರ್ (ಮರುಳ್‌ನೀಕ್ಕಿಯಾರ್). ಎಳವೆಯಲ್ಲೆ ತಾಯಿ ತಂದೆಗಳು ತೀರಿಕೊಂಡು, ಇವರು ಜೈನ ಮತಾವಲಂಬಿಗಳಾದರು. ಇವರ ಅಕ್ಕನ ಪ್ರಾರ್ಥನೆಯ ಮೇಲೆ ಶಿವಪರಮಾತ್ಮನು ಇವರಿಗೆ ಹೊಟ್ಟೆನೋವು ಬರಿಸಿ ತರುವಾಯ ವಾಸಿಮಾಡಿ ಇವರ ಗಮನವನ್ನು ತನ್ನ ಕಡೆ ಸೆಳೆದು ಕೊಂಡು ಮತ್ತೆ ಇವರನ್ನು ಶಿವಭಕ್ತನನ್ನಾಗಿಸಿಕೊಂಡನಂತೆ. ಇದರಿಂದ ಜೈನನಾದ ಪಲ್ಲವರಾಜ ಎರಡನೆಯ ಮಹೇಂದ್ರವರ್ಮನು ಇವರ ಮೇಲೆ ಕೋಪಿಸಿ ಸುಣ್ಣದಗೂಡಿನಲ್ಲಿ ಸುಡುತ, ಆನೆಯ ಕಾಲಿನಿಂದ ತುಳಿತ, ವಿಷಪಾನ, ಕಲ್ಲುಕಟ್ಟಿ ಕಡಲಲ್ಲಿ ಹಾಕುವುದು ಮೊದಲಾದ ಹಲವು ತೊಂದರೆಗಳನ್ನು ಕೊಟ್ಟನೆಂದೂ ಶಿವಾನುಗ್ರಹದಿಂದ ಇವರು ಎಲ್ಲ ದರಿಂದಲೂ ಪಾರಾದರೆಂದೂ ಹೇಳುತ್ತಾರೆ. ಇವರಿಗೆ ನಾವುಕ್ಕರಸರ್ ಎಂದು ದೇವರಿಂದಲೆ ಬಂತಂತೆ. ಇವರೂ ತಿರುಜ್ಞಾನ ಸಂಬಂಧರೂ ಸಮಕಾಲೀನರು. ಇವರು ೮೧ ವರ್ಷ ಬದುಕಿದ್ದು ಹಲವು ಸ್ತೋತ್ರ ದಶಕಗಳನ್ನು ರಚಿಸಿದ್ದಾರೆ

# திருநாவுக்கரசு சுவாமிகள்

## நமசிவாயத்திருப்பதிகம்

1 சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே.

2 பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன் அஞ்சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சிவாயவே.

3 விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சிவாயவே.

4 இடுக்கண் பட்டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற் கீழ்க்கிடக்கினு மருளின் நாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே.

5 வெந்தநீ றருங்கலம் விரதிகட் கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சிவாயவே.

6 சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறு நல்கு வான்நலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே.

7 வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினா ரந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினே னோடிச் சென்றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சிவாயவே.

8 இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே.

9 முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரணாதல் திண்ணமே
அந்நெறியே சென்றங் கடைந்தவர்க் கெலாம்
நன்னெறி யாவது நமச்சிவாயவே.

10 மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே.

---

# ಸುಂದರಮೂರ್ತಿ ನಾಯನಾರ್

ಇವರು ದಕ್ಷಿಣದೇಶದಲ್ಲಿ ತಿರುಮುನಿಪ್ಪಾಡಿನಾಡಿನ ತಿರುನಾಲೂರಿನಲ್ಲಿ ಆದಿಶೈವ ಬ್ರಾಹ್ಮಣಕುಲದಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೯ನೆಯ ಶತಮಾನದ ಅಂತ್ಯ. ಇವರ ತಂದೆ ಶಡೈಯನಾರ್ (ಜಡೆಯರು), ತಾಯಿ ಇಶೈಜ್ಞಾನಿಯಾರ್, ಇವರ ಚಿಕ್ಕಂದಿನ ಹೆಸರು ನಂಬಿಯಾರೂರರ್. ಇವರಿಗೆ ಪರವಿನಾಚ್ಚಿಯಾರ್, ಶಂಗಿಲಿನಾಚ್ಚಿಯಾರ್ ಎಂಬ ಇಬ್ಬರು ಹೆಂಡಿರು ಇದ್ದರು. ತಿರುವಾರೂರಿನಲ್ಲಿ ಬಹುಕಾಲ ಇದ್ದು ಸುತ್ತಲ ಕ್ಷೇತ್ರಗಳಿಗೆ ಹೋಗಿ ದರ್ಶನಮಾಡಿ ಹಲವು ಸ್ತೋತ್ರದಶಕಗಳನ್ನು ಕಟ್ಟಿ ಹಾಡಿದರು. ಇವರು ಹದಿನೆಂಟು ವರ್ಷಮಾತ್ರ ಬದುಕಿದ್ದರು. ಚೇರಮಾನ್ ಪೆರುಮಾಳ್ ನಾಯನಾರ್ ಎಂಬ ಅರಸನು ಇವರಿಗೆ ಪ್ರಾಣಸ್ನೇಹಿತ. ಇವರು ಸಶರೀರವಾಗಿ ಕೈಲಾಸಕ್ಕೆ ಸಲ್ಲಲು ಇವರ ಪ್ರಾಣಸ್ನೇಹಿತನೂ ಕುದುರೆಯ ಬೆನ್ನೇರಿ ಅವರ ಹಿಂದೆಯೇ ಹೋದನಂತೆ. ಸುಂದರ ಮೂರ್ತಿಗಳು ಹಲವು ಪವಾಡಗಳನ್ನು ಮೆರೆದಿದ್ದಾರೆ. ಇವರ ತಿರುತ್ತೊಂಡರ್‌ತ್ತೊಗೈ ಎಂಬ ಭಕ್ತರ ನಾಮ ಸಂಕೀರ್ತನಾವಳಿಯೇ ಶೇಕ್ಕಿೞಾರಿಗೆ ಪೆರಿಯ ಪುರಾಣ ರಚಿಸಲು ಮೂಲಪ್ರೇರಣೆಯಾಯಿತು ಎಂದು ಹೇಳುತ್ತಾರೆ.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## முதற்பதிகம்

1 பித்தாபிறை சூடிபெரு மானேயருளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

2 நாயேன்பல நாளுநினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகவருள்
பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
ஆயாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

3 மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அன்னேயுனக் காளாயினி யல்லேனென லாமே.

4 முடியேனினிப் பிறவேன்பெற்ற மூவேன்பெற்ற
மூர்தி
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக்
கொள்நீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அடிகேளுனக் காளாயினி யல்லேனென லாமே.

5 பாதம்பணி வார்கள்பெறு பண்டம்மது பணியாய்
ஆதன்பொரு ளானேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
ஆதீயுனக் காளாயினி யல்லேனென லாமே.

6 தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனி
எண்ணார்புர மூன்றுமெரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அண்ணாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

7 ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி யல்லேனென லாமே.

8 ஏற்றார்புர மூன்றுமெரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
ஆற்றாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

9 மழுவாள்வல னேந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தலுன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூரருட்டுறையுள்
அழகாவுனக் காளாயினி யல்லேனென லாமே.

10 காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாம்.
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்
நல்லூ ரருட்டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே.

---

# ಮಾಣಿಕ್ಕ ವಾಚಕರ್

ಇವರು ಶೈವ ಸಮಯಾಚಾರ್ಯರಲ್ಲಿ ಒಬ್ಬರು. ಮಧುರೆಗೆ ಏಳು ಮೈಲಿ ದೂರದಲ್ಲಿರುವ ವೈಗೈ ನದಿಯ ದಡದ ತಿರುವಾದವೂರಲ್ಲಿ ಸುಮಾರು ೧೬೦೦ ವರ್ಷಗಳ ಹಿಂದೆ ಬ್ರಾಹ್ಮಣ ಕುಲವೊಂದರಲ್ಲಿ ಇವರು ಹುಟ್ಟಿದರು. ಇವರು ಶೈವಸಿದ್ಧಾಂತ ಸಮಯಾಚಾರ್ಯರಲ್ಲಿ ಒಬ್ಬರೆಂದು ಶೈವ ಸಿದ್ಧಾಂತಿಗಳೂ ಆರಾಧ್ಯ ಕುಲಕ್ಕೆ ಸೇರಿದ ಐಕ್ಯವಾದಿಗಳೆಂದು ಮತ್ತೆ ಕೆಲವರೂ ಹೇಳುತ್ತಾರೆ. ತಿರುವಾಚಕಕ್ಕೆ ಕರಗದವರು ಯಾವ ವಾಚಕಕ್ಕೂ ಕರಗರು ಎಂದು ತಮಿಳಿನಲ್ಲಿರುವ ಗಾದೆಯೇ ಇದರ ಹಿರಿಮೆಯನ್ನು ತೋರಿಸುತ್ತದೆ. ರೆವರೆಂಡ್ ಜಿ. ಯು. ಪೋಪ್ ಅವರು ಇದನ್ನು ಇಂಗ್ಲಿಷಿಗೆ ಭಾಷಾಂತರಿಸಿದ್ದಾರೆ.

# திருவாசகம்

## சிவபுராணம்

நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள்வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
5 ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவாருண் மகிழுங்கோன் கழல்கள் வெல்க
10 சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க
ஈசனடி போற்றி எந்தையடி போற்றி
தேசனடி போற்றி சிவன்சேவடி போற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்னனடி போற்றி
15 சீரார் பெருந்துறை நந்தேவனடி போற்றி
ஆராத வின்பம் அருளுமலை போற்றி
சிவன்அவன் என்சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
20 முந்தை வினைமுழுதும் ஓயவுரைப் பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார்கழல் இறைஞ்சி
விண்ணிறைந்து(ம்) மண்ணிறைந்து(ம்) மிக்காய் விளங்கொளியாய்

எண்இறந்து எல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
25 பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
30 செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடுற்றேன்
உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
35 ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகிமிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
40 அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவு இறுதியில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
45 மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
50 மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் றன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்குமூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற்குடிலை
55 மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்குமனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள்ளுருகு
நலந்தானிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
60 நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தாயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
65 நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆராவமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதாருள்ளத் தொளிக்கு மொளியானே
நீராயுருக்கி யென்னாரு யிராய் நின்றானே
70 இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
75 கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக்காய் நின்ற
80 தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
85 ஆற்றேன் எம்மையா அரனேஓ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
90 தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
95 பல்லோரு மேத்தப் பணிந்து.

---

# நீத்தல் விண்ணப்பம்

## கட்டளைக் கலித்துறை

1 கடையவனேனைக் கருணையினாற்கலந் தாண்டுகொண்ட
விடையவனே விட்டிடுதி கண்டாய் விறல்வேங்கை
யின்தோல்
உடையவனே மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத்
தாங்கிக்கொள்ளே.

2 கொள்ஏர்(பு) இள(வு)அக லாத்தடங் கொங்கையர்
கொவ்வைச்செவ்வாய்,
விள்ளேன் எனினும் விடுதிகண்டாய்நின் விழுத்
தொழும்பின்,
உள்ளேன் புறமல்லேன் உத்தரகோச மங்கைக்கரசே
கள்ளேன் ஒழியவுங்கண்டு கொண்டாண்ட தெக்
காரணமே.

3 காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்
வேருறு வேனைவிடுதி கண்டாய் விளங்குந்திருவா
ரூருறை வாய்மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே.

4 வளர்கின்ற நின்கருணைக்கையில் வாங்கவும் நீங்கி
இப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண்டாய் வெண்மதிக்
கொழுந்தொன்(று)
ஒளிர்கின்ற நீள்முடி உத்தரகோச மங்கைக்கரசே
தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்னதோற்றச்
செழுஞ்சுடரே.

5 செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற் பன்னாள்
விழுகின்ற என்னை விடுதி கண்டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி உத்தரகோச மங்கைக்கரசே
வழிநின்று நின்னருளாரமுதூட்ட மறுத்தனனே.

6 மறுத்தனன் யானுன் அருளறியாமையில் என்மணியே
வெறுத்தெனை நீவிட்டிடுதி கண்டாய் வினையின் தொகுதி
ஒறுத்தெனை ஆண்டுகொள் உத்தரகோச மங்கைக் கரசே
பொறுப்பரன்றே பெரியோர் சிறுநாய்கள்தம் பொய்யினையே.

7 பொய்யவனேனைப் பொருளென ஆண்டொன்று பொத்திக்கொண்ட
மெய்யவனே விட்டிடுதி கண்டாய் விடம்உண்மிடற்று
மையவனே மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
செய்யவனே சிவனே சிறியேன்பவந் தீர்ப்பவனே.

8 தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரருள் என்கொலென்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண்டாய் விரவார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை உத்தரகோச மங்கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடச்சம் வினையேனை இருதலையே.

9 இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பொத்து நினைப் பிரிந்த
விரிதலை யேனைவிடுதிகண்டாய் வியன்மூவுலகுக்
கொருதலை வாமன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வலன் ஏந்திப்பொலிபவனே.

10 பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற்றாக்கையைப்
போக்கப்பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண்டாய் அளிதேர்விளரி
ஒலிகின்ற பூம்பொழில் உத்தரகோச மங்கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித்தாய்புரம் மாறுபட்டே.

11 மாறுபட்டஞ்சென்னை வஞ்சிப்பயான்உன் மணிமலர்த்
தாள்
வேறுபட்டேனை விடுதிகண்டாய் வினையேன்மனத்தே
ஊறும்மட்டே மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
நீறுபட்டே யொளிகாட்டும் பொன்மேனி நெடுந்
தகையே.

12 நெடுந்தகை நீயென்னை ஆட்கொள்ளயான்
ஐம்புலன்கள்கொண்டு
விடுந்தகை யேனைவிடுதிகண்டாய் விரவார்வெருவ
அடுந்தகை வேல்வல்ல உத்தரகோச மங்கைக்கரசே.
கடுந்தகை யேன்உண்ணுந்தெண்ணீர் அமுதப்பெருங்
கடலே.

13 கடலினுள் நாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்
விடலரியேனை விடுதிகண்டாய் விடலில்லடியார்
உடல்இலமே மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
மடலின்மட்டே மணியேஅமுதேஎன் மதுவெள்
ளமே.

14 வெள்ளத்துள் நாவற்றியாங்குன் அருள்பெற்றுத்
துன்பத்தின்றும்
விள்ளக்கிலேனை விடுதிகண்டாய் விரும்பும் அடியார்
உள்ளத்துள் ளாய்மன்னும் உத்தரகோச மங்கைக்
கரசே
கள்ளத்து ளேற்கருளாய் களியாத களியெனக்கே.

15 களிவந்த சிந்தையொடுன் கழல்கண்டுங் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண்டாய் மெய்ச்சுடருக்
கெல்லாம்
ஒளிவந்த பூங்கழல் உத்தரகோச மங்கைக்கரசே
எளிவந்த எந்தைபிரான் என்னை ஆளுடை என்னப்
பனே.

16 என்னை அப்பா அஞ்சல் என்பவர் இன்றி நின்றெய்த்
தலைந்தேன்
மின்னை யொப்பாய்விட்டிடுதி கண்டாயுவமிக்கின்
மெய்யே
உன்னை யொப்பாய்மன்னும் உத்தரகோச மங்கைக்
கரசே
அன்னை யொப்பாய்எனக் கத்தனொப்பாய்என் அரும்
பொருளே.

17 பொருளே தமியேன்புகலிடமே நின்புகழிகழ்வார்
வெருளே யெனைவிட்டிடுதிகண்டாய் மெய்ம்மையார்
விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தரகோச மங்கைக்கரசே
இருளே வெளியே இகபரமாகி யிருந்தவனே.

18 இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை
என்னினல்லால்
விருந்தினனேனை விடுதிகண்டாய் மிக்கநஞ்சமுதா
அருந்தினனே மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
மருந்தினனே பிறவிப்பிணிப்பட்டு மடங்கினர்க்கே.

19 மடங்க என்வல்வினைக்காட்டை நின் மன் அருள்
தீக்கொளுவும்
விடங்க என் தன்னை விடுதிகண்டாய் என்பிறவியைவே
றொடுங்களைந் தாண்டுகொள் உத்தரகோச மங்கைக்
கரசே
கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித்தாய் வஞ்சிக்கொம்
பினையே.

20 கொம்பரில் லாக்கொடிபோல் அலமந்தனன்
கோமளமே
வெம்புகின்றேனை விடுதிகண்டாய் விண்ணர் நண்ணு
கில்லா
உம்பருள்ளாய் மன்னும் உத்தரகோச மங்கைக்கரசே
அம்பரமே நிலனே அனல்காலொடப் பானவனே.

21 ஆனைவெம்போரிற் குறுந்தூறெனப்புலனால் அலைப்
புண்
டேனையெந்தாய் விட்டிடுதிகண்டாய் வினையேன்
மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலையும் அமுதத்தையுமொத்
தூனையும் என்பினையும் உருக்காநின்ற ஒண்மையனே.

22 ஒண்மையனே திருநீற்றை உத்தூளித்தொளிமிளிரும்
வெண்மையனே விட்டிடுதிகண்டாய் மெய்யடியவர்கட்
கண்மையனே யென்றுஞ்சேயாய் பிறர்க்கறிதற்கரி
தாம்
பெண்மையனே தொன்மை ஆண்மையனே அலிப்
பெற்றியனே.

23 பெற்றதுகொண்டு பிழையேபெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடியேனை விடுதிகண்டாய் விடிலோகெடுவேன்
மற்றடியேன் தன்னைத்தாங்குநர் இல்லையென் வாழ்முதலே
உற்றடியேன் மிகத்தேறிநின்றேன் எனக்குள்ளவனே.

24 உள்ளனவேநிற்க இல்லனசெய்யு மையல்துழனி
வெள்ளன் அலேனை விடுதிகண்டாய் வியன்மாத் தடக்கைப
பொள்ளல்நல்வேழத் துரியாய்புலன்நின் கட்போதலொட்டா
மெள்ளனவேமொய்க்கும் நெய்க்குடந்தன்னை யெறும்பெனவே.

25 எறும்பிடை நாங்கூழெனப் புலனாலரிப் புண்டலந்த
வெறுந்தமியேனை விடுதிகண்டாய் வெய்யகூற்றொடுங்க
உறுங்கடிப் போதவையே யுணர்வுற்றவர் உம்பரும்பர்
பெறும்பதமே அடியார்பெயராத பெருமையனே.

26 பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மையேனை விடுதிகண்டாய் வியன்கங்கை பொங்கி
வருநீர்மடுவுள் மலைச்சிறுதோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொதியுஞ் சடைவானக் கொழுமணியே.

27 கொழுமணியேர் நகையார்கொங்கைக் குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடியேனை விடுதிகண்டாய் மெய்ம்முழுதுங்கம்பித்
தழுமடியாரிடை யார்த்துவைத்தாட் கொண்டருளி யென்னைக்
கழுமணியே இன்னுங் காட்டுகண்டாய்நின் புலன் கழலே.

28 புலன்கள்திகைப்பிக்க யானுந்திகைத்திங்கொர்
பொய்ந்நெறிக்கே
விலங்குகின்றேனை விடுதிகண்டாய் விண்ணும்
மண்ணுமெல்லாங்
கலங்கமுந்நீர்நஞ்சமுது செய்தாய் கருணாகரனே
துலங்குகின்றேன் அடியேன் உடையாயென்
தொழுகுலமே.

29 குலங்களைந்தாய் களைந்தாய்என்னைக் குற்றங்கொற்றச்
சிலையாம்
விலங்கல்எந்தாய் விட்டிடுதிகண்டாய் பொன்னின்
மின்னுகொன்றை
அலங்கலந்தாமரை மேனியப்பாவொப் பிலாதவனே
மலங்கள்ஐந்தாற் சுழல்வன்தயிரிற் பொருமத்துறவே.

30 மத்துறுதண் தயிரிற்புலன் தீக்கதுவக்கலங்கி
வித்துறுவேனை விடுதிகண்டாய் வெண்டலைமிலைச்சிக்
கொத்துறுபோது மிலைந்துகுடர்நெடு மாலைசுற்றித்
தத்துறுநீறுடனாரச் செஞ்சாந்தணிசச்சையனே.

31 சச்சையனே மிக்கதண் புனல்விண்கால் நிலம்நெருப்
பாம்
விச்சையனே விட்டிடுதிகண்டாய் வெளியாய்கரியாய்
பச்சையனே செய்யமேனியனே யொண்படஅரவக்
கச்சையனே கடந்தாய்தடந்தாள அடற்கரியே.

32 அடற்கரிபோல் ஐம்புலன்களுக்கஞ்சி அழிந்தஎன்னை
விடற்கரியாய் விட்டிடுதிகண்டாய் விழுத்தொண்டர்க்
கல்லால்
தொடற்கரியாய் சுடர்மாமணியேசுடு தீச்சுழலக்
கடற்கரிதாயெழு நஞ்சமுதாக்குங் கறைக்கண்டனே.

33 கண்டதுசெய்து கருணைமட்டுப்பருகிக் களித்து
மிண்டுகின்றேனை விடுதிகண்டாய் நின்விரைமலர்த்
தாள்
பண்டுதந்தாற் போற்பணித்துப் பணிசெயக்கூவித்
தென்னைக்
கொண்டென்எந் தாய்களையாய்களையாய குது
குதுப்பே.

34 குதுகுதுப்பின்றி நின்(று) என்குறிப்பேசெய்து நின்
குறிப்பில்
விதுவிதுப்பேனை விடுதிகண்டாய் விரையார்ந்தினிய
மதுமதுப்போன்றென்னை வாழைப்பழத்தின் மனங்
கனிவித்
தெதிர்வதெப்போது பயில்விக்கயிலைப் பரம்பரனே.

35 பரம்பரனேநின் பழஅடியாரொடும் என்படிறு
விரும்(பு) அரனே விட்டிடுதிகண்டாய் மென்முயற்
கறையின்
அரும்(பு) அரநேர்வைத் தணிந்தாய்பிறவி ஐவாயரவம்
பொரும்பெருமான் வினையேன்மனம் அஞ்சிப்
பொதும்புறவே.

36 பொதும்புறுதீப்போற் புகைந்தெரியப் புலன்தீக்கதுவ
வெதும்புறுவேனை விடுதிகண்டாய் விரையார்நறவந்
ததும்புமந்தாரத்தில் தாரம்பயின்று மந்தம்முரல்
வண்(டு)
அதும்புங்கொழுந்தேன் அவிர்சடைவானத்
தடலரைசே.

37 அரைசேஅறியாச் சிறியேன்பிழைக்கஞ்ச லென்னின் அல்லால்
விரைசேர்முடியாய் விடுதிகண்டாய் வெண்ணகைக் கருங்கண்
திரைசேர்மடந்தை மணந்ததிருப்பொற் பதப்புயங்கா
வரைசேர்ந்தடரந் தென்னவல்வினை தான்வந்தடர் வனவே.

38 அடர்புலனால்நிற் பிரிந்தஞ்சி அஞ்சொல்நல்லார் அவர்தம்
விடர்விடலேனை விடுதிகண்டாய் விரிந்தேயெரியுஞ்
சுடரனையாய் சுடுகாட்டரசே தொழும்பர்க்கமுதே
தொடர்வரியாய் தமியேன்தனி நீக்குந்தனித் துணையே.

39 தனித்துணைநீநிற்க யான் தருக்கித் தலையால்நடந்த
வினைத்துணையேனை விடுதிகண்டாய் வினையேனுடைய
மனத்துணையே என்தன்வாழ்முதலே எனக்கெய்ப் பில்வைப்பே
தினைத்துணையேனும் பொறேன்துயராக்கையின் திண்வலையே.

40 வலைத்தலைமான் அன்னநோக்கியர் நோக்கின்வலையிற் பட்டு
மிலைத்தலைந்தேனை விடுதிகண்டாய் வெண்மதியின் ஒற்றைக்
கலைத்தலையாய் கருணாகரனே கயிலாயமென்னும்
மலைத்தலைவாமலை யாள்மணவாளஎன் வாழ்முதலே.

41 முதலைச்செவ்வாய்ச் சியர்வேட்கை வெந்நீரிற்கடிப்ப மூழ்கி
விதலைச்செய்வேனை விடுதிகண்டாய் விடக்கூன் மிடைந்த
சிதலைச்செய்காயம் பொறேன்சிவனே முறையோ முறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங்கா என்சிவகதியே.

42 கதியடியேற்குன் கழல்தந்தருளவும் ஊன்கழியா
விதியடியேனை விடுதிகண்டாய் வெண்டலைமுழையிற்
பதியுடைவாளரப் பார்த்திறைபைத்துச் சுருங்க அஞ்சி
மதிநெடுநீரிற் குளித்தொளிக்குஞ்சடை மன்னவனே.

43 மன்னவனே யொன்றுமா(று) அறியாச்சிறியேன் மகிழ்ச்சி
மின்னவனே விட்டிடுதிகண்டாய் மிக்கவேதமெய்ந் நூல்
சொன்னவனே சொற்கழிந்தவனே கழியாத்தொழும் பர்
முன்னவனே பின்னும்ஆனவனே யிம்முழுதையுமே.

44 முழுதயில்வேற் கண்ணியரென்னும் மூரித்தழல் முழுகும்
விழுதனையேனை விடுதிகண்டாய் நின்வெறிமலர்த்தாள்
தொழுதுசெல்வான் நற்றொழும்பரிற் கூட்டிடுசோத் தெம்பிரான்
பழுதுசெய்வேனை விடேலுடையாய் உன்னைப்பாடுவேனே.

45 பாடிற்றிலேன் பணியேன்மணிநீ யொளித்தாய்க்
குப்பச்சூன்
வீடிற்றிலேனை விடுதிகண்டாய் வியந்தாங்கலறித்
தேடிற்றிலேன் சிவனெவ்விடத்தான் எவர்கண்டன
ரென்(று)
ஓடிற்றிலேன் கிடந்துள்ளுருகேன் நின்றுழைத்
தனனே.

46 உழைதருநோக்கியர் கொங்கைப்பலாப்பழத்(து)
ஈயினொப்பாய்
விழைதருவேனை விடுதிகண்டாய் விடின்வேலைநஞ்சுண்
மழைதருகண்டன் குணமிலிமானிடன் தேய்மதியன்
பழைதருமாபரன் என்றென்றறைவன் பழிப்
பினையே.

47 பழிப்பில்நின்பாதப் பழந்தொழும்பெய்தி விழப்
பழித்து
விழித்திருந்தேனை விடுதிகண்டாய் வெண்மணிப்
பணிலங்
கொழித்துமந்தார மந்தாகினி நுந்தும் பந்தப்பெருமை
தழிச்சிறைநீரிற் பிறைக்கலஞ்சேர்தரு தாரவனே.

48 தாரகைபோலும் தலைத்தலைமாலைத் தழலரப்பூண்
வீரஎன்தன்னை-விடுதிகண்டாய் விடிலென்னைமிக்கார்
ஆரடியான்என்னின் உத்தரகோச மங்கைக்கரசின்
சீரடியார்அடியா னென்றுநின்னைச் சிரிப்பிப்பனே.

49 சிரிப்பிப்பன்சீறும் பிழைப்பைத்தொழும்பையும்
ஈசற்கென்று
விரிப்பிப்பன்என்னை விடுதிகண்டாய் விடின்வெங்கரி
யின்
உரிப்பிச்சன்தோலுடைப் பிச்சன்நஞ்சூண்பிச்சன்
ஊர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சன்என்னையும் ஆளுடைப்பிச்சன்என்றே
சுவனே.

50 ஏசினும்யான்உன்னை ஏத்தினும்என்பிழைக்கே
குழைந்து
வேசறுவேனை விடுதிகண்டாய் செம்பவளவெற்பின்
தேசுடையாய்என்னை ஆளுடையாய்சிற்றுயிர்க்
கிரங்கிக்
காய்சின ஆலமுண்டாய் அமுதுண்ணக் கடையவனே.

---

# திருப்பொன்னூசல்

(அருட்சுத்தி)

ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா

1 சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாராயணன் அறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தரகோச மங்கை
ஆரா அமுதின் அருள்தா ளிணைபாடிப்
போரார் வேற்கண்டமடவீர் பொன்னூசல்
ஆடாமோ.

2 மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்தங்கு தேவர்களுங் காணா மலரடிகள்
தேன்தங்கித் தித்தித் தமுதூறித் தான்தெளிந்
தங்(கு)
ஊன்தங்கி நின்றுருக்கும் உத்தரகோச மங்கைக்
கோன்தங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூசல் ஆடாமோ.

3 முன்ஈறும் ஆதியும் இல்லான் முனிவர் குழாம்
பல்நூறு கோடி இமையோர்கள் தாம்நிற்பத்
தன்நீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி யுத்தரகோச மங்கை
மின்னேறு மாடவியன் மாளிகை பாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

4 நஞ்சமர் கண்டத்தன் அண்டத்தவர் நாதன்
மஞ்சுதோய் மாடமணி உத்தரகோச மங்கை
அஞ்சொலாள் தன்னோடுங் கூடி அடியவர்கள்
நெஞ்சுளே நின்றமுத மூறிக்கருணை செய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூயபுகழ் பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ.

5 ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்
காணாக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்
நாணாமே உய்ய ஆட்கொண்டருளி நஞ்சுதனை
ஊனாக உண்டருளும் உத்தரகோச மங்கைக்
கோனார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ.

6 மாதாடு பாகத்தன் உத்தரகோச மங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டென் தொல்பிற
வித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

7 உன்னற் கரியதிரு உத்தரகோச மங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடும்அணி மயில்போல்
என்னத்தன் என்னையும் ஆட்கொண்டான் எழில்
பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூசல்
ஆடாமோ.

8 கோலவரைக் குடுமிவந்து குவலயத்துச்
சாலஅமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞாலமிகப் பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழுந்திரு வுத்தரகோச மங்கை
மாலுக்கரியானை வாயார நாம்பாடிப்
பூலித்தகங் குழைந்து பொன்னூசல் ஆடாமோ.

9 தெங்குலவு சோலைத்திரு உத்தரகோச மங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையுந்தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

---

## இராச பாரம் பரியம்

1 செண்டு கொண்டுகரி காலனொரு காலி னிமயச்
சிமய மால்வரை திரித்தருளி மீன வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்புலிக்குறி பொறித்தது மறித்தபொழுதே.

2 கால மும்மையு முணர்ந்தருளு நாரதனெனுங்
கடவுள் வேதமுனிவந்து கடல்சூழ் புவியினின்
மேலு மன்னருள ரல்லரென வாசி புகலாப்
புகல்வதென்றுளது சோளராச னென்று
புகல்வான்.

3 பண்டு பாரத மெனுங்கதை பராச ரன்மகன்
பகர வெங்கரிமுகன் பரு மருப்பை யொருகைக்
கொண்டு மேருசிக ரத்தொரு புறத்தி லெழுதக்
குவலயம் பெறு தவப்பய னுரைப்ப வரிதால்.

4 பாய தத்தினுள வாகிய பவித்திர கதை
பரம னற்சரிதை மெய்ப்படுமுழைய நான்மறைகளே
நேர தற்கிதனை நான்மொழிய நீயெழுதுமுன்
னெடியகுன் றின்பிசை யேமிசைவதான
கதைகேள்.

5 அதன்முத றகணவரு மாதிமுதன் மாயவனெனு
மையனும்ப்ரணவ மாகவடை வேதமுமதன்
பதம்வகுக்கவரு பாரதமு மும்பதமுடன்
பாதமான சிலவந்த பலவந்த வகையும்.

6 அந்த முட்டை யிருக்கும விருக்கின்றவழியே
யாகிவந்தவவ் வருக்கமும் வருக்கமுழுதும்
வந்த வட்டமு மொட்டரிய சங்கிதைகளும்
வாய்மை வேதியர்கடாம் விதியெனும்
வகையுமே.

7 கமல யோனிமுத லாசவரு முங்கண் மாயிற்
காவன் மன்னவர்க ளாகிவருகின்ற முறையா
லமல வேதமிது தானுமிதிலாரணை நிலைத்
தமல னேயபயனாக வறிகென் றருளியே.

8 அரணி வேள்வியிலகப்படு மகண் வருவா
யரவணைத்துயிலு மாதி முதலாகவடையவன்
றரணி காவலனை வுஞ்செல மொழிந்து முனிவன்
றனெழுந்தருள மாமுனி மொழிந்தபடியே.

9 ஆதி மாலமல நாபிகம லத்த யனுதித்
தவன்ம ரீசி யெனுமண்ணலை யளித்தபரிசுங்
காதல் கூர்தரு மரீசிமகனாகி வருமக்
காசி பன்கதி ரருக்கனை யளித்த பரிசும்.

10 அவ்வ ருக்கன்மக னாகிமனுமேதி னிபுரந்
தரிய காதலனை யாவினது கன்று நிகரென்
றெவ்வ ருக்கமும் வியப்பமுறை செய்த பரிசு
மிக்கு வாகுவிவன் மைந்தனென வந்த பரிசும்.

11 இக்கு வாகுவின் மகன் புதல்வனை வுரவோ
னிகலு ரஞ்செய வருஞ்செய புரந்தரனெனுஞ்
சக்கு வாயிர முடைக்களிறுவாகனமெனத்
தானிருந்துபொரு தானவரை வென்றசயமும்.

# பிடித்தபத்து

(முத்திக்கலப்புரைத்தல்)

## எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

1 உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெருமானே,
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

2 விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடைய மெய்ப்பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணம் காத்தெனை ஆண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

3 அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

4 அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெருமானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

5 ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலியேற்கு
விழுமிய தளித்ததோ ரன்பே
செப்புதற்கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெருமானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

6 அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரிய எம்பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெருமானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

7 பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை உகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெருமானே
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

8 அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற
ஆதியே யாதும் ஈறில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெருமானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை அல்லையாய் நிற்கும்
எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

9 பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

10 புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே

---

# ನಾಲಾಯಿರ ದಿವ್ಯ ಪ್ರಬಂಧಂ

ಹನ್ನೆರಡು ಆೞ್ವಾರುಗಳು ಹಾಡಿದ ಈ ದಿವ್ಯ ಪ್ರಬಂಧಗಳು ತಮಿಳು ವೇದವೆಂದು ವೈಷ್ಣವರಿಂದ ಗೌರವಿತವಾಗಿವೆ. ಆೞ್ವಾರ್ ಎಂದರೆ ಭಗವಂತನ ಅನಂತ ಕಲ್ಯಾಣ ಗುಣಗಳಲ್ಲಿ ಮುಳುಗಿದವರು ಎಂದು ಅರ್ಥ. ವಿಷ್ಣು ಭಕ್ತರನ್ನು ಆೞ್ವಾರುಗಳೆಂದೂ ಶಿವಭಕ್ತರನ್ನು ನಾಯನಾರುಗಳೆಂದೂ ಕರೆಯುವುದು ತಮಿಳರ ಸಂಪ್ರದಾಯ. ಆೞ್ವಾರುಗಳು ಅವತಾರ ಪುರುಷರೆಂದೂ ಜ್ಞಾನಪರಿಪೂರ್ಣರೆಂದೂ ವೈಷ್ಣವ ಮತಪ್ರವರ್ತಕರೆಂದೂ ಪ್ರಖ್ಯಾತರಾಗಿದ್ದಾರೆ. ಭಕ್ತಿರಸಪೂರಿತ ವಾದ ಈ ಪ್ರಬಂಧಗಳು ಸುಲಭ ಸರಳಶೈಲಿಯಲ್ಲಿದ್ದು ಎಲ್ಲರಿಗೂ ಪ್ರಿಯ ವಾಗಿವೆ. ಇಲ್ಲಿ ಆರು ಆೞ್ವಾರುಗಳ ಪಾಶುರಗಳಿಂದ ಭಾಗಗಳನ್ನು ಎತ್ತಿ ಕೊಟ್ಟಿದೆ. ಈ ಆರು ಆೞ್ವಾರುಗಳ ಚರಿತ್ರೆಯನ್ನು ಸಂಕ್ಷೇಪವಾಗಿ ಇಲ್ಲಿ ಹೇಳಿದೆ.

# ಪೆರಿಯಾೞ್ವಾರ್

ಇವರು ತಿರುನಲ್ವೇಲಿ ಜಿಲ್ಲೆಯ ಶ್ರೀ ವಿಲ್ಲಿಪುತ್ತೂರಿನಲ್ಲಿ ಬ್ರಾಹ್ಮಣ ಕುಲದಲ್ಲಿ ಜನಿಸಿದವರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೮ನೆಯ ಶತಮಾನ. ಇವರ ತಂದೆ ಮುಕುಂದಾಚಾರ್ಯರು, ತಾಯಿ ಪದುಮಯಾರ್. ಇವರ ಚಿಕ್ಕಂದಿನ ಹೆಸರು ವಿಷ್ಣುಚಿತ್ತರು. ಇವರು ಹೂತೋಟ ಬೆಳಸಿ ಹೂಮಾಲೆ ಕಟ್ಟಿ ದೇವರಿಗೆ ಅರ್ಪಿಸಿ ಕೈಂಕರ್ಯ ನಡಸುತ್ತ ಬದುಕನ್ನು ಸಾಗಿಸಿದರು.

ಮಧುರೆಯನ್ನು ಆಳಿದ ಶ್ರೀವಲ್ಲಭದೇವಪಾಂಡ್ಯನು ಒಮ್ಮೆ ಮತ ವಿಚಾರಗಳನ್ನು ತಿಳಿದುಕೊಳ್ಳಬೇಕೆಂಬ ಇಚ್ಛೆಯಿಂದ "ಪರಮಾರ್ಥತತ್ವ ಇಂಥದೆಂದು ನಿರೂಪಿಸಿ ತಿಳಿಸುವ ಹಿರಿಯರಿಗೆ ಇದು ಸಲ್ಲತಕ್ಕದ್ದು" ಎಂದು ಸಾರಿಸಿ ಅರಮನೆಯಲ್ಲಿ ಒಡ್ಡಿದ ವಿದ್ಯಾಶುಲ್ಕವನ್ನು ಈ ಆೞ್ವಾರು ವಿಷ್ಣುಕೃಪೆಯಿಂದ ವೈಷ್ಣವ ಮತ ಪ್ರತಿಪಾದನೆ ಮಾಡಿ ಪಡೆದು, ಆ ದ್ರವ್ಯವನ್ನು ವಿಷ್ಣುಕೈಂಕರ್ಯಾದಿಗಳಿಗೆ ವಿನಿಯೋಗಿಸಿದರೆಂದು ಹೇಳುತ್ತಾರೆ. ಅರಸನು ಇವರಿಗೆ ಪ(ಭ)ಟ್ಟರ್‌ಪಿರಾನ್ ಎಂಬ ಗೌರವನಾಮವನ್ನು ಕೊಟ್ಟು ಇವರ ಶಿಷ್ಯತ್ವವನ್ನು ಕೈಕೊಂಡನು.

ಇವರ ವಿಷಯದಲ್ಲಿ ರಚಿತವಾಗಿರುವ ತನಿ ಪದ್ಯ ಹೀಗಿದೆ:—

"ಗುರುಮುಖ ಮನಧೀತ್ಯ ಪ್ರಾಹ ವೇದಾನಶೇಷಾನ್
ನರಪತಿ ಪರಿಕ್ಲೃಪ್ತಂ ಶುಲ್ಕಮಾದಾತು ಕಾಮಃ
ಶ್ವಶುರ ಮಮರ ವಂದ್ಯಂ ರಂಗನಾಥಸ್ಯ ಸಾಕ್ಷಾತ್
ದ್ವಿಜಕುಲ ತಿಲಕಂ ತಂ ವಿಷ್ಣುಚಿತ್ತಂ ನಮಾಮಿ."

# நாலாயிரதிவ்யப்ரபந்தம்

## அஞ்சாம்பத்து (பெரியாழ்வார்)

### வாக்குத்தூய்மை

### கலிவிருத்தம்

*தன்யாசி ராகம்—அட தாளம்*

1 வாக்குத் தூய்மை யிலாமையினாலே மாதவா வுன்னை
வாய்க்கொள்ளமாட்டேன்
நாக்குநின்னை யல்லாலறியாது நானதஞ்சுவனென்
வசமன்று
மூர்க்குப்பேசுகின்றா னிவனென்று முனிவாயேலு
மென் நாவினுக்காற்றேன்
காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர் காரணாகருளக்
கொடியானே.

2 சழக்குநாக்கொடு புன்கவிசொன்னேன் சங்குசக்கர
மேந்துகையானே
பிழைப்பராகிலும் தம்மடியார்சொல் பொறுப்பது
பெரியோர் கடனன்றே
விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்
வேறொருவரோ டென்மனம் பற்றாது
உழைக்கோர் புள்ளிமிகையன்று கண்டாயூழியேழுல
குண்டுமிழ்ந்தானே.

3 நன்மைதீமைக ளொன்றுமறியேன் நாரணாவென்னு
மித்தனையல்லால்
புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று
கண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னை யொன்றுமறியேனோவாதே
நமோநாரணாவென்பன்
வன்மையாவதுன் கோயிலில்வாழும் வைட்டணவ
னென்னும் வன்மைகண்டாயே.

4 நெடுமையாலுலகேழுமளந்தாய் நின்மலா நெடியாய்,
அடியேனை,
குடிமைகொள்வதற் கையுறவேண்டா கூறை
சோறிவை வேண்டுவதில்லை,
அடிமையென்னுமக் கோயின்மையாலே யங்கங்கே
யவைபோதருங் கண்டாய்,
கொடுமைக்கஞ்சனைக் கொன்றுநின் தாதை கோத்த
வன்தளை கோள்விடுத்தானே.

5 தோட்டமில்லவளாத்தொழுவோடைத் துடவையும்
கிணறுமிவை யெல்லாம்
வாட்டமின்றியுன் பொன்னடிக்கீழே வளைப்பகம்
வகுத்துக் கொண்டிருந்தேன்
நாட்டுமானிடத் தோடெனக்கரிது நச்சுவார்பலர் கேழ
லொன்றாகி
கோட்டுமண்கொண்ட கொள்கையினானே குஞ்சரம்
வீழக் கொம்பொசித்தானே.

6 கண்ணா நான்முகனைப் படைத்தானே காரணா கரியாய்
அடியேன்நான்
உண்ணாநாள் பசியாவதொன்றில்லை யோவாதே நமோ
நாரணாவென்று
எண்ணாநாளும், இருக்கெசுச்சாமவேத நாண்மலர்
கொண்டுன்பாதம்
நண்ணாநாள் அவைதத்துறுமாகி லன்றெனக்கவை
பட்டினிநாளே.

7 வெள்ளைவெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தை
யாகவிரித்து அதன்மேலே,
கள்ளநித்திரை கொள்கின்றமார்க்கம் காணலாங்கொ
லென்றாசையினாலே,
உள்ளஞ்சோர வுகந்தெதிர்விம்மி யுரோமகூபங்களாய்
கண்ணநீர்கள்
துள்ளம்சோரத் துயிலணைகொள்ளேன் சொல்லாயா
னுன்னைத் தத்துறுமாறே.

8 வண்ணமால்வரையே குடையாகமாரிகாத்தவனே
மதுசூதா
கண்ணனே! கரிகோள்விடுத்தானே! காரணா!
களிறட்டபிரானே.
எண்ணுவாரிடரைக் களைவானே! ஏத்தரும் பெருங்
கீர்த்தியினானே
நண்ணிநானுன்னை நாடொறுமேத்தும் நன்மையே
யருள்செய் யெம்பிரானே.

9 நம்பனே! நவின்றேத்த வல்லார்கள்நாதனே!
நரசிங்கமதானாய்!
உம்பர்கோனுல கேழுமளந்தாய் ஊழிமுன்னேந்தி
கம்பமாகரி கோள்விடுத்தானே காரணாகடலைக்
கடைந்தானே
எம்பிரானென்னை யாளுடைத்தேனே யேழையே
னிடரைக்களையாயே.

10 காமர்தாதை கருதலர்சிங்கம் காணவினிய கருங்குழல் குட்டன்
வாமனனென் மரகதவண்ணன் மாதவன்மதுசூதனன் தன்னை
சேமநன்கமரும் புதுவையர்கோன் விட்டுசித்தன் வியன்தமிழ்பத்தும்
நாமமென்று நவின்றுரைப்பார்கள் நண்ணுவாரொல்லை நாரணனுலகே.

---

## ಆಂಡಾಳ್

ಪೆರಿಯಾಟ್ವಾರರು ತಾವು ಬೆಳಸಿದ ಹೂತೋಟದಲ್ಲಿ ಒಂದು ದಿನ ಒಂದು ಚೆಲುವಾದ ಹೆಣ್ಣು ಮಗುವನ್ನು ಕಂಡು ಅದನ್ನು ತೆಗೆದುಕೊಂಡು ತಮ್ಮ ಮಗಳಾಗಿ ಸಾಕಿ ಕೋದೈ ಎಂಬ ಹೆಸರಿಟ್ಟು ಬೆಳಸಿದರು. ಈಕೆ ಎಳವೆಯಲ್ಲೇ ಸಕಲ ವಿದ್ಯಾ ಪಾರಂಗತರಾಗಿ ವಿಷ್ಣುವನ್ನು ಪತಿಭಾವ ದಿಂದ ಆರಾಧಿಸುತ್ತ ಬಂದರು. ಪೆರಿಯಾಟ್ವಾರರು ದೇವರಿಗೆಂದು ಕಟ್ಟಿಟ್ಟಿದ್ದ ಮಾಲೆಗಳನ್ನು ಅವರಿಲ್ಲದ ಹೊತ್ತಿನಲ್ಲಿ ಈಕೆ ತಾನು ಮುಡಿದು ಕೊಂಡು, ಕನ್ನಡಿಯಲ್ಲಿ ತನ್ನ ಅಲಂಕಾರವನ್ನು ನೋಡಿ ಹಿಗ್ಗಿ, ತನ್ನ ಚೆಲುವು ದೇವರಿಗೆ ಒಪ್ಪೀತೋ ಎಂದು ಮನದಲ್ಲೆ ನೆನೆಯುತ್ತ, ತಂದೆ ಬರುವ ಹೊತ್ತಿಗೆ ಆ ಮಾಲೆಗಳನ್ನು ತೆಗೆದು ಮೊದಲಿನಂತೆಯೇ ಸುತ್ತಿ ಇಡುತ್ತಿದ್ದರು. ಇದನ್ನು ತಿಳಿಯದೆ ತಂದೆ ಆ ಮಾಲೆಗಳನ್ನು ದೇವರಿಗೆ ಅರ್ಪಿಸುತ್ತ ಬಂದರು. ಒಂದು ದಿನ ಹೂಮಾಲೆಯಲ್ಲಿ ಒಂದು ನಿಡು ಗೂದಲನ್ನು ಕಂಡು ಆಟ್ವಾರರು ಅಂಜಿ, ಸಂಗತಿಯನ್ನು ಮಗಳಿಂದ ತಿಳಿದು ಆಕೆಯಮೇಲೆ ಕೋಪಿಸಿ, ಮಾಲೆಯನ್ನು ದೇವರಿಗೆ ಅರ್ಪಿಸದೆ ಬಿಟ್ಟರು. ಆ ರಾತ್ರಿ ದೇವರು ಕನಸಿನಲ್ಲಿ ಅವರಿಗೆ ಕಾಣಿಸಿಕೊಂಡು ಮಾಲೆಯರ್ಪಿಸದ ಕಾರಣವನ್ನು ಕೇಳಲು ಆಟ್ವಾರರು ತಮ್ಮ ಮಗಳ ಅಜ್ಞಾನಾಪರಾಧವನ್ನು ಹೇಳಿದರು. ಅದಕ್ಕೆ ದೇವರು ಹಾಗೆ ಆಕೆ ಮುಡಿದು ಪರಿಶುದ್ಧವಾದ ಮಾಲೆಯಲ್ಲದೆ ತಮಗೆ ಬೇರೆ ಯಾವ ಮಾಲೆಯೂ ಪ್ರಿಯವಲ್ಲವೆಂದು ಹೇಳಿ ಅದೃಶ್ಯವಾಗಲು, ಆಟ್ವಾರರಿಗೆ ಸಂತೋಷಾಶ್ಚರ್ಯಗಳಾಗಿ ತಮ್ಮ ಮಗಳ ಮೇಲೆ ಎಂದಿಗಿಂತ ಮಿಗಿಲು ಪ್ರೀತಿ ಹುಟ್ಟಿತು. ಅಂದಿನಿಂದ ಮೊದಲು ಕೋದೈ ಮುಡಿದ ಮಾಲೆಯೇ ದೇವರಿಗೆ ಅರ್ಪಣವಾಗುತ್ತಿತ್ತು. ಇದರಿಂದ ಆಕೆಗೆ ಶೂಡಿಕ್ಕೊಡುತ್ತ ನಾಚ್ಚಿಯಾರ್ (ಸೂಡಿ ನಾಯಕಿ) ಎಂದು ಹೆಸರಾಯಿತು.

ಮಗಳು ಪ್ರಾಪ್ತವಯಸ್ಕಳಾಗಲು, ತಂದೆ ಆಕೆಗೆ ತಕ್ಕ ವರನನ್ನು ಹುಡುಕಲಾರಂಭಿಸಿದರು. ಆಕೆ ಶ್ರೀರಂಗನಾಥನೇ ತನಗೆ ಗಂಡನೆಂದೂ ಮನುಷ್ಯರು ಯಾರಿಗಾದರೂ ಕೊಡುವುದಾಗಿ ಬಾಯಲ್ಲಿ ಹೇಳಿದರೂ

ತಾನು ಪ್ರಾಣತ್ಯಾಗ ಮಾಡುವುದಾಗಿಯೂ ಹೇಳಿಬಿಟ್ಟಳು. ಮಗಳ ವೈರಾಗ್ಯವನ್ನು ಕಂಡು ತಂದೆ ತುಂಬ ಕಳವಳಗೊಂಡರು. ಮತ್ತೆ ಶ್ರೀರಂಗನಾಥನು ಕನಸಿನಲ್ಲಿ ತೋರಿ ತಾನೇ ಆಕೆಯ ಕೈಹಿಡಿಯುವುದಾಗಿಯೂ ಆಕೆಯನ್ನು ಶ್ರೀರಂಗಕ್ಕೆ ಕರೆದುತರುವಂತೆಯೂ ಹೇಳಲು, ಅದೇಪ್ರಕಾರ ಆಟ್ವಾರರು ಮಗಳನ್ನು ಸಿಂಗರಿಸಿ ಪರಿವಾರ ಸಮೇತ ಶ್ರೀರಂಗಕ್ಕೆ ಕರೆದುಕೊಂಡು ಹೋದರು. ಅಲ್ಲಿ ಆಕೆ ಶ್ರೀರಂಗನಾಥನಿಂದ ಸ್ವೀಕೃತರಾಗಿ ಐಕ್ಯರಾದರು.

ಈಕೆ ೩೦ ತಿರುಪ್ಪಾವೈಗಳನ್ನೂ ೧೪೩ ನಾಚ್ಚಿಯಾರ್ ತಿರುಮೊಳಿ ಗಳನ್ನೂ ರಚಿಸಿದ್ದಾರೆ. ತಿರುಪ್ಪಾವೈ ದಿವ್ಯ ಪ್ರಬಂಧ ಗೋಕುಲದ ಹೆಣ್ಣು ಮಕ್ಕಳು ಕೃಷ್ಣನನ್ನು ತಮ್ಮ ನಾಯಕನನ್ನಾಗಿ ಪಡೆಯಲೂ ನಾಡಿನ ಏಳ್ಗೆಗಾಗಿಯೂ ಪ್ರಾರ್ಥಿಸಿ 'ಪಾವೈನೋನ್ಬು' (ಕನ್ಯಾವ್ರತ) ಎಂಬ ವ್ರತವನ್ನು ಆಚರಿಸಿದ ವಿಷಯವನ್ನು ಕುರಿತದ್ದು.

ஆண்டாளருளிச்செய்த

# திருப்பாவை

## இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா

பிலஹரி ராகம்—அடதாளம்

1 மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப்போதுவீர் போதுமினோ, நேரிழையீர்!
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச்சிறு மீர்காள்
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணியசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர்புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

பந்துவராளி ராகம்—ஆதிதாளம்

2 வையத்து வாழ்வீர்காள் நாமும் நம்பாவைக்கு
செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச் சென்றோதோம்
ஐயமும் பிச்சையுமாந்தனையும் கைகாட்டி
உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம் பாவாய்.

பந்துவராளி ராகம்—திரிபுடைதாளம்

3 ஓங்கி யுலகளந்த வுத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்து
ஓங்குபெருஞ் செந்நெலூடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி
வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல்பெரும் பசுக்கள்
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம் பாவாய்.

காம்போதி ராகம்—ஆதிதாளம்

4 ஆழிமழைக் கண்ணாவொன்று நீகைகரவேல்
ஆழியுள் புக்குமுகந்து கொடார்த்தேறி
ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து
பாழியந்தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்
வாழவுலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம் பாவாய்.

தோடி ராகம்—ரூபகதாளம்

5 மாயனை மன்னுவட மதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றுமணி விளக்கை
தாயைக்குடல் விளக்கஞ்செய்த தாமோதரனை
தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித் தொழுது
வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோரெம் பாவாய்.

பூபாள ராகம்—ஆதிதாளம்

6 புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய் எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ளவெழுந் தரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோரெம் பாவாய்.

பூபாள ராகம்—ரூபகதாளம்

7 கீசுகீசென் றெங்குமானைச் சாத்தங் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாசநறுங் குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ
நாயகப் பெண்பிள்ளாய் நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீகேட்டே கிடத்தியோ
தேசமுடையாய் திறவேலோரெம் பாவாய்.

பூபாள ராகம்—ஆதிதாளம்

8 கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல்காத்துஉன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் கோதுகலமுடைய
பாவாயெழுந்திராய் பாடிப்பறை கொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவா வென் றாராய்ந் தருளேலோரெம் பாவாய்.

மோஹன ராகம்—ஆதி தாளம்

9 தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய
தூபங் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமன் மகளே மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீரவளை யெழுப்பீரோ உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோரெம் பாவாய்.

அசாவேரி ராகம்—ஆதி தாளம்

10 நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்
தோற்று முனக்கே பெருந்துயில் தான்தந்தானோ
ஆற்ற அனந்தலுடையா யருங்கலமே
தேற்றமாய் வந்துதிற வேலோரெம் பாவாய்.

ஸஹானா ராகம்—திரிபுடை தாளம்

11 கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே
புற்றரவல்குல் புனமயிலே போதராய்
சுற்றத்துத் தோழிமா ரெல்லாரும் வந்துநின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன் பேர்பாட
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோரெம் பாவாய்.

கேதாரகௌள ராகம்—ஆதிதாளம்

12 கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழ நின்றுவாசல் கடைபற்றி
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கினி யானைப்பாடவும் நீவாய் திறவாய்
இனித்தா னெழுந்திரா யீதென்ன பேருறக்கம்
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோரெம் பாவாய்.

அடாணா ராகம்—ரூபகதாளம்

13 புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லாவரக்கனை
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமைப் பாடிப்போய்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக்களம் புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று
புள்ளும் சிலம்பின காண்போதரிக் கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே
பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோரெம் பாவாய்.

சாரங்க ராகம்—ஆதிதாளம்

14 உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழு நீர்வாய் நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்ன மெழுப்புவான் வாய்பேசும்
நங்கா யெழுந்திராய் நாணாதாய் நாவுடையாய்
சங்கொடு சக்கர மேந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோரெம் பாவாய்.

ஸௌராஷ்ட்ர ராகம்—அடதாளம்

15 எல்லே யிளங்கிளியே யின்னமுறங் குதியோ
சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதருகின்
றேன்
வல்லையுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானே தானாயிடுக
ஒல்லை நீபோதாய் உனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்
தெண்ணிக்கொள்
வல்லானைக் கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோரெம் பாவாய்.

யமுனா கல்யாணி ராகம்—ஆதிதாளம்

16 நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே கொடித்தோன்றும் தோரண
வாசல் காப்பானே மணிக்கதவம் தான்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலேவாய் நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழ பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே யம்மாநீ
நேச நிலைக்கதவம் நீக்கேலோரெம் பாவாய்.

யமுனா கல்யாணி ராகம்—ரூபகதாளம்

17 அம்பரமே தண்ணீரே சோறேயறஞ் செய்யும்
எம்பெருமான் நந்தகோபால எழுந்திராய்
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதா யறிவுறாய்
அம்பரமூடறுத் தோங்கி யுலகளந்த
உம்பர் கோமானே யுறங்கா தெழுந்திராய
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயுமுறங் கேலோரெம் பாவாய்.

### சாவேரி ராகம்—ஆதிதாளம்

18 உந்து மதகளிற்ற னோடாத தோள்வலியன்
நந்த கோபாலன் மருமகளே நப்பின்னாய்
கந்தம் கமழும் குழலீ கடை திறவாய்
வந்தெங்கும் கோழி யழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலியுன் மைத்துனன் பேர்பாட
செந்தாமரைக் கையால் சீரார் வளை யொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம் பாவாய்.

### ஸ்ரீ ராகம்—ஆதிதாளம்

19 குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர்மார்பா வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை
எத்தனைபோதும் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனையேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவமன்று தகவேலோரெம் பாவாய்.

### தேசிய ராகம்

20 முப்பத்துமூவ ரமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்
செப்பமுடையாய் திறலுடையாய் செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா துயிலெழாய்
செப்பென்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே யெம்மை நீராட்டேலோரெம் பாவாய்.

அபரூப ராகம்—ஆதி தாளம்

21 ஏற்றகலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே யறிவுறாய்
ஊற்றமுடையாய் பெரியாய் உலகினில்
தோற்றமாய் நின்றசுடரே துயிலெழாய்
மாற்றாருனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றாது வந்துன்னடி பணியுமா போலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோரெம் பாவாய்.

பைரவி ராகம்—ஆதி தாளம்

22 அங்கண் மாஞாலத்தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட்டிற் கீழே
சங்கமிருப்பார்போல் வந்துதலைப் பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ
திங்களு மாதித்தியனு மெழுந்தாற் போல்
அங்கணிரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதி யேல்
எங்கள் மேல்சாப மிழிந்தேலோரெம் பாவாய்.

அடாணா ராகம்—ஆதி தாளம்

23 மாரிமலை முழைஞ்சில் மன்னிக்கிடந் துறங்கும்
சீரிய சிங்கமறி வுற்றுத்தீ விழித்து
வேரிமயிர் பொங்க வெப்பாடும் பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமா போலே நீபூவைப் பூவண்ணா உன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்காசனத் திருந்துயாம் வந்த
காரியமா ராய்ந்தருளேலோரெம் பாவாய்.

### பியாகடை ராகம்—ஆதிதாளம்

24 அன்றிவ்வுலக மளந்தாயடி போற்றி
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி
பொன்றச்சகட முதைத்தாய் புகழ்போற்றி
கன்றுகுணிலா வெறிந்தாய் கழல்போற்றி
குன்றுகுடையா வெடுத்தாய் குணம்போற்றி
வென்றுபகை கெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றுன் சேவகமே யேத்திப்பறை கொள்வான்
இன்றுயாம் வந்தோ மிரங்கேலோரெம் பாவாய்.

### சங்கராபரணம்—ஆதிதாளம்

25 ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாயொளித்து வளர
தருக்கி லானாகித் தான் தீங்குநினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோரெம் பாவாய்.

### ஆரபி ராகம்—ஆதிதாளம்

26 மாலே மணிவண்ணா மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடுடை யனவே
சாலப்பெரும் பறையே பல்லாண் டிசைப்பாரே
கோலவிளக்கே கொடியே விதானமே
ஆலினிலையா யருளேலோரெம் பாவாய்.

ஆனந்தபைரவி ராகம்—ஆதிதாளம்

27 கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா உன்றன்னைப்
பாடிப்பறை கொண்டுயாம் பெறுசம்மானம்
நாடுபுகழும் பரிசினால் நன்றாக
சூடகமே தோள்வளையே தோடேசெவிப் பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பால்சோறு
மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம் பாவாய்.

தன்யாசி ராகம்—ஆதிதாளம்

28 கறவைகள் பின்சென்று கானஞ் சேர்ந்துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்று மில்லாத கோவிந்தா உன்றன்னோ
டுறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது
அறியாத பிள்ளைகளோ மன்பினால் உன்றன்னைச்
சிறுபேரழைத் தனவும் சீறியருளாதே
இறைவா நீதாராய் பறையேலோரெம் பாவாய்.

கல்யாணி ராகம்—ஆதிதாளம்

சாற்றுப்பாட்டுக்கள்

29 சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றவே லெங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப்பறை கொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறப்புக்கும் உன்றன்னோ
டுற்றோமேயாவோ முனக்கே நாமாட் செய்வோம்
மற்றை நங்காமங்கள் மாற்றேலோரெம் பாவாய்.

சுருட்டி ராகம்—ரூபகதாளம்

30 வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை
சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டுமால் வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின்புறுவரெம் பாவாய்.

---

# ಕುಲಶೇಖರಾೞ್ವಾರ್

ಇವರು ಚೇರದೇಶದ ಅರಸರಾಗಿದ್ದರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೮ನೆಯ ಶತಮಾನ. ಶ್ರೀರಂಗದ ರಂಗನಾಥನಲ್ಲಿ ವಿಶೇಷ ಭಕ್ತಿಯಿಟ್ಟು ಅಲ್ಲೇ ಕೈಂಕರ್ಯದಲ್ಲಿ ತೊಡಗಿ ಭಕ್ತವೃಂದದಲ್ಲಿ ಇರಬೇಕೆಂಬ ಆಸೆಯಿಂದ, ಲೌಕಿಕವ್ಯವಹಾರಗಳಲ್ಲಿ ಅನಾಸಕ್ತರಾಗಿದ್ದರು. ರಾಮಾಯಣ ಶ್ರವಣದಲ್ಲಿ ಇವರಿಗೆ ತುಂಬ ಶ್ರದ್ಧೆ. ಕೊನೆಗೆ ಅರಸುತನವನ್ನು ತೊರೆದು ಶ್ರೀರಂಗವನ್ನು ಸೇರಿ ರಂಗನಾಥನ ಸೇವೆಯಲ್ಲಿ ನಿರತರಾಗಿ ಆತನಲ್ಲೇ ಐಕ್ಯರಾದರು. ಇವರ ೧೦೫ ಪಾಶುರಗಳಿಗೆ ಪೆರುಮಾಳ್ ತಿರುಮೊೞಿ ಎಂದು ಹೆಸರು ಬಂದಿದೆ. ಇವರು ಸಂಸ್ಕೃತದಲ್ಲಿ ಮುಕುಂದಮಾಲಾ ಎಂಬ ಸ್ತೋತ್ರವನ್ನು ರಚಿಸಿದ್ದಾರೆ.

# பெருமாள் திருமொழி

## 7-வது ஆலை நீள் கரும்பு

*செய்வளர் காட்சியின் சீரை யசோதைபோல்*
*தாய்தேவகி பெருந்தாழ் வெணிப்புலம்பல்*

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

*கேதாரகௌள ராகம்—அடதாளம்*

1 ஆலைநீள் கரும்பன்னவன் தாலோ அம்புயத்தடங்
கண்ணினன் தாலோ
வேலைநீர் நிறத்தன்னவன் தாலோ வேழப்போதக
மன்னவன் தாலோ
ஏலவார் குழலென்மகன் தாலோ என்றுஎன்றுன்னை
என்வாயிடைநிறைய
தாலொலித்திடும் திருவினையில்லாத் தாயரில்
கடையாயின தாயே.

2 வடிக்கொளஞ் சனமெழுது செம்மலர்க்கண்
. மருவிமேலினி தொன்றினை நோக்கி
முடக்கிச் சேவடிமலர்ச்சிறு கருந்தாள்பொலியு
நீர்முகில் குழவியேபோல
அடக்கியாரச் செஞ்சிறு விரலனைத்தும் அங்கை
யோடணைந் தானையிற்கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றிலனந்தோ! கேசவா!
கெடுவேன் கெடுவேனே.

3 முந்தைநன் முறையன்புடை மகளிர் முறைமுறை
தந்தம் குறங்கிடையிருத்தி
எந்தையே! என்றன்குலப் பெருஞ்சுடரே!
எழுமுகில் கணத்தெழில் கவரேறே
உந்தை யாவனென்றுரைப்ப நின்செங்கேழ்
விரலினும் கடைக்கண்ணினும் காட்ட,
நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன்
வசுதேவன் பெற்றிலனே.

4 களிநிலாவெழில் மதிபுரைமுகமும் கண்ணனே
திண்கைமார்வும் திண்டோளும்
தளிமலர்க் கருங்குழல் பிறையதுவும் தடங்கொள்
தாமரைக் கண்களும் பொலிந்த
இளமையின்பத்தை யின்றென் கண்ணால் பருகுவேற்
கிவள்தாயென நினைந்த,
அளவில் பிள்ளைமை யின்பத்தையிழந்த பாவியே
னெனதாவி நில்லாதே.

5 மருவுநின் திரு நெற்றியில் சுட்டியசைதர மணி
வாயிடை
தருதலும் உன்றன் தாதையைப்போலும் வடிவுகண்டு
கொண்டுள்ள முள்குளிர,
விரலைச்செஞ்சிறு வாயிடைச்சேர்த்து வெகுளியாய்
நின்றுரைக்கு மவ்வுரையும்,
திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம்தெய்வ
நங்கையசோதை பெற்றாளே.

6 தண்ணந்தாமரைக் கண்ணனே கண்ணா தவழ்ந்
தெழுந்ததோர் நடையால்,
மண்ணில் செம்பொடியாடி வந்தென்றன் மார்வில்
மன்னிடப் பெற்றிலேனந்தோ,
வண்ணச் செஞ்சிறுகை விரலனைத்தும் வாரிவாய்க்
கொண்ட அடிசிலின் மிச்சில்,
உண்ணப் பெற்றிலேன்! ஓ! கொடுவினையேன்
என்னை என்செய்யப் பெற்றதெம்மோயே.

7 குழகனேயென்றன் கோமளப்பிள்ளாய் கோவிந்தா
என்குடங்கையில் மன்னி,
ஒழுகுபேரெழிலிளஞ் சிறுதளிர்போலொருகை
யாலொரு முலைமுகம் நெருடா,
மழலை மென்னகையிடை யிடையருளா வாயிலே
முலையிருக்க வென்முகத்தே
எழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந்தன்னையு
மிழந்தேனிழந்தேனே.

8 முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்
முகிழிளம் சிறுத்தாமரைக் கையும்,
எழில் கொள்தாம்பு கொண்டடிப்பதற்கெள்கு
நிலையும்வெண் தயிர்தோய்ந்த செவ்வாயும்,
அழுகையும் அஞ்சிநோக்குமந் நோக்குமணிகொள்
செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்,
தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்
பத்திறுதி கண்டாளே.

9 குன்றினால் குடைகவித்ததும் கோலக்குரவை
கோத்ததும் குடமாட்டும்
கன்றினால் விளவெறிந்ததும் காலால்காளியன்
தலைமிதித்தது முதலா
வென்றி சேர்பிள்ளை நல்விளையாட்ட மனைத்திலுமங்
கென்னுள்ள முள்குளிர
ஒன்றும் கண்டிடப் பெற்றிலேனடியேன் காணுமாறி
னியுண்டெனிலருளே.

10 வஞ்சமேவிய நெஞ்சுடைப் பேச்சிவெறண்டு நார்நரம்
பெழக்கரிந்துக்க
நஞ்சமார்தரு சுழிமுலையந்தோ! சுவைத்து நீயருள்
செய்து வளர்ந்தாய்
கஞ்சன் நாள்கவர் கருமுகிலெந்தாய்! கடைப்
பட்டேன் வெறிதே முலைசுமந்து
தஞ்ச மேலொன்றி லேய்ந்திருந்தேன் தக்கதே
நல்லதாயைப் பெற்றாயே.

11 மல்லைமா நகர்க்கிறையவன் தன்னைவான் செலுத்தி
வந்தீங்கணைமாய்த்து
எல்லையில்பிள்ளை செய்வனகாணாத் தெய்வத்தேவகி
புலம்பிய புலம்பல்
கொல்லிகாவலன் மாலடிமுடிமேல் கோலமாம்
குலசேகரன் சொன்ன
நல்லிசைத் தமிழ்மாலை வல்லார்கள் நண்ணுவாரொல்லை
நாரணனுலகே.

---

# பெருமாள் திருமொழி

## 9-வது வன்தாளினிணை

### தனயன் கான்புகத்தசரதன் புலம்பல்

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

*காம்போதி ராகம்—ஆதிதாளம்*

1 வன்தாளினிணை வணங்கி வளநகரம்தொழுதேத்த
மன்னனாவான்
நின்றாயை அரியணை மேலிருந்தாயை நெடுங்கானம்
படரப்போகு
வென்றாள் எம்மிராமாவோ! உனைப்பயந்த கைகேசி
தன்சொற்கேட்டு
நன்றாக நானிலத்தை யாள்வித்தேன் நன்மகனே
யுன்னைநானே.

2 வெவ்வாயேன் வெவ்வுரைகேட்டிரு நிலத்தை
வேண்டாதே விரைந்துவென்றி
மைவாயகளிறொழிந்து தேரொழிந்து மாவொழிந்து
வனமேமேவி
நெய்வாயவேல் நெடுங்கண் நேரிழையுமிளங் கோவும்
பின்புபோக
எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ! எம்பெருமா
னென்செய்கேனே.

3 கொல்லணைவேல் வரிநெடுங்கண் கௌசலைதன்
குலமதலாய், குனிவிலேந்தும்
மல்லணைந்த வரைத்தோளா வல்வினையேன்
மனமுருக்கும் வகையேகற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றா யின்றினிப்போய்
வியன்கான மரத்தின்நீழல்
கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ காகுத்தா!
கரியகோவே.

4 வாபோகுவா இன்னம் வந்தொருகால் கண்டுபோ,
மலராள் கூந்தல்
வேய்போலுமெழில் தோளிதன் பொருட்டா
விடையோன்றன் வில்லைச்செற்றாய்,
மாபோகு நெடுங்கானம் வல்வினையேன்
மனமுருக்கும் மகனே இன்று
நீபோக வென்னெஞ்ச மிருபிளவாய்ப் போகாதே
நிற்குமாறே.

5 பொருந்தார் கைவேல்நுதிபோல் பரல்பாய
மெல்லடிகள் குருதிசோர
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப வெம்பசி
நோய்கூர, இன்று
பெரும்பாவியேன் மகனே போகின்றாய்
கேகயர்கோன் மகளாய்ப்பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட வருவினையேனென்
செய்கேனந்தோயானே.

6 அம்மாவென்றுகந்தழைக்கு மார்வச்சொல் கேளாதே
அணிசேர் மார்வம்
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதே முழுசாதே
மோவாதுச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணாது
எம்மானை யெம்மகனை யிழந்திட்ட இழிதகை
யேனிருக்கின்றேனே.

7 பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து,
பூந்துகில் சேரல்குல்
காமரெழில் விழலுடுத்துக் கலனணியா தங்கங்களழகு
மாழி
ஏமருதோ ளென்புதல்வன் யானின்று செலத்தக்க
வனந்தான் சேர்தல்
தூமறையீ ரிதுதகவோ சுமந்திரனே வசிட்டனே
சொல்லீர்நீரே.

8 பொன்பெற்றா ரெழில்வேதப் புதல்வனையும்
தம்பியையும், பூவைபோலும்
மின்பற்றா நுண்மருங்கல் மெல்லியலென் மருகியையும்
வனத்தில் போக்கி
நின்பற்றா நின்மகன்மேல் பழிவிளைத்திட்
டென்னையும் நீள்வானில் போக்க
என்பெற்றாய் கைகேசி யிருநிலத்திலினிதாக
விருக்கின்றாயே.

9 முன்னொருநாள் மழுவாளிசிலை வாங்கியவன் தவத்தை
முற்றும் செற்றாய்
உன்னையு முன்னருமையையு முன்மோயின் வருத்தமு
மொன்றாகக் கொள்ளாது
என்னையு மென்மெய்யுரையும் மெய்யாகக்கொண்டு
வனம்புக்க வெந்தாய்
நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன் ஏழ்பிறப்பும்
நெடுந்தோள் வேந்தே.

10 தேன்நகுமா மலர்க்கூந்தல் கௌசலையும்
சுமித்திரையும் சிந்தைநோவ
கூனுருவில் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட
கொடியவள்தன் சொற்கொண்டு இன்று
கானகமே மிகவிரும்பி நீதுறந்த வளநகரைத்துறந்து
நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மநுகுலத்தார் தங்கள்கோவே.

11 ஏரார்ந்த கருநெடுமா லிராமனாய் வனம்புக்கவதனுக்
காற்றா
தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்றான் புலம்பிய
வப்புலம்பல் தன்னை
கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்
குடக்குலசேகரன் சொற்செய்த
சீரார்ந்த தமிழ்மாலையிவை வல்லார் தீநெறிக்கண்
செல்லார்தாமே.

# ತಿರುಪ್ಪಾಣಾಳ್ವಾರ್

ಇವರು ತಿರುಚಿನಾಪಲ್ಲಿಯ ಸಮೀಪದ ಉಱೈಯೂರಿನಲ್ಲಿ ಅಂತ್ಯ ಜಾತಿಯಾದ ಪಾಣಕುಲದಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ಕಾಲ ಕ್ರಿ. ಶ. ೮ನೆಯ ಶತಮಾನ. ಇವರು ಕಾವೇರಿಯ ತೆಂಕಣಕರೆಯಲ್ಲಿ ನಿಂತು ಬಡಗುಕರೆಯ ಶ್ರೀರಂಗದ ರಂಗನಾಥನನ್ನು ಪರಮಭಕ್ತಿಯಿಂದ ಧ್ಯಾನಿಸುತ್ತ ಸ್ತೋತ್ರಗಳನ್ನು ಹಾಡುತ್ತಿದ್ದರು. ಈ ಭಕ್ತನನ್ನು ತನ್ನಲ್ಲಿ ಐಕ್ಯಮಾಡಿಕೊಳ್ಳಬಯಸಿ ದೇವರು ಲೋಕಸಾರಂಗ ಮುನಿಗಳಿಗೆ ಕನಸಿನಲ್ಲಿ ಕಾಣಿಸಿಕೊಂಡು ಪರಮಭಕ್ತನಾದ ಪಾಣಿಯನ್ನು ಹೀನಜಾತಿಯವನೆಂದು ನಿರಾಕರಿಸದೆ ತನ್ನಲ್ಲಿಗೆ ಕರೆದುತರುವಂತೆ ಆಜ್ಞಾಪಿಸಿದನು. ಲೋಕಸಾರಂಗ ಮುನಿಗಳು ಅದೇಪ್ರಕಾರ ಪಾಣಿಆಳ್ವಾರನ್ನು ತಮ್ಮ ಹೆಗಲಮೇಲೆ ಕೂರಿಸಿಕೊಂಡು ರಂಗನಾಥನಲ್ಲಿಗೆ ಕರೆದುತಂದರು. ಪಾಣಿ ಆಳ್ವಾರು ರಂಗನಾಥನ ದಿವ್ಯ ಮೂರ್ತಿಯನ್ನು ಅಡಿಯಿಂದ ಮುಡಿಯವರೆಗೆ ನೋಡಿ ಆನಂದಪರವಶನಾಗಿ 'ಅಮಲನಾದಿ ಪಿರಾನ್— ' ಎಂದು ಆರಂಭಿಸಿ ಹತ್ತು ಪಾಶುರಗಳನ್ನು ಕಟ್ಟಿಹಾಡಿದನು.

ಶೈವ ಪುರಾಣದಲ್ಲಿಯೂ ಹೀಗೆಯೇ ತಿರುನೀಲಕಂಠರ್ ಎಂಬ ಪಾಣಿಕುಲದ ಭಕ್ತರೊಬ್ಬರನ್ನು ಶಿವನು ಉದ್ಧರಿಸಿದ ಪ್ರಸಂಗ ಬರುತ್ತದೆ.

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த

# அமலனாதிப்பிரான்

## தனியன்கள்

### வெண்டுறை

*அபரூப ராகம்—திரிபுடைதாளம்*

1 *அமலனாதி பிரானடியார்க் கென்னையாட் படுத்த*
*விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில்*
*வேங்கடவன்*
*நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதிளரங்கத்*
*தம்மான் திருக்*
*கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன*
*வொக்கின்றதே.*

2 *உவந்த வுள்ளத்தனா யுலகமளந் தண்டமுற*
*நிவந்த நீண்முடிய னன்றுநேர்ந்த நிசாசரரை*
*கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்*
*பொழிலரங்கத்தம்மான் அரைச்*
*சிவந்த வாடையின்மேல் சென்றதாம் என்*
*சிந்தனையே.*

3 *மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள்*
*சந்திசெய்ய நின்றான ரங்கத்தரவின் அணையான்*
*அந்திபோல் நிறத்தாடையுமதன் மேலயனைப்*
*படைத்த தோரெழில்*
*உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின் னுயிரே.*

4 சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறையன்தலை பத்து
உதிரவோட்டி ஓர்வெங்கணையுய்த்த வனோதவண்ணன்
மதுரமா வண்டுபாட மாமயிலாட ரங்கத்தம்மான் திருவயிற்
றுதரபந்த மென்னுள்ளத்துள் நின்று லாவுகின்றதே.

5 பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்தன்றி யென்னுள் புகுந்தான்
கோரமாதவம் செய்தனன் கொல்அறியேன் அரங்கத்தம்மான் திரு
வாரமார் பதன்றோ அடியேனை யாட்கொண்டதே.

6 துண்டவெண் பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர்மேய வப்பன்
அண்டரண்ட பகிரண்டத் தொருமாநிலம் எழுமால் வரைமுற்றும்
உண்டகண்டங் கண்டீ ரடியேனை யுய்யக்கொண்டதே.

7 கையினார் சுரிசங்கனலாழியார் நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார் கமழ்நீண் முடியெம்
ஐயனார் அணியரங்க னாரவின் அணைமிசைமேய மாயனார்
செய்யவாயய்யோ என்னைச்சிந்தை கவர்ந்ததுவே.

8 பரியனாகிவந்த வவுணனுடல்கீண்ட அமரர்க்
கரியவாதிப் பிரானரங்கத் தமலன் முகத்து
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்
பெரியவாய் கண்களென்னைப் பேதைமை செய்தனவே.

9 ஆலமா மரத்தினிலை மேலொரு பாலகனாய்
ஞாலமேழு முண்டானரங்கத் தரவினணை யான்
கோலமா மணியாரமும் முத்துத்தாமமும்
முடிவில்லதோ ரெழில்
நீலமேனியய்யோ! நிறைகொண்டதென்
நெஞ்சினையே.

10 கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ
யுண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர் கோனணியரங்கன் என்னமுதனைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே.

---

# ತಿರುಮಂಗೈ ಆೞ್ವಾರ್

ಚೋಳಮಂಡಲದ ತಿರುವಾಲನಾಡಿನಲ್ಲಿಯ ತಿರುಕ್ಕುಱಯಲೂರಿನಲ್ಲಿ ಕಳ್ಳರಕುಲದ ನಾಡನಾಯಕರ ಮನೆತನದಲ್ಲಿ ಇವರು ಹುಟ್ಟಿದರು. ಇವರ ಬಾಲ್ಯನಾಮ ಕಲಿಯನ್. ಇವರು ಪ್ರಾಪ್ತವಯಸ್ಸಿನಲ್ಲಿ ತಮ್ಮ ತಂದೆಯ ಅಧಿಕಾರಕ್ಕೆ ಬಂದು, ಚೋಳರಾಜನಲ್ಲಿ ಸೇನಾಪತಿಯಾದರು. ತಿರುನಾಂಗೂರಿನ ಭಾಗವತರೊಬ್ಬರ ಮಗಳಾದ ಕುಮುದವಲ್ಲಿಯನ್ನು ಮದುವೆಯಾಗಿ, ತಾವೂ ಪರಮಭಾಗವತರಾಗಿ ವಿಷ್ಣು ಕೈಂಕರ್ಯದಲ್ಲೂ ವಿಷ್ಣುಭಕ್ತರ ಕೈಂಕರ್ಯದಲ್ಲೂ ತಮ್ಮ ಸಂಪತ್ತನ್ನೆಲ್ಲ ವಿನಿಯೋಗಿಸಿದರು. ಕೊನೆಗೆ ಅರಸನಿಗೆ ಸೇರಬೇಕಾದ ದ್ರವ್ಯಗಳನ್ನು ಕೂಡ ಈ ಕೈಂಕರ್ಯಗಳಿಗಾಗಿಯೇ ವಿನಿಯೋಗಿಸುತ್ತ ಬಂದರು. ಇದು ಅರಸನಿಗೆ ತಿಳಿದು ಇವರ ಅಧಿಕಾರವನ್ನು ಕಿತ್ತುಕೊಂಡು ಇವರನ್ನು ಸೆರೆಯಲ್ಲಿಟ್ಟನು. ಸೆರೆಯಲ್ಲಿ ವಿಷ್ಣುವನ್ನು ಧ್ಯಾನಿಸಿ, ಅವನ ಪ್ರೇರಣೆಯಂತೆ ಕಾಂಚೀಪುರಕ್ಕೆ ಹೋಗಿ ಅಲ್ಲಿ ಲಭಿಸಿದ ದ್ರವ್ಯದಿಂದ ಅರಸನ ಸಾಲ ಹರಿಸಿ ಬಿಡುಗಡೆ ಹೊಂದಿದರು.

ವಿಷ್ಣು ಕೈಂಕರ್ಯಕ್ಕೆ ಹಣವಿಲ್ಲದೆ ಹೋಗಲು ಕಳ್ಳತನಕ್ಕೆ ಬಿದ್ದು ದಾರಿಗರನ್ನು ಕೊಳ್ಳೆಹೊಡೆದು ದೇವರ ಸೇವೆ ನಡಸುತ್ತ ಬಂದರು. ಇವರಿಗೆ ಸನ್ಮಾರ್ಗ ತೋರಬಯಸಿ ವಿಷ್ಣು ಮದವಣಿಗ ವೇಷವನ್ನು ಧರಿಸಿ ಮದವಣಿಗಿತ್ತಿಯೊಡನೆ ಆ ಮಾರ್ಗವಾಗಿ ಬರಲು ಅವರನ್ನು ಕೊಳ್ಳೆ ಹೊಡೆಯ ಹೋಗಿ ನಗನಾಣ್ಯಗಳನ್ನೆಲ್ಲ ಸುಲಿದು ಗಂಟು ಕಟ್ಟಿ, ಅದನ್ನು ಎತ್ತಹೋಗಿ ಕೈಯಲ್ಲಾಗದಿರಲು, ಆ ಬ್ರಾಹ್ಮಣ ಮದವಣಿಗನು ಮಂತ್ರ ಹಾಕಿರಬಹುದೆಂದು ಆತನನ್ನು ಗದರಿಸಲು, ಮದವಣಿಗನು ಆ ಮಂತ್ರವನ್ನು ಅವನಿಗೂ ತಿಳಿಸಿ ಕೊಡುವುದಾಗಿ ಹೇಳಿ ಕಿವಿಯಲ್ಲಿ ದಿವ್ಯ ಮಂತ್ರವನ್ನು ಉಪದೇಶಮಾಡಿದನು. ಇದರಿಂದ ಕಲಿಯನಿಗೆ ದಿವ್ಯ ಜ್ಞಾನ ಉಂಟಾಗಿ, ತನ್ನ ಕೆಲಸಕ್ಕೆ ನಾಚಿ, ಒಳ್ಳೆಯ ದಾರಿ ಹಿಡಿದು ದೇವರ ಮೇಲೆ ಸ್ತೋತ್ರಗಳನ್ನು ಕಟ್ಟಿ ಹಾಡಿದನು. ಈ ಆೞ್ವಾರರ ಕೃತಿಗಳು: ಪೆರಿಯ ತಿರುಮೊೞಿ, ತಿರುಕ್ಕುಱುಂತಾಂಡಗಂ, ತಿರುನೆಡುಂತಾಂಡಗಂ, ತಿರುವೆೞ್ ಕೂಱ್ಱಿರುಕ್ಕೈ, ಶಿಱಿಯತಿರುಮಡಲ್, ಪೆರಿಯತಿರುಮಡಲ್.

திருமங்கையாழ்வாரருளிச் செய்த

# பெரிய திருமொழி

## முதற்பத்து

### 1வது வாடினேன்

*சங்கராபரண ராகம்—திரிபுடைதாளம்*

1 வாடினேன் வாடிவருந்தினேன் மனத்தால்பெருந்
துயரிடும்பையில் பிறந்து
கூடினேன் கூடியிளையவர் தம்மோடவர்தரும்
கலவியேகருதி
ஓடினே னோடியுய்வதோர் பொருளாலுணர்வெனும்
பெரும்பதந்தெரிந்து
நாடினேன் நாடிநான்கண்டு கொண்டேன் நாராயணா
வென்னும் நாமம்.

2 ஆவியே யமுதேயென நினைந்துருகி யவரவர்
பணைமுலை துணையா
பாவியே னுணராதெத்தனை பகலும்பழுதுபோ
யொழிந்தன நாள்கள்
தூவிசேரன்னம் துணையோடும் புணருஞ்சூழ்புனல்
குடந்தையே தொழுதுஎன்
நாவினாலுய்ய நான்கண்டு கொண்டேன் நாராயணா
வென்னும் நாமம்.

3 சேமமேவேண்டித் தீவினைபெருக்கித் தெரிவை
மாருருவமே மருவி.
ஊமனார் கண்டகனவிலும் பழுதாயொழிந்தன
கழிந்தவந்நாள்கள்
காமனார்தாதை நம்முடையடிகள் தம்மடைந்தார்
மனத்திருப்பார்
நாமம்நானுய்ய நான்கண்டு கொண்டேன் நாராயணா
வென்னும் நாமம்.

4 வென்றியே வேண்டி வீழ் பொருட்கிரங்கி வேற்கணார்
கலவியேகருதி
நின்றவா நில்லா நெஞ்சினையுடையேனென் செய்கேன்
நெடுவிசும் பணவும்
பன்றியாயன்று பாரகங்கீண்ட பாழியானாழி
யானருளே
நன்றுநானுய்ய நான்கண்டு கொண்டேன் நாராயணா
வென்னும் நாமம்.

5 கள்வனானேன் படிறுசெய்திருப்பேன்
கண்டவா திரி தந்தேனேனும்
தெள்ளியேனானேன் செல்கதிக்கடைந்தேன்
சிக்கெனத்திருவருள் பெற்றேன்
உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தே
னுடம்பெலாம் கண்ணநீர்சோர
நள்ளிருளளவும் பகலும்நானழைப்பன் நாராயணா
வென்னும் நாமம்.

6 எம்பிரானெந்தை யென்னுடைச்சுற்ற மெனக்கர
சென்னுடைவாணாள்
அம்பினாலரக்கர் வெருக்கொளநெருக்கி யவருயிர்
செகுத்தனம் மண்ணல்
வம்புலாஞ் சோலைமாமதிள் தஞ்சைமாமணிக்
கோயிலே வணங்கி
நம்பிகாளுய்ய நான்கண்டு கொண்டேன் நாராயணா
வென்னும் நாமம்.

7 இற்பிறப்பறி யீரிவரவரென்னீ ரின்னதோர்தன்மை
யென்றுணரீர்
கற்பகம்புலவர்களை கணென்றுலகில் கண்டவா
தொண்டரைப்பாடும்
சொற்பொருளாளீர் சொல்லுகேன்வம்மின் சூழ்புனல்
குடந்தையே தொழுமின்
நற்பொருள் காண்மின்பாடி நீருய்மின் நாராயணா
வென்னும் நாமம்.

8 கற்றிலேன் கலைகளைம்புலன் கருதுங்கருத்துளே
திருத்தினேன் மனத்தை
பெற்றிலேனதனால் பேதையேன்நன்மை பெருநிலத்
தாருயிர்க்கெல்லாம்
செற்றமே வேண்டித்திரி தருவேன் தவிர்ந்தேன்
செல்கதிக்குய்யுமா றெண்ணி
நற்றுணையாகப் பற்றினேனடியேன் நாராயணா
வென்னும் நாமம்.

9 குலந்தருஞ் செல்வந்தந்திடுமடியார் படுதுயராயின
வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளுமருளொடு
பெருநிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயின
செய்யும்
நலந்தருஞ்சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்.

10 மஞ்சுலாஞ்சோலை வண்டறைமாநீர் மங்கையார்வாள் கலிகன்றி
செஞ்சொலாலெடுத்த தெய்வநன்மாலை-யிவைகொண்டு சிக்கெனத்தொண்டீர்
துஞ்சும்போதழை மின்துயர்வரில் நினைமின் துயரிலீர்சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான்கண்டீர் நம்முடைவினைக்கு நாராயணா வென்னும் நாமம்.

## மூன்றும்பத்து

## 6வது தூவிரிய

நாதநாமக்கிரியை ராகம்—ரூபகதாளம்

1 தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே
பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே
தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி
ஏவரிவெஞ் சிலையானுக் கென்னிலைமை யுரையாயே.

2 பிணியவிழு நறுநீல மலர்கிழியப் பெடையோடும்
அணிமலர்மேல் மதுநுகரு மறுகால சிறுவண்டே
மணிகெழு நீர்மருங்கலரும் வயலாலி மணவாளன்
பணியறியேன் நீசென்றென் பயலை நோயுரையாயே.

3 நீர்வானம் மண்ணெரிகா லாய்நின்ற நெடுமால்தன்
தாராய நறுந்துளவம் பெறுந்தகையேற் கருளானே
சீராரும்வளர் பொழில்சூழ் திருவாலி வயல்வாழும்
கூர்வாய சிறுகுருகே குறிப்பறிந்து கூறாயே.

4 தானாக நினையானேல் தன்னினைந்து நைவேற்கோர்
மீனாய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ
தேன்வாய வரிவண்டே திருவாலி நகராளும்
ஆனாயற் கென்னுறு நோயறியச் சென்றுரையாயே.

5 வாளாய கண்பனிப்ப வெண்முலைகள் பொன்னரும்ப
நாணாளும் நின்னினைந்து நைவேற்கோர் மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தை நகராளா வரையெடுத்த
தோளாளா! என்றனக்கோர் துணையாள னாகாயே.

6 தாராய தண்டுளவ வண்டுழுதவரை மார்பன்
போரானை கொம்பொசித்த புட்பாக னென்னம்மான்
தேராரும் நெடுவீதித் திருவாலி நகராளும்
காராய னென்னுடைய கனவளையும் கவர்வானோ.

7 கொண்டரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரை போல்
பண்டரவி னணைக்கிடந்து பாரளந்த பண்பாளா!
வண்டமரும் வளர்பொழில் சூழ்வயலா லிமைந்தாஎன்
கண்டுயில் நீகொண்டாய்க்கென் கனவளையும் கடவேனோ.

8 குயிலாலும் வளர்பொழில் சூழ்தண்குடந்தைக் குடமாடி
துயிலாத கண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ
முயலாலு மிளமதிக்கே வளையிழந்தேற்கு—இதுநடுவே
வயலாலி மணவாளா! கொள்வாயோ மணிநிறமே.

9 நிலையாளா நின்வணங்க வேண்டாயே யாகிலும்என்
முலையாள வொருநாளுன் னகலத்தா லாளாயே
சிலையாளா! மரமெய்த திறலாளா! திருமெய்ய
மலையாளா! நீயாள வளையாள மாட்டோமே.

10 மையிலங்கு நறுங்குவளை மருங்கலரும் வயலாலி
நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலை
கையிலங்கு வேல்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை
ஐயிரண்டுமிவை வல்லார்க் கருவினைக ளடையாவே.

## ஆறும்பத்து

### 1வது வண்டுணு

புன்னாகவராளி ராகம்—ஆதிதாளம்

1 வண்டுணு நறுமலரிண்டை கொண்டு—பண்டை
நம்வினை கெடவென்று அடிமேல்
தொண்டரு மமரரும் பணியநின் றங்கு அண்டமோட
கலிடமளந்தவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

2 அண்ணல் செய்தலை கடல்கடைந்ததனுள் கண்ணுதல்
நஞ்சுண்ண கண்டவனே
விண்ணவ ரமுதுண வமுதில்வரும்—பெண்ண
முதுண்டவெம் பெருமானே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

3 குழல்நிறவண்ண! நின்கூறுகொண்ட—தழல்நிற
வண்ணன் நண்ணார்நகரம்
விழநனிமலை சிலைவளைவு செய்துஅங்—கழல்நிற
அம்பது வானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

4 நிலவொடுவெய்யில் நிலவிருசுடரும்—உலகமுமுயிர்
களுமுண்டொருகால்
கலைதருகுழவி யினுருவினையா—யலைகடலாலிலை
வளர்ந்தவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

5 பாரெழுகடலெழு மலையெழுமாய்ச்—சீர்கெழுமிவ்
வுலகேழுமெல்லாம்
ஆர்கெழுவயிற் றினிலடக்கிநின்றங்—கோரெழுத்
தோருருவானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

6 கார்கெழுகடல்களும் மலைகளுமா யேர்கெழுமுலகமு
மாகிமுத
லார்களுமறி வருநிலையினையாச்—சீர்கெழு நான்மறை
யானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

7 உருக்குறுநறுநெய் கொண்டாரழலில் இருக்குறு
மந்தணர் சந்தியின்வாய்
பெருக்கமொட மரர்களமரநல்கும்—இருக்கினி
லின்னிசையானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

8 காதல்செய்திளை யவர்கலவிதரும்—வேதனைவினையது
வெருவுதலாம்
ஆதலினுனதடி யணுகுவன்நான் போதலர்நெடுமுடிப்
புண்ணியனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

9 சாதலும்பிறத்தலு மென்றிவற்றைக் காதல்செய்யா
துனகழலடைந்தேன்
ஓதல்செய் நான்மறையாகியும்ப—ராதல்செய்
மூவுருவானவனே
ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக் கருளுதி
யேல்
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்
மேயவனே.

10 பூமருபொழிலணி விண்ணகர்மேல்
காமருசீர்க்கலி கன்றிசொன்ன
பாமருதமிழிவை பாடவல்லார்
வாமனனடியிணை மருவுவரே.

## ஏழாம்பத்து

## 10வது பெரும்புறக்கடல்

தோடி ராகம்—அடதாளம்

1 பெரும்புறக் கடலையட லேற்றினைப்
பெண்ணையானை எண்ணில் முனிவர்க்
கருள்தரும்தவத்தை முத்தின்திரள் கோவையைப்
பத்தராவியை நித்திலத்தொத்தினை
அரும்பினை யலரையடியேன் மனத்தாசையை
அமுதம் பொதியின்சுவை
கரும்பினைக், கனியைச்சென்று நாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

2 மெய்ந்நலத் தவத்தைத் திவத்தைத்தரும்
மெய்யைப் பொய்யினை, கையிலோர் சங்குடை
மைந்நிறக்கடலைக் கடல்வண்ணனை மாமலை
ஆலிலைப்பள்ளி கொள்மாயனை
நென்னலைப் பகலையிற்றை நாளினை
நாளையாய் வரும்திங்களை யாண்டினை
கன்னலைக் கரும்பினிடைத் தேறலைக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

3 எங்களுக்கருள் செய்கின்ற வீசனை
வாசவார் குழலாள் மலைமங்கைதன்
பங்கனை பங்கில்வைத்து கந்தான்றன்னைப்
பான்மையைப் பனிமாமதியம் தவழ்
மங்குலைச், சுடரைவட மாமலை
யுச்சியை, நச்சிநாம் வணங்கப்படும்
கங்குலை பகலைச்சென்று நாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

4 பேய்முலைத்தல நஞ்சுண்ட பிள்ளையைத்
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை
மாயனை மதிள்கோவலிடை கழி
மைந்தனை யன்றியந்தணர் சிந்தையு
ளீசனை இலங்கும் சுடர்ச்சோதியை
யெந்தையை யெனக்கெய்ப்பினில் வைப்பினை
காசினை மணியைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

5 ஏற்றினை யிமயத்து ளெம்மீசனை
யிம்மையை மறுமைக்கு மருந்தினை
ஆற்றலை அண்டத் தப்புறத் துய்த்திடு
மையனைக் கையிலாழியொன் றேந்திய
கூற்றினை குருமாமணிக் குன்றினை
நின்றவூர் நின்றநித்திலத் தொத்தினைக்
காற்றினைப் புனலைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

6 துப்பனைத் துரங்கம் படச்சீறிய தோன்றலைச்
சுடர்வான்கலன் பெய்ததோர்
செப்பினைத் திருமங்கை மணாளனைத்
தேவனைத் திகழும் பவளத்தொளி
யொப்பனை உலகேழினை யூழியை
ஆழியேந்திய கையனை அந்தணர்
கற்பினை கழுநீர் மலரும்வயல்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

7 திருத்தனைத்திசை நான்முகன் தந்தையைத்
தேவதேவனை மூவரில் முன்னிய
விருத்தனை விளங்கும் சுடர்ச்சோதியை
விண்ணை மண்ணினைக் கண்ணுதல் கூடிய
அருத்தனை அரியைப் பரிகீறிய
வப்பனை அப்பிலா ரழலாய் நின்ற
கருத்தனை களிவண்டறையும் பொழில்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

8 வெஞ்சினகளிற்றை விளங்காய் வீழக்
கன்றுவீசிய வீசனைபேய் மகள்துஞ்ச
நஞ்சுசுவைத் துண்ட தோன்றலைத்
தோன்றல் வாளரக்கன் கெடத்தோன்றிய
நஞ்சினை அமுதத்தினை நாதனை
நச்சுவாருச்சிமேல் நிற்கும் நம்பியைக்
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்த வஞ்சனைக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

9 பண்ணினைப் பண்ணில் நின்றதோர் பான்மையைப்
பாலுள்நெய்யினை மாலுருவாய் நின்ற
விண்ணினை விளங்கும் சுடர்ச்சோதியை
வேள்வியை விளக்கினொளி தன்னை
மண்ணினை மலையையலை நீரினைமாலை
மாமதியை மறையோர் தங்கள்
கண்ணினை கண்களாராளவும் நின்று
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே.

10 கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால் கலிகன்றியுரை செய்த
வண்ணவொண் டமிழொன்பதோ டொன்றிவை
வல்லராயுரைப்பார், மதியம் தவழ்
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மை சொல்லில் வெண்சங்க மொன்
றேந்திய
கண்ண! நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே.

# திருநெடுந்தாண்டகம்

## எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

*கல்யாணி ராகம்—அட தாளம்*

1 மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தானாய்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியா யிறப்பதற்கே யெண்ணாது—
எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவில் பூதமைந்தாய்ப்
புனலுருவாய னலுருவில் திகழுஞ்சோதி
தன்னுருவா யென்னுருவில் நின்றவெந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமேல்
வைத்தே.

*கல்யாணி ராகம்—ஆதி தாளம்*

2 பாருருவில் நீரெரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏருருவில் மூவருமே யெனநின்ற
விமையவர்தம் திருவுருவே றெண்ணும்போது
ஓருருவம் பொன்னுருவ மொன்றுசெந்தீ
ஒன்றுமா கடலுருவ மொத்துநின்ற
மூவுருவும் கண்டபோ தொன்றாஞ்சோதி
முகிலுருவ மெம்மடிகளுரு வந்தானே.

தோடி ராகம்—ரூபகதாளம்

3 திருவடிவில் கருநெடுமால் சேயனென்றும்
திரேதைக் கண்வளையுருவாய்த் திகழ்ந்தா
னென்றும்
பெருவடிவில் கடலமுதம் கொண்டகாலம்
பெருமானைக் கருநீலவண்ணன் றன்னை
ஒருவடிவத் தோருருவென் றுணரலாகா
தூழிதோ றூழி நின்றேத்தி லல்லால்
கருவடிவில் செங்கண்ண வண்ணன் றன்னைக்
கட்டுரையே யாரொருவர் காண்கிற்பாரே.

தோடி ராகம்—ஆதிதாளம்

4 இந்திரற்கும் பிரமற்குமுதல்வன் றன்னை
இருநிலம்கால் தீநீர்விண் பூத மைந்தாய்
செந்திறத்த தமிழோசைவட சொல்லாகித்
திசைநான்கு மாய்த்திங்கள் நாயிறாகி
அந்தரத்தில் தேவர்க்கு மறியலாகா
வந்தணனை அந்தணர் மாட்டாந்திவைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும்
வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே.

தோடி ராகம்—திரிபுடைதாளம்

5 ஒண்மிதியில் புனலுருவி யொருகால் நிற்ப
ஒருகாலுங் காமருசீரவுண னுள்ளத்து
எண்மதியுங் கடந்தண்ட மீதுபோகி
யிருவிசும்பினூடு போயெழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிரவோடித்
தாரகையின் புறந்தடவியப் பால்மிக்கு
மண்முழுது மகப்படுத்து நின்றவெந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே.

மோஹன ராகம்— ஆதிதாளம்

6 அலம்புரிந்த நெடுந்தடக்கை யமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள் தனிப்பாகன், அவுணர்க்
கென்றும்
சலம்புரிந்தங் கருளில்லாத் தன்மையாளன்
தானுகந்த வூரெல்லாம் தன்தாள்பாடி
நிலம்பரந்து வரும்கலுழிப் பெண்ணையீர்த்த
நெடுவேய்கள் படுமுத்த முந்தவுந்தி
புலம்பரந்து பொன்விளைக்கும் பொய்கைவேலிப்
பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே.

மோஹன ராகம்—ரூபகதாளம்

7 வற்புடையவரை நெடுந்தோள் மன்னர்மாள
வடிவாய மழுவேந்தி யுலகமாண்டு
வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த
வேள்முதலா வென்றானூர் விந்தைமேய
கற்புடைய மடக்கன்னி காவல்பூண்ட
கடிபொழில் சூழ்நெடுமறுகில் கமலவேலி
பொற்புடைய மலையரையன் பணியநின்ற
பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே.

தேசிய ராகம்—ஆதிதாளம்

8 நீரகத்தாய் நெடுவரையி னுச்சிமேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்!
உள்ளுவா ருள்ளத்தாய்! உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூம் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேராதென் நெஞ்சினுள்ளாய்!
பெருமானுன் திருவடியே பேணினேனே.

சங்கராபரண ராகம்—ஆதிதாளம்

9 வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்
மல்லையாய்! மதிள்கச்சியூராய்! பேராய்!
கொங்குத்தார் வளங்கொன்றை யலங்கல்மார்வன்
குலவரையன் மடப்பாவை யிடப்பால்
கொண்டான்
பங்கத்தாய் பாற்கடலாய் பாரின்மேலாய்
பனிவரையி னுச்சியாய் பவளவண்ணா
எங்குற்றா யெம்பெருமா னுன்னைநாடி
யேழையே னிங்ஙனமே யுழிதருகேனே.

சங்கராபரண ராகம்—ரூபகதாளம்

10 பொன்னாய் பொழிலேழும் காவல்பூண்ட
புகழானா யிகழ்வாய தொண்டனேன் நான்
என்னானா யென்னானா யென்னிலல்லால்
என்றறிவ னேழையேன் உலகமேத்தும்
தென்னானாய் வடவானாய்குட பாலானாய்
குணபாலமத யானாயிமையோர்க் கென்றும்
முன்னானாய் பின்னானார் வணங்கும் சோதி
திருமூழிக் களத்தானாய் முதலானாயே.

# திருவெழு கூற்றிருக்கை

## திருமங்கையாழ்வார் அருளியது

### தனியன்கள்

### நேரிசை வெண்பா

*உடையவரருளிச் செய்தது*

1 *வாழி பரகாலன் வாழி கலிகன்றி*
*வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ*
*மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்*
*கோன்*
*தூயோன் சுடர்மான வேல்.*

### கலித்துறை

2 *சீரார் திருவெழு கூற்றிருக்கை யென்னும் செந்தமிழால்*
*ஆராவமுதங் குடந்தைப்பிரான் தனடியிணைக்கீழ்*
*ஏரார் மறைப்பொருளெல்லா மெடுத்திவ்வுலகுய்யவே*
*சோராமற் சொன்னவருள் மாரிபாதம் துணை நமக்கே.*

*தேசிய ராகம்—ஆதிதாளம்*

3 *ஒருபேருந்தி யிருமலர்த் தவிசில்*
*ஒருமுறை யயனையீன்றனை ஒருமுறை*
*இருசுடர் மீதினிலியங்கா மும்மதி*
*ளிலங்கை யிருகால்வளைய ஒருசிலை*
*யொன்றிய வீரெயிற்றழல்வாய் வாளியி*
*லட்டனை மூவடிநானிலம் வேண்டி*
*முப்புரி நூலொடு மானுரி யிலங்கு*
*மார்பினில் இருபிறப்பொரு மாணாகி*

ஒருமுறை யீரடி மூவுலகளந்தனை
நாற்றிசை நடுங்க வஞ்சிறைப் பறவை
யேறிநால்வாய் மும்மதத் திருசெவி
யொருதனி வேழத்தரந்தையை ஒருநா
ளிருநீர் மடுவுள்தீர்த்தனை முத்தீ
நான்மறை ஐவகைவேள்வி அறுதொழி
லந்தணர் வணங்கும் தம்மையை ஐம்புல
னகத்தினுள் செறுத்து நான்குட னடக்கி
முக்குணத் திரண்டவையகற்றி ஒன்றினி
லொன்றிநின்று ஆங்கிருபிறப் பறுப்போ
ரறியும் தன்மையை முக்கண் நாற்றோள்
ஐவாயரவோடு ஆறுபொதி சடையோன்
அறிவரும் தன்மைப் பெருமையுள் நின்றனை
ஏழுல கெயிற்றினில் கொண்டனை கூறிய
அறுசுவைப் பயனுமாயினை சுடர்விடும்
ஐம்படை யங்கையு ளமர்ந்தனை சுந்தர
நாற்றோள் முந்நீர் வண்ண நின்னீரடி
யொன்றிய மனத்தால் ஒருமதி முகத்து
மங்கைய ரிருவரும் மலரென அங்கையில்
முப்பொழுதும் வருட அறிதுயி லமர்ந்தனை
நெறிமுறை நால்வகை வருணமு மாயினை
மேதகுமைம்பெரும் பூதமும் நீயே
அறுபத முரலும் கூந்தல் காரணம்
ஏழ்விடை யடங்கச் செற்றனை அறுவகைச்
சமயமு மறிவரு நிலையினை ஐம்பால்
ஓதியையாகத் திருத்தினை அறமுதல்
நான்கவையாய் மூர்த்தி மூன்றாய்

இருவகைப் பயனாய் ஒன்றாய் விரிந்து
நின்றனை குன்றா மது மலர்ச்சோலை
வண்கொடிப் படப்பை வருபுனல் பொன்னி
மாமணி யலைக்கும் செந்நெலொண் கழனித்
திகழ்வன முடுத்த கற்போர் புரிசை
கனக மாளிகை நிமிர்கொடி விசும்பில்
இளம்பிறை துவக்கும் செல்வம் மல்குதென்
திருக்குடந்தை அந்தணர் மந்திர மொழியுடன்
வணங்க ஆடர வமளி யிலறிதுயி லமர்ந்த
பரமநின் னடியிணை பணிவன்
வருமிட ரகல மாற்றோ வினையே.

## கட்டளைக் கலித்துறை

4 இடங்கொண்ட நெஞ்சத் திணங்கிக் கிடப்பன என்றும் பொன்னித்
தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்த தண் பூங்குடந்தை
விடங்கொண்ட வெண்பல் கருந்துத்தி செங்கண் தழலுமிழ்வாய்ப்
படங்கொண்ட பாம்பணைப் பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.

# ನಮ್ಮಾಳ್ವಾರ್

ಇವರು ತಿರುನಲ್ವೇಲಿ ಜಿಲ್ಲೆಯ ತಿರುಕ್ಕುರುಗೈಯಲ್ಲಿ ವೇಳಾಳ ಕುಲದಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ಚಿಕ್ಕಂದಿನ ಹೆಸರು ಮಾಱನ್. ಇವರ ಕಾಲ ಸರಿಯಾಗಿ ಗೊತ್ತಿಲ್ಲ; ಕ್ರಿ. ಶ. ೫–೧೧ ನೆಯ ಶತಮಾನದವರೆಗೆ ತೂಗಾಡುತ್ತಿದೆ. ಇವರ ತಂದೆ ಕಾರಿಯಾರ್, ತಾಯಿ ಉಡೈಯನಂಗೈ. ಇವರು ಹುಟ್ಟಿದಂದಿನಿಂದ ೧೬ ನೆಯ ವಯಸ್ಸಿನವರೆಗೆ ಮೌನವಾಗಿದ್ದರೆಂದೂ, ತಂದೆತಾಯಿಗಳು ಮಗ ಮೂಗನೆಂದು ಚಿಂತೆಗೊಂಡಿದ್ದರೆಂದೂ, ಆದರೆ ಇವರು ತಮ್ಮೊಡನೆ ಸಂಭಾಷಣೆಗೆ ಯೋಗ್ಯ ಜ್ಞಾನಿಗಳು ಇಲ್ಲದ್ದರಿಂದ ಮೌನವಾಗಿದ್ದರೆಂದೂ ಒಂದು ಕಥೆ ಉಂಟು.

ಮಧುರಕವಿ ಆೞ್ವಾರರು ದಿವ್ಯ ದೇಶಗಳನ್ನು ಸೇವಿಸುತ್ತ ಅಯೋಧ್ಯೆಗೆ ಬಂದಾಗ ತೆಂಕ ಕಡೆ ಒಂದು ಜ್ಯೋತಿಯನ್ನು ಕಂಡರು. ಆ ಜ್ಯೋತಿಯನ್ನು ಸಮೀಪಿಸಿ ಅಲ್ಲಿ ಮಾಱನನ್ನು ಕಂಡು, ಅವರ ಹಿರಿಮೆಯನ್ನು ಅರಿತು ಅವರ ಶಿಷ್ಯರಾದರು. ನಮ್ಮಾೞ್ವಾರರಿಗೆ ಪರಾಂಕುಶನ್, ಕುರುಗೈಕಾವಲನ್, ಕಾರಿಮಾಱನ್, ಶಠಗೋಪನ್, ವಕುಲಾಭರಣನ್ ಎಂದೂ ಹೆಸರುಗಳುಂಟು. ಇವರನ್ನು ಅವಯವಿ ಎಂದೂ ಮಿಕ್ಕ ಆೞ್ವಾರುಗಳನ್ನು ಅವಯವ ಎಂದೂ ವ್ಯವಹರಿಸುತ್ತಿರುವುದು ನಮ್ಮಾೞ್ವಾರರ ಮೇಲ್ಮೆಯನ್ನು ಸೂಚಿಸುತ್ತದೆ. ಇವರು ಹಾಡಿರುವ ತಿರುವೃತ್ತಂ, ತಿರುವಾಶಿರಿಯಂ, ಪೆರಿಯತಿರುವಂದಾದಿಗಳು ಋಕ್, ಯಜುಸ್, ಅಥರ್ವಣವೇದಗಳ ಸಾರವೆಂದೂ ತಿರುವಾಯ್ ಮೊೞಿ ಸಾಮವೇದದ ಸಾರವೆಂದೂ ಹೇಳುತ್ತಾರೆ. ಈ ತಿರುವಾಯ್ ಮೊೞಿಗೆ ಹಲವು ದೊಡ್ಡ ವ್ಯಾಖ್ಯಾನಗಳು ಇವೆ. ವೈಷ್ಣವ ಆಚಾರ್ಯ ಪರಂಪರೆಯಲ್ಲಿ ಇವರೇ ಮೊದಲಿಗರು.

*

# திருவாய்மொழி

## முதற்பத்து

### முதற்றிருவாய்மொழி—உயர்வு

*கமாசு ராகம்—ஆதி தாளம்*

1 உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

2 மனனக மலமற மலர்மிசை யெழுதரும்
மனனுணர் வளவிலன் பொறியுணர் வவையிலன்
இனனுணர் முழுநல மெதிர்நிகழ் கழிவினும்
இனனில னெனனுயிர் மிகுநரை யிலனே.

3 இலனது வுடையனி தெனநினை வரியவன்
நிலனிடை விசும்பிடை யுருவின னருவினன்
புலனொடு புலனல னொழிவிலன் பரந்தஅந்
நலனுடை யொருவனை நணுகினம் நாமே.

4 நாமவ னிவனுவ னவளிவ ளுவளெவள்
தாமவ ரிவருவ ரதுவிது வுதுவெது
வீமவை யிவையுவை யவைநலந் தீங்கவை
ஆமவை யாயவையாய் நின்றவரே.

5 அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்
அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்
அவரவர் விதிவழி யடையநின் றனரே.

6 நின்றன ரிருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்
நின்றில ரிருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்
என்றுமோ ரியல்பின ரெனநினை வரியவர்
என்றுமோ ரியல்பொடு நின்றவெந் திடரே.

7 திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே.

8 சுரரறி வருநிலை விண்முதல் முழுவதும்
வரன்முத லாயவை முழுதுண்ட பரம்பரன்
புரமொரு மூன்றெரித் தமரர்க்குமறி வியந்து
அரனய னெனவுல கழித்த மைத்துளனே.

9 உளனெனி லுளனவ னுருவமிவ் வுருவுகள்
உளனல னெனிலவ னருவமிவ் வருவுகள்
உளனென விலனென விவைகுண முடைமையில்
உளனிரு தகைமையொ டொழிவிலன் பரந்தே.

10 பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்
பரந்தவண் டமிதென நிலவிசும் பொழிவற
கரந்தசி லிடந்தொறு மிடந்திகழ் பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துள னிவையுண்ட கரனே.

11 கரவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
வரனவில் திறல்வலி யளிபொறை யாய்நின்ற
பரனடி மேல்குரு கூர்ச்சட கோபன்சொல்
நிரனிறை யாயிரத் திவைபத்தும் வீடே.

## இரண்டாம்பத்து

### 4வது ஆடியாடி

எழுனு கல்யாணி ராகம்—திரிபுடைதாளம்

1 ஆடியாடி யகம்கரைந்து இசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி எங்கும்
நாடிநாடி நரசிங்காவென்று
வாடி வாடு மிவ்வாணுதலே.

2 வாணுதலிம் மடவரல் உம்மைக்
காணுமாசையுள் நைகின்றாள் விறல்
வாணனாயிரந்தோள் துணித்தீர் உம்மைக்
காணநீ ரிரக்க மிலீரே.

3 இரக்க மனத்தோ டெரியணை
அரக்கு மெழுகு மொக்குமிவள்
இரக்கமெழீரிதற்கென் செய்கேன்
அரக்க னிலங்கை செற்றீருக்கே.

4 இலங்கை செற்றவனே யென்னும் பின்னும்
வலங்கொள் புள்ளுயர்த்தா யென்னும் உள்ளம்
மலங்க வெவ்வுயிர்க்கும் கண்ணீர் மிகக்
கலங்கிக் கைதொழும் நின்றிவளே.

5 இவளிராப் பகல்வாய் வெரீஇதன
குவளையொண் கண்ணநீர் கொண்டாள் வண்டு
திவளும் தண்ணந்துழாய் கொடீரென
தவள வண்ணர் தகவுகளே.

6 தகவுடையவனே யென்னும் பின்னும்
மிகவிரும்பும் பிரானென்னும் என
தகவுயிர்க்கமுதே யென்னும் உள்ளம்
உகவுருகி நின்றாள்ளே.

7 உள்ளுளாவி யுலர்ந்துலர்ந்து என
வள்ளலே கண்ணனே யென்னும் பின்னும்
வெள்ளநீர்க் கிடந்தா யென்னும் என
கள்வி தான்பட்ட வஞ்சனையே.

8 வஞ்சனே யென்னும் கைதொழும் தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும் விறல்
கஞ்சனை வஞ்சனை செய்தீர் உம்மைத்
தஞ்ச மென்றிவள பட்டனவே.

9 பட்டபோதெழு போதறியாள் விரை
மட்டலர் தண்டுழா யென்னும் சுடர்
வட்ட வாய்நுதி நேமியீர் நும
திட்ட மென்கொலிவ் வேழைக்கே.

10 ஏழை பேதை யிராப்பகல் தன
கேழிலொண் கண்ணநீர் கொண்டாள் கிளர்
வாழ்வைவே விலங்கை செற்றீர் இவள்
மாழைநோக் கொன்றும் வாட்டேன்மினே.

11 வாட்டமில் புகழ் வாமனனை இசை
கூட்டிவண் சடகோபன் சொல்அமை
பாட்டோ ராயிரத்திப் பத்தால் அடி
சூட்டலாகு மந்தாமமே.

## ஆறும்பத்து

## 7வது உண்ணுஞ்சோறு

*காம்பூஜி ராகம்—ஆதிதாளம்*

1 உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு
மெல்லாம்
கண்ணன் எம்பெருமானென் றென்றேகண்கள்
நீர்கள்மல்கி
மண்ணினுளவன் சீர்வளம்மிக்க வனூர்வினவி
திண்ணமென்னிள மான்புகுமூர் திருக்கோளூரே.

2 ஊரும்நாடு முலகமும் தன்னைப்போல் அவனுடைய
பேரும்தார்களுமே பிதற்றக்கற்பு வானிடறி
சேரும்நல்வளஞ் சேர்பழனத் திருக்கோளூர்க்கே
போருங்கொலுரையீர் கொடியேன் கொடி
பூவைகளே.

3 பூவைபைங்கிளிகள் பந்துதூதை பூம்புட்டில்கள்
யாவையும்திருமால் திருநாமங்களே கூவியெழுமென்
பாவைபோயினித்தண் பழனத்திருக்கோளூர்க்கே
கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணொடென் செய்யுங்
கொலோ.

4 கொல்லை யென்பர் கொலோ குணம்மிக்கன ளென்பர்
கொலோ
சில்லைவாய்ப் பெண்டுகளயற் சேரியுள்ளாரு மெல்ல!
செல்வம் மல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே
மெல்லிடை நுடங்கவிளமான் செல்லமே வினளே.

5 மேவிநைந்துநைந்து விளையாடலுறா ளென்சிறுத்
தேவிபோய் இனித்தன்திருமால் திருக்கோளூரில்
பூவியல்பொழிலும் தடமுமவன் கோயிலுங்கண்டு
ஆவியுள்குளிர எங்ஙனேயுகக்குங் கொலின்றே.

6 இன்றெனக் குதவாதகன்ற விளமானினிப்போய்
தென்திசைத் திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்றுதன் திருமால்திருக்கண்ணும் செவ்வாயும் கண்டு
நின்றுநின்றுருகும் நெடுங்கண்கள் பனிமல்கவே.

7 மல்குநீர்க்கண்ணொடு மையலுற்ற மனத்தனளாய்
அல்லுநன்பகலும் நெடுமாலென்றழைத் தினிப்போய்
செல்வம்மல்கி யவன்கிடந்த திருக்கோளூர்க்கே
ஒல்கியொல்கி நடந்தெங்ஙனே புகுங்கொலொசிந்தே.

8 ஒசிந்த நுண்ணிடைமேல் கையைவைத்து நொந்து நொந்து
கசிந்த நெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச் செல்லுங்கொல்
ஒசிந்த வொண்மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே
கசிந்த நெஞ்சினளா யெம்மைநீத்த எம்காரிகையே.

9 காரியம்நல்லன களவைகாணிலென் கண்ணனுக்கென்று
ஈரியாயிருப் பாளிதெல்லாம் கிடக்கவினிப்போய்
சேரிபல்பழி தூவியிரைப்பத் திருக்கோளூர்க்கே
நேரிழைநடந்தா ளெம்மையொன்றும் நினைத்திலளே.

10 நினைக்கிலேன் தெய்வங்காள் நெடுங்கணிள மானினிப் போய்
அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனை
தினைத்தனையும் விடாளவன்சேர் திருக்கோளூர்க்கே
மனைக்குவான் பழியும்நினையாள் செல்லவைத்தனளே.

11 வைத்தமாநிதியாம் மதுசூதனையே யலற்றி
கொத்தலர்பொழில் சூழ்குருகூர்ச்சடகோபன் சொன்ன
பத்துநூற்று ளிப்பத்தவன்சேர் திருக்கோளூர்க்கே
சித்தம்வைத் துரைப்பார்திகழ் பொன்னுலகாள்வாரே.

## ஏழாம்பத்து

## 4வது ஆழியெழ

மோஹன ராகம்—அட-தாளம்

1 ஆழியெழச் சங்கும் வில்லுமெழ திசை
வாழியெழத் தண்டும் வாளுமெழ அண்டம்
மோழையெழ முடி பாதமெழ அப்பன்
ஊழியெழ வுலகுங் கொண்டவாறே.

2 ஆறுமலைக் கெதிர்ந்தோடு மொலிஅர
வூறுசுலாய் மலைதேய்க்கு மொலிகடல்
மாறுசுழன் றழைக்கின்ற வொலிஅப்பன்
சாறுபட வமுதங்கொண்ட நான்றே.

3 நான்றிலவேழ் மண்ணும்தானத்தவே பின்னும்
நான்றிலவேழ் மலைதானத்தவே பின்னும்
நான்றிலவேழ் கடல்தானத்தவே அப்பன்
ஊன்றி யிடந்தெயிற்றில் கொண்டநாளே.

4 நாளுமெழ நில நீருமெழ விண்ணும்
கோளுமெழ எரி காலுமெழ மலை
தாளுமெழச் சுடர் தானுமெழ அப்பன்
ஊளியெழ வுலக முண்டவூணே.

5 ஊணுடைமல்லர் ததர்ந்தவொலி மன்னர்
ஆணுடைச்சேனை நடுங்குமொலி விண்ணுள்
ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி அப்பன்
காணுடைப் பாரதம் கையறைபோழ்தே.

6 போழ்து மெலிந்தபுன் செக்கரில் வான்திசை
சூழுமெழுந் துதிரப்புனலா மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் அப்பன்
ஆழ்துயர் செய்தசுரரைக் கொல்லுமாறே.

7 மாறுநிரைத் திரைக்கும் சரங்கள்இன
நூறுபிணம் மலைபோல்புரள கடல்
ஆறுமடுத் துதிரப்புனலா அப்பன்
நீறுபட விலங்கை செற்றநேரே.

8 நேர்சரிந்தான் கொடிக்கோழி கொண்டான் பின்னும்
நேர்சரிந்தானெரியு மனலோன் பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்தி கண்டீர் அப்பன்
நேர்சரிவாணன் திண்டோள் கொண்டவன்றே.

9 அன்றுமண் நீரெரிகால் விண்மலைமுதல்
அன்றுசுட ரிரண்டுபிறவும் பின்னும்
அன்றுமழை யுயிர்தேவும் மற்றும்அப்பன்
அன்று முதலுலகம் செய்ததுமே.

10 மேய்நிரை கீழ்புக மாபுரளசுனை
வாய்நிறை நீர்பிளிறிச் சொரியஇன
ஆநிரை பாடியங்கே யொடுங்க அப்பன்
தீமழை காத்துக்குன்ற மெடுத்தானே.

11 குன்றமெடுத்த பிரானடி யாரொடும்
ஒன்றிநின்ற சடகோபனுரை செயல்
நன்றிபுனைந்த ஓராயிரத் துள்ளிவை
வென்றிதரும் பத்தும்மேவிக் கற்பார்க்கே.

## ஒன்பதாம்பத்து

### 1வது கொண்ட பெண்டிர்

செஞ்சுருட்டி ராகம்—ரூபகதாளம்

1 கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்றி யாதுமில்லை
எண்டிசையும் கீழும்மேலும் முற்றவுமுண்ட பிரான்
தொண்டரோமாயுய்ய லல்லாலில்லை கண்டீர்
துணையே.

2 துணையும்சார்வு மாகுவார்போல் சுற்றத்தவர் பிறரும்
அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல்
சுவைப்பர்
கணையொன்றாலேயேழ் மரமுமெய்த எங்கார்முகிலை
புணையென்றுய்யப் போகிலல்லாலில்லை கண்டீர்
பொருளே.

3 பொருள்கையுண்டாச் செல்லக்காணில் போற்றியென்
றேற்றெழுவர்
இருள்கொள் துன்பத்தின்மை காணில்என்னே
என்பாருமில்லை
மருள்கொள் செய்கையசுரர் மங்கவடமதுரைப்
பிறந்தாற்கு
அருள்கொளா ளாயுய்யலல்லாலில்லை கண்டீரணே.

4 அரணமாவரற்ற காலைக்கென்றென் றமைக்கப்பட்டார்
இரணங்கொண்ட தெப்பராவரின்றி யிட்டாலுமஃதே
வருணித்தென்னே வடமதுரைப் பிறந்தவன்
வண்புகழே
சரணென்றுய்யப் போகிலல்லாலில்லை கண்டீர்சதிரே.

5 சதிரமென்று தம்மைத்தாமே சம்மதித்தின்
மொழியார்
மதுரபோகம் துற்றவரேவைகி மற்றொன்றுறுவர்
அதிர்கொள் செய்கையசுரர் மங்கவடமதுரைப்
பிறந்தாற்கு
எதிர்கொளா ளாயுய்யலல்லாலில்லை கண்டீரின்பமே.

6 இல்லைகண்டீரின்பமந்தோ உள்ளது நினையாதே
தொல்லையார்க ளெத்தனைவர் தோன்றிக்கழிந்
தொழிந்தார்
மல்லைமூதூர் வடமதுரைப் பிறந்தவண்புகழே
சொல்லியுய்யப் போகிலல்லால் மற்றொன்றில்லை
சுருக்கே.

7 மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத்
தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டா சிந்திப்பேயமையும் கண்டீர்களந்தோ
குற்றமன்றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப்
பிறந்தான்
குற்றமில்சீர்கற் றுவைகல்வாழ்தல் கண்டீர்குணமே.

8 வாழ்தல்கண்டீர் குணமிதந்தோ மாயவனடிபரவி
போழ்துபோக வுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு
வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
வீழ்துணையாப் போமிதனில் யாதுமில்லை மிக்கதே.

9 யாதுமில்லை மிக்கதனிலென் றென்றதுகருதி
காதுசெய்வான் கூதைசெய்து கடைமுறை
வாழ்க்கையும்போம்
மாதுகிலின் கொடிக்கொள் மாடவடமதுரைப் பிறந்த
தாதுசேர்தோள் கண்ணனல்லாலில்லை கண்டீர்
சரணே.

10 கண்ணனல்லாலில்லை கண்டீர்சரணது நிற்கவந்து
மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்
திண்ணமாநும் முடைமை யுண்டேலவனடி
சேர்த்துய்மினோ
எண்ணவேண்டா நும்மதாதுமவனன்றி மற்றில்லையே.

11 ஆதுமில்லை மற்றவனிலென்றதுவே துணிந்து
தாதுசேர்தோள் கண்ணனைக் குருகூர்ச்சடகோபன்
சொன்ன
தீதிலாதவொண்டமிழ்களிவையாயிரத் துளிப்பத்தும்
ஓதவல்லபிராக்கள் நம்மை யாளுடையார்கள் பண்டே.

---

# ಪಟ್ಟಿನತ್ತಾರ್

ಇವರು ದಕ್ಷಿಣದೇಶದ ಕಾವೇರಿಪ್ಪೂಂ ಪಟ್ಟಣದಲ್ಲಿ ಧನವಣಿಕ ಜಾತಿಯಲ್ಲಿ ಹುಟ್ಟಿದವರು. ಇವರ ತಂದೆ ಶಿವನೇಶ ಚೆಟ್ಟಿಯಾರ್, ತಾಯಿ ಜ್ಞಾನತಲ್ಲೈಯಮ್ಮ. ಇವರ ಬಾಲ್ಯನಾಮ ಶ್ವೇತಾರಣ್ಯಾರ್. ಇವರ ಐದನೆಯ ವಯಸ್ಸಿನಲ್ಲೆ ತಂದೆ ತೀರಿಕೊಂಡರು. ಎಳವೆಯಲ್ಲೆ ಶಿವಭಕ್ತಿ ಶರಣಭಕ್ತಿಯಲ್ಲಿ ಮಗ್ನರಾಗಿದ್ದು, ತಮ್ಮ ಕುಲವೃತ್ತಿಯನ್ನೂ ಬಿಡದೆ ಅದರಿಂದ ಹಣಸಂಪಾದಿಸಿ, ಹದಿನಾರನೆಯ ವಯಸ್ಸಿನಲ್ಲಿ ಶಿವಕಲ್ಲೈ ಎಂಬ ಹೆಣ್ಣನ್ನು ಮದುವೆಯಾದರು. ಇವರು ತಮ್ಮ ಕುಲದಲ್ಲಿ ಒಳ್ಳೆಯ ಹೆಸರು ಗಳಿಸಿದ್ದರು. ಇವರನ್ನು ಮಕ್ಕಳಿಲ್ಲದ ಚಿಂತೆಮಾತ್ರ ಕೊರೆಯುತ್ತಿತ್ತು. ಹೀಗಿರಲು, ತಿರುವಡಮರುದೂರಿನಲ್ಲಿಯ ಹುಟ್ಟು ದರಿದ್ರರಾದ ಶಿವಶರ್ಮ ಸುಶೀಲೆ ಎಂಬ ದಂಪತಿಗಳಿಗೆ ಶಿವನು ಮಗನ ವೇಷದಲ್ಲಿ ಬಂದು ಕಾಣಿಸಿಕೊಂಡು ತನ್ನನ್ನು ಶ್ವೇತಾರಣ್ಯಾ ವಣಿಕನಿಗೆ ಮಾರಿ ಹಣಪಡೆದು ತಮ್ಮ ದಾರಿದ್ರ್ಯವನ್ನು ನೀಗಿಕೊಳ್ಳುವಂತೆ ಹೇಳಿ ದನು. ಈ ಸಂಚಿನಿಂದ ಆ ಮಗ ಶ್ವೇತಾರಣ್ಯಾರಲ್ಲಿ ಅವರ ಸ್ವಂತ ಮಗ ನಂತೆ ಬೆಳೆದನು. ಮಗ ತನ್ನ ಹದಿನಾರನೆಯ ವಯಸ್ಸಿನಲ್ಲಿ ಒಂದು ದಿನ ತಂದೆಯಿಲ್ಲದ ಸಮಯದಲ್ಲಿ ತಾಯ ಹತ್ತಿರ ತಾನು ಹೋಗಿಬರುವು ದಾಗಿಯೂ ತಾನು ಕೊಟ್ಟ ಪೆಟ್ಟಿಗೆಯನ್ನು ತಂದೆ ಬಂದೊಡನೆ ಕೊಡು ವಂತೆಯೂ ಹೇಳಿ ಹೊರಟುಹೋದನು. ತಂದೆ ಬಂದು ಸಮಾಚಾರ ತಿಳಿದು ಆ ಪೆಟ್ಟಿಗೆಯನ್ನು ತೆಗೆದುನೋಡಲು, ಅದರಲ್ಲಿ ಒಂದು ಕಣ್ಣಿಲ್ಲದ ಸೂಜಿಯನ್ನೂ ಓಲೆಗರಿಯನ್ನೂ ಕಂಡನು. ಆ ಓಲೆಗರಿಯಲ್ಲಿ 'ಕಾದಱ್ಱ ಊಶಿಯುಂ ವಾರಾದು ಕಾಣುಂ ಕಡ್ಶೈವಳಿಕ್ಕೇ' (ಕಣ್ಣಿಲ್ಲದ ಸೂಜಿಯೂ ಬಾರದು ಕಣಾ ಕಡೆಹೊತ್ತಿಗೆ) ಎಂದು ಬರೆದಿದ್ದುದನ್ನ ಓದಿಕೊಂಡು, ಅರ್ಥಗ್ರಹಿಸಿ, ಸಂನ್ಯಾಸ ಧರಿಸಿದರು. ಇದನ್ನು ತಿಳಿದು ಆ ನಾಡಿನ ಅರಸನಾದ ಭದ್ರಗಿರಿಯೂ ಸಂನ್ಯಾಸ ತಳೆದು ಇವರ ಶಿಷ್ಯನಾದನು. ಇವರು ಪಟ್ಟಿನತ್ತಡಿ ಎಂಬ ಹೆಸರಿನಿಂದ ವ್ಯವಹೃತರಾಗಿ ಹಲವು ಕ್ಷೇತ್ರಗಳನ್ನು ಸಂಚರಿಸಿದರು. ಇವರು ಸಂನ್ಯಾಸಿಯಾಗಿದ್ದರೂ ತಮ್ಮ ತಾಯಿ ಸತ್ತಾಗ ತಾವೇ ಆಕೆಯ ದಹನಕ್ರಿಯೆಯನ್ನು ನಡಸಿದರು. ಇವರು ತಿರುವಱ್ಱಿಯೂರಿನಲ್ಲಿ ಶಿವಲಿಂಗರೂಪವಾದರು. ಇವರ ಸಮಾಧಿ ಈಗಲೂ ಅಲ್ಲಿ ಇದೆ. ಇವರ ಕೃತಿಗಳು: ಕಚ್ಚಿತ್ತಿರುವಂದಾದಿ, ತಿರುಏಕಂಬಮಾಲೈ, ಕಚ್ಚಿತ್ತಿರುವಹವಲ್, ತಿರುವಱ್ಱಿಯೂರ್ ಒರುಪಾ ಒರುಪಗದು, ಮುದಲ್ವನ್ ಮುಱೈಯೀಡು, ಅರುಟ್ಪುಲಂಬಲ್.

